திடீரென வரும் விருந்தாளிகளுக்கு...



...இணையற்ற விருந்து

மிட்சலின்

# கிஸான் பானங்கள் ❋

ஆரஞ்சு ஸ்க்வாஷ் - லெமன் ஸ்க்வாஷ் - லெமன் பார்லி - ஆரஞ்சு பார்லி - மாம்பழ ஸ்க்வாஷ் கிரேப் புரூட் ஸ்க்வாஷ் - லைம்ஜூஸ் கார்டியல்.

இவ்வினிய பழரஸ பானங்களை என்ன விருப்பமுடன் விருந்தாளிகள் ரஸிக்கின்றனர் என்பதை நீங்களே பார்க்கலாம். வருஷம் முழுவதும் உபயோகிக்கத் தகுந்த உன்னதமான பானங்கள் இவை. உங்கள் குடும்பத்திற்கும் உகந்ததொரு விருந்து. பிரதி ஞாயிற்றுக் கிழமையும் இவ்வினிய பானங்களை அருந்தத் தவறாதீர்கள்.

என்றும் வீட்டிலொரு பாட்டில் இருக்கட்டும்




❋ பழம், காய்கறி பொருள்கள், தயாரிப்பில், இந்திய சர்க்காரால் நடத்தப்பட்ட இரண்டாவது அகில இந்தியப் போட்டியில் கிஸான் ஸ்க்வாஷ்கள் முதல் மற்றும் இரண்டாவது பரிசுகள் பெற்றன.

K.P. 5438a

கிஸான் பிராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், பெங்களூர்.

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி" யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18
இதழ் 50

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரி௵
ஆனி௴ 28௳

# கைத்தறியும் சர்க்காரும்

மத்திய சர்க்காருக்கு ஒன்றும் தோன்றவில்லையென்றால் கைத்தறி நெசவாளர் தலையில் கை வைப்பது என்பது வழக்கமாகி விட்டது. இம்மாதிரி பல தடவைகள் செய்து, தென்னாட்டிலிருந்து பலத்த எதிர்ப்பு வந்தவுடன் கைவிட்டிருக்கிறது. இப்பொழுதும் அதே முறையைக் கடைப்பிடிக்கப் பார்க்கிறது போலும் !

சென்ற வருஷம் நாட்டில் ஏராளமான கைத்தறித் துணிகள் வியாபாரமாகாமல் தேங்கி விட்டன. வெளிநாட்டு ஏற்றுமதியும் வெகுவாகக் குறைந்தது : உள்நாட்டு விற்பனையும் பெரிதும் குறைந்து ஒரு நெருக்கடியான நிலை ஏற்பட்டது. தேங்கிக் கிடக்கும் கைத்தறித் துணிகளை வெளியேற்றுவதற்காக விசேஷ கழிவாக (ரிபேட்) ரூபாய்க்கு 6 புதுக்காசு கொடுத்து வந்தது. அதை 4 காசாகக் குறைத்துவிட உத்தேசித்திருப்பதாக வர்த்தக மந்திரி ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி சமீபத்தில் சொன்னார்.

இதைக் கண்டித்து, தமிழ் நாட்டிலுள்ள எல்லாப் பத்திரிகைகளும் எழுதியுள்ளன.

கைத்தறி நெசவாளர்க்கு வழங்கப்படும் இந்த உதவி மில் துணிகளின் மீது விதிக்கப்படும் 'செஸ்' வரியிலிருந்து கொடுக்கப்படுகிறது. மில் துணிக்குச் செஸ் வரி போட்டதிலிருந்து, மில் நூலின் விலை ஏறிவிட்டது. நூல் விலை ஏறியதால் கைத்தறித் துணியின் விலையும் உயர்ந்து விட்டது. ஏற்கனவேயே மில் துணியை விடக் கைத்தறித் துணிக்கு அதிக விலை வைத்து விற்க வேண்டியிருக்கிறது. அதனால் மில் துணியுடன் போட்டி போட முடியவில்லை என்றுதான் கைத்தறியாளர்கள் கஷ்டப்பட்டார்கள். கைத்தறிக்கு ஏற்பட்ட கஷ்டங்களுக்குக் காரணமே இதுதான். கைத்தறித் துணிக்கு உதவுவதாகச் சொல்லிக் கொண்டு போட்ட 'செஸ்' வரி, கைத்தறித் துணியின் விலையை உயர்த்தினால் யாருக்கு என்ன லாபம் ?

இருந்தாலும் கைத்தறித் துணி மீது அளித்து வந்த 'ரிபேட்' சலுகை ஓரளவு கைத்தறி நெசவாளர்க்கு உதவியிருக்கிறது. துணித் தேக்கத்தைக் குறைத்திருக்கிறது.

ஆனால் ஒரு தொழில் என்றிருந்தால் தானாகச் சுதந்திரமாக இயங்க வேண்டும். சர்க்கார் முட்டுக் கொடுத்து நிறுத்தினால்தான் அது நிற்கும் என்றால் அது நல்லதற்கு அடையாளமல்ல. ஆகவே, நாம் கைத்தறித் துணிக்குச் சர்க்கார் சலுகை அளிப்பதை விரும்பவில்லை. இயற்கைக்கு மாறான இந்த நிலை எத்தனை நாட்கள் நீடிக்க முடியும் ?

கைத்தறித் துணி தன் சொந்த பலத்தில் வாழக்கூடிய சூழ்நிலையைச் சர்க்கார் ஏற்படுத்தித் தரவேண்டும். அதை விட்டு இந்தச் செயற்கை முறைகளைக் கையாண்டால், உண்மையில் இந்த வசதி யாருக்குப் போய்ச் சேர வேண்டுமோ, அவர்களுக்குப் போகாமல் நடுவில் எங்கேயோ யாருக்கோ போய் விடும்.

கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்துள்ள கைத்தறியாளர்களுக்குத்தான் இந்த வசதி சர்க்காரிடமிருந்து கிடைத்து வருகிறது. கூட்டுறவுச் சங்கங்களில் சேராமல் எத்தனையோ கைத்தறியாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த உதவி எட்டுவதில்லை.

இந்த ரிபேட் சலுகையினால் பயன் அடைபவர்கள் கைத்தறிச் சங்கத்தில் சேர்ந்துள்ளவர்கள்தான். என்றாலும் அவர்களாவது பிழைத்துப் போகக் கூடிய ஒரு சலுகையை எடுத்து விட்டு, கஷ்டப்படுபவர்களின் தொகையைப் பெரிதாக்குவானேன் ?

ஆகவே, கைத்தறி நெசவாளர்கள் சுதந்திரமாக வாழ வழி வகை ஏற்படும் வரையில் இந்த ரிபேட் சலுகையைச் சர்க்கார் குறைப்பதைக் கனவிலும் கருதக் கூடாது.

நம் நாட்டில் கைத்தறித் துணிகளைப் பெருவாரியாக வாங்கி உதவுபவர்கள் கிராம மக்கள். அவர்கள் வாங்கவில்லையென்றால் அவர்கள் நிலை நாளுக்கு நாள் ஹீனமாகி வருகிறது என்று பொருள். அவர்கள் வாங்கும் சக்தியைப் பெருக்கினாலன்றிக் கைத்தறித் துணிக்கு விமோசனமில்லை.

# சுதந்திரக் கட்சியின் கொள்கைகள்

சுதந்திரக் கட்சியின் கொள்கைகள் என்ன, இலட்சியங்கள் என்ன என்று இன்னும் சிலர் கேட்டு வருகிறார்கள். அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெளிவாகத் தெரிவிக்கும் பொருட்டு, சுதந்திரக் கட்சியின் முக்கியஸ்தர்கள் ராஜாஜியின் தலைமையில் ஜூன் 4-ம் தேதி சென்னையில் கூடி, நீண்ட ஆராய்ச்சிக்குப் பின் வெளியிட்ட கொள்கை விளக்க அறிக்கையை இங்கே வெளியிடுகிறோம்.

1. சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளை அகற்றவும், மக்களைச் சுபிட்ச வாழ்வு வாழச் செய்யவும் சோஷலிஸ முறை என்று சொல்லிக் கொண்டு கடைப்பிடிக்கும் முறைகளைத் தவிர வேறு முறைகள் மூலமாகவும் மேற்கூறிய லட்சியங்களை நிச்சயமாக அடையலாம் என்று சுதந்திரக் கட்சியினர் நம்புகின்றனர்.

2. சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளை நீக்கிச் சீர்திருத்துவதும், சமுதாய நலனை வளர்ப்பதற்கான காரியங்களில் மக்களை ஈடுபடுத்துவதும், பலாத்கார முறையினாலோ, சர்க்கார் சட்ட திட்டங்களினாலோ கூடாது என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. ஏனெனில் இந்தப் பலாத்காரத்துடன், சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், பரஸ்பர கடமைகளைத் தூக்கி எறிதல், அநீதி இழைத்தல் ஆகிய தீங்குகளும் கூடவே வந்து சேர்கின்றன. அதனால் காந்திமகான் காண்பித்த தர்ம கர்த்தா கொள்கையைப் பரப்புவதன் மூலமே சமுதாய சீர்திருத்தம் நடைபெற வேண்டும் என்று சுதந்திரக் கட்சி உறுதியாக நம்புகிறது.

3. நமது பண்பாட்டின் நல்ல அம்சங்களைக் காப்பாற்ற எல்லாவகை முயற்சிகளையும் எடுக்க வேண்டும். இன்று, மக்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்த வேண்டும் என்று சொல்லிக் கொண்டு எடுத்த முயற்சிகள் யாவும் மக்களை லோகாயதவாதிகளாக்குவதிலேயே முடிந்திருக்கின்றன. இந்த நிலையை மாற்றி, தார்மிகப் பண்பை நிலைநாட்டுவது முக்கியம் என்று சுதந்திரக் கட்சியினர் கருதுகின்றனர்.

4. செல்வம்படைத்தவர்கள், சமுதாயத்துக்குரிய சொத்தைப் பாதுகாக்கும் தர்மகர்த்தாக்களாகத் தங்களைக் கருதி, சமுதாயத்துக்குரிய கடமைகளை ஆற்றவேண்டும். இதை நேர் முகமாகவும், மறைமுகமாகவும் போதிப்பதே சர்க்காருடைய எல்லாக் கல்விப் பணிகளின் லட்சியமாக அமைய வேண்டும். இந்த தர்மத்தின் அடிப்படையின்றி, சட்டங்கள் இயற்றி சோஷலிஸ சமுதாயத்தைப் பலாத்கார முறையில் அமைக்கப் பார்த்தால், சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், பொருளுற்பத்தியில் ஈடுபட்டிருப்போரின் உற்சாகத்தை அழித்தல் முதலிய கொடுமைகளில் கொண்டு விடும். வாழ்க்கையின் எல்லாத் துறைகளில் இருப்பவர்களும் சர்க்காரையும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களையும் எந்தச் சிறு காரியத்துக்கும் எதிர்பார்க்க வேண்டியதாகும். ஆகவே, இதை எதிர்க்கிறது சுதந்திரக் கட்சி.

5. சர்க்காரின் கொள்கைகள் காரணமாகவும், 'நாளை இதைச் செய்யப் போகிறோம், அதைச் செய்யப் போகிறோம்' என்று சர்க்கார் சொல்வதின் காரணமாகவும், நிலத்திலும் தொழில்களிலும் ஈடுபட்டிருப்பவர்கள் அனைவருடைய உள்ளங்களிலும் நாளை என்ன நேருமோ என்ற பீதி உண்டாகியிருக்கிறது. நிலத்திலும், தொழிலிலும் உற்சாகமே இல்லாமல் பொருள் உற்பத்திக்குப் பாதகமாக இருக்கும் இந்த நிச்சயமற்ற கொள்கைகளைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது.

6. உணவு உற்பத்தியைப் பெருக்குவதுதான் இன்று உடனடியாகச் செய்ய வேண்டிய முக்கியமான வேலை என்பதைச் சுதந்திரக் கட்சி உணர்கிறது. இந்த இலட்சியத்தை அடைய இன்று நடைபெற்று வரும் தனிநபர் விவசாய முறையைத் தொடர்ந்து நடத்துவதுதான் பயனுள்ளதாக இருக்கும். நிலத்தில் அதிக விளைவை எடுக்க வேண்டும் என்ற ஆசையும் உற்சாகமும், அக்கறையும் கொண்ட நில உரிமையுள்ள சுதந்திர விவசாயிகளால்தான் இந்தப் பணியைச் சாதிக்க முடியும் என்று சுதந்திரக் கட்சி நம்புகிறது.

7. தற்போது விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கிடையே நிலவும் நல்லுறவைக் குலைக்காமல் அவர்களுடைய வசதிகளையும் சூழ்நிலையையும் மனப்பான்மையையும் தக்கபடி மாற்றியமைத்து உற்சாகமளிப்பதன் மூலம் விவசாய அபிவிருத்தி உண்டாக்க வேண்டுமெனச் சுதந்திரக் கட்சியினர் நம்புகின்றனர்.

8. நிலச் சொந்தக்காரரின் நில உரிமையிலோ, நிர்வாகத்திலோ, சாகுபடியிலோ தலையிடாமல், உரம், கருவிகள், விதை, கடன் வசதி முதலிய உதவிகள் அளிக்கும் திட்டத்தை இன்னும் தீவிரமாக்க வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது.

9. விவசாயத்துக்கு எல்லாவித உதவிகளும் அளிக்க வேண்டும். அக்கறை இல்லாத பலரை நிலத்துக்கு உரிமையாளரைப் போலாக்கி விவசாயத்தை நடத்தினால், விவசாயிகளின் உற்சாகத்தை அழித்துவிடும். நிலத்தின் விளைவைக் குறைக்கும்; முடிவில் பலாத்காரக் கூட்டுப்பண்ணை முறைக்குக் கொண்டு வந்து விட்டு, சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் மேற்பார்வையில் விவசாயம் வந்து சேரும். அதனால் ஆபத்து விளையும் என்று எச்சரிக்கிறது.

10. உணவுப் பொருளுக்குரிய நியாயமான நல்ல விலை விவசாயிக்குக் கிடைக்கும்படி செய்து, விவசாயியின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும்.

11. தொழில் துறையில் அதிக உற்பத்திக்கும், விரிவுக்கும் போட்டியே தகுந்த தூண்டுகோல். நியாயமற்ற அதிகவிலை,




கொள்ளை லாபம், வரம்புமீறிய லாபப் பங்கு அளித்தல் முதலிய தீங்குகளைத் தொழில் துறைப் போட்டி கட்டுப்படுத்த வில்லையென்றால்தான் சர்க்கார் பாதுகாப்புகள் அளிக்க முன்வர வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது.

12. பெருந் தொழில்களை மட்டும் சர்க்கார் எடுத்து நடத்த வேண்டும், அத்துடன் நிற்க வேண்டும். தொழிலதிபர்கள் முதல் போட்டு ஆரம்பிக்கக் கூசும் ரயில்வே போன்ற பெருந் தொழில்களை மட்டும்தான் சர்க்கார் நடத்த முன்வர வேண்டும்.

13. கிராம, நகர மக்களின் வாழ்க்கையைப் பாதிக்காத வகையில் வரித் திட்டங்கள் அமைய வேண்டும். சர்க்கார் நிர்வாகத்துக்கும், தேச புனருத்தாரணத்துக்கும், சமூகப் பணிகளுக்கும் வரி விதித்துத்தான் பணம் திரட்ட வேண்டும் என்றாலும், தனி நபர்களிடையே மூலதனம் சேராத வகையிலும், தொழில்களில் முதலீடு செய்ய முடியாத வகையிலும் கடுமையாக வரிகளை விதிக்கக்கூடாது என்று இந்தக் கட்சி நம்புகிறது.

14. அவசரப்பட்டு ஒருதலைப் பட்சமான தொழில் வளர்ச்சிக்கு வழி செய்வதற்காகக் கடும் வரிகளை விதிப்பதையும், நிதி நிலைமையைச் சமாளிக்க நோட்டுக்கள் அச்சடிப்பதையும், நமக்குத் திருப்பித் தரக்கூடிய பொருளாதார சக்தியிருக்கிறதா என்பதைக் கூட யோசியாமல் கண்மூடித்தனமாக வெளி நாட்டுக் கடன்களை வாங்குவதையும் இந்தக் கட்சி எதிர்க்கிறது.

15. உடனடியாக வரம்பு மீறிய பணவீக்கத்தை ஏற்படுத்தும் கொள்கைகளை இக் கட்சி எதிர்க்கிறது.

16. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சொத்துரிமை, வியாபார சுதந்திரம், தொழில் சுதந்திரம், பொது நலன்களுக்காக எடுத்துக் கொள்ளப்படும் சொத்துக்களுக்கு நியாயமான நஷ்ட ஈடு கோரும் உரிமை— இவற்றை மீண்டும் நிலைநிறுத்த இந்தக் கட்சி உறுதி கொண்டிருக்கிறது.

17. அதிகார வர்க்க விஸ்தரிப்பைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது. தனி நபர்கள் சுதந்திரமாகவும் திறமையோடும் செய்யும் பணிகளையெல்லாம் சர்க்கார் நிர்வாகமாக்கி விடுவதனால் ஒரு பயனும் விளையாது. விஸ்தரிக்கப்படும் அதிகார வர்க்கம் தேசசெல்வத்தை விழுங்குகிறது என்று இக்கட்சி உறுதியாக நம்புகிறது.

18. மத்தியசர்க்காரின் கட்டுப்பாடின்றித் தொழில்கள் எல்லா ராஜ்யங்களிலும் ஏற்பட வழிவகையும் வசதிகளும் செய்து, சமுதாய நலனுக்கு விரோதமாக எந்தத் தொழில் ஸ்தாபனமாகிலும் இயங்கத் தொடங்கினால் அதைக் கண்டிக்கவும், தண்டிக்கவும் செய்தாலே சர்க்கார் மக்களுக்கு நல்ல சேவை செய்ததாக ஆகும் என்று இந்தக் கட்சி கருதுகிறது. அத்தகைய சர்க்காரை ஏற்படுத்துவதே இந்தக் கட்சியின் லட்சியமாகும்.

19. நமது ஜனநாயக அரசியலைக் காப்பாற்ற இந்த விரிவான கொள்கைகளின் அடிப்படையில் இந்த எதிர்க் கட்சி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

# ஒரு பானைக்கு இரண்டு சோறு பதம்

இரண்டாவது திட்ட காலத்தில் சென்னை சர்க்கார் முப்பது கூட்டுப் பண்ணைகள் ஏற்படுத்த வேண்டும் என்று திட்டமாம்! நமது சென்னை சர்க்காரோ தீவிர முற்போக்காளர்கள் அல்லவா? பிரதமமந்திரியின் பரமானந்த சிஷ்யர்கள் அல்லவா? முப்பது என்ன முப்பத்தேழு பண்ணைகள், இரண்டாவது திட்ட காலம் முடிய இரண்டாண்டுகள் இருப்பதற்கு முன்பே ஏற்படுத்தி விட்டோம் என்று பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள்.

இதில் இரு பண்ணைகளைப் பற்றி ருசிகரமான விவரம் வந்திருக்கிறது.

தென் ஆற்காடு ஜில்லாவில் ஒரு கிராமத்தில் 29 விவசாயிகளின் 106 ஏக்கராவுள்ள நிலத்தைக் கூட்டுப் பண்ணையாக்கியிருக்கிறார்கள். இந்த நிலத்தில் சாகுபடி செய்ய அந்தக் கூட்டுறவு சங்கத்துக்குக் கடனாக 32,125 ரூபாயும், மான்யமாக 15,375 ரூபாயும் ஆகமொத்தம் ரூ 47,500 கொடுக்கத் திட்டமிட்டிருக்கிறது!

இது ஒரு விவசாயிக்குக் கடனாக ரூ. 1000மும், மான்யமாக ரூ. 500ம் கணக்காகும்! ஒரு ஏக்கருக்கு ரூ. 500 செலவழிக்க வசதி செய்யப்பட்டதாகும்.

இவ்வளவு அதிகப்படி செலவு செய்யப்பட்டதாக இதுவரை எங்கேயாவது கேட்டிருக்கிறோமா?

இன்னொரு விவரத்தைப் பாருங்கள்! கோயமுத்தூர் ஜில்லாவில் காளப்ப நாயக்கன் பாளையம் என்ற ஊரில் 35 விவசாயிகளின் 96·67 ஏக்கர் நிலத்தைக் கொண்ட ஒரு கூட்டுப் பண்ணை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு 1958 லேயே 46,870 ரூபாய் வட்டியில்லாத கடன் கொடுக்கப் பட்டிருக்கிறது. ரூ. 22,870 மான்யமாக அளிக்கப்பட்டிருக்கிறது.

இது மானம் பார்த்த பூமி, ஊற்றுப் பாசனம்தான். விளைந்தால்தான் உண்டு. இந்த இடத்தில் நிலத்தின் மதிப்பு ஏக்கருக்கு ரூ. 100 கூட இருக்காது என்கிறார்கள்.

இவ்வளவு மட்டமான நிலத்தில் ஏக்கருக்கு 700 ரூபாய் விதம் சர்க்கார் செலவு செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள்! விவசாயம் பற்றித் தெரிந்தவர்கள் இப்படிச் செலவு செய்வார்களா?

கடனாகத்தானே கொடுத்திருக்கிறார்கள், திருப்பிப் பெற்றுக் கொள்ளமாட்டார்களா என்று சிலர் கேட்கலாம்.

சர்க்கார் கடன் கொடுத்தால் அதில் பெரும் பகுதி திரும்பி வருவதில்லை. கிணறுகள் எடுக்கச் சர்க்கார் கொடுத்த கடன் பெரும் பகுதி திரும்பி வராமற் போனது நாடறிந்த விஷயம்!

இப்படிப் பொதுப்பணத்தைக் கண்ணை மூடிக்கொண்டு வாரி இறைத்து உணவுப் பண்டங்களை விளைவிப்பதற்குப் பதில் வோட்டுக்களைச் சாகுபடி செய்யவே சர்க்கார் கூட்டுறவுப் பண்ணைகளைக் கொண்டு வருகிறார்கள் என்று இப்போது நிதர்சனமாகத் தெரிந்து விட்டதல்லவா?

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்கள்! இரண்டு சோறு எடுத்துக் காட்டி விட்டோம். வருகிற கூட்டுறவுப் பண்ணைகளில் தண்ணீருக்குப் பதில் நாஸிக் அச்சகத்தில் அச்சடிக்கப்பட்ட நோட்டுக்களையே பாய்ச்சிக் கூத்தடிக்கப் போகிறார்கள்!

உணவு உற்பத்தி பெரிதும் குறையும்.

---

[இந்த வாரம் வெளிவரும் இதழுடன் ஆங்கில அரசியல் வாரப் பத்திரிகை 'ஸ்வராஜ்யா' நான்காவது ஆண்டைத் தொடங்குகிறது. இப்பத்திரிகையின் சிறப்புப் பணியைப் பற்றியும், அதன் ஆசிரியர் திரு காஸா சுப்பாராவ் அவர்களின் எழுத்து வன்மை பற்றியும் எல்லோருக்கும் தெரியும். நான்காவது ஆண்டு ஆரம்பத்தில் திரு காஸா சுப்பாராவ் அவர்களைப் பற்றி ராஜாஜி ஸ்வராஜ்யாவில் எழுதியுள்ள சிறப்புரையை மொழிபெயர்த்துக் கீழே கொடுத்திருக்கிறோம்.

ஆசிரியர்]

# காஸா

இந்த அபூர்வ மனிதரைப் பற்றி என்ன சொல்லுவது? குணத்திலாகட்டும், சாமர்த்தியத்திலாகட்டும், எப்படிப் பார்த்த போதிலும் இவர் ஒரு அபூர்வ மனிதரே. சுதந்திர பாரதத்தின் பொது வாழ்வில் எந்தப் பதவியையும் சிறப்புடன் அவர் வகிக்கத் தகுந்தவர். உயர்ந்த அந்தஸ்திலுள்ள கௌரவப் பதவிகள் எதையும் கண்யத்துடன் அவர் வகித்திருக்கக்கூடும். ஆனால் வாழ்க்கை முழுதும் போராட வேண்டிய பாதையைத்தான் அவர் தமக்கென்று தேர்ந்தெடுத்துக் கொண்டார். தேசத்துக்காகத் தியாகம் செய்ய முன்வரவேண்டும் என்ற தேசீய இயக்கத்தின் அறைகூவலைக் கேட்டு முதன் முதலில் தியாகத் தீயில் குதித்த போது எப்படிக் கஷ்டத்தை மேற்கொண்டாரோ, அதே போல் இன்றும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார். போலீஸ் இலாக்காவின் அந்தக் காலத்திய சரித்திரத்திலேயே மிகக் கொடூரமான செயல் என்று பெயர் போன குண்டாந்தடிப் பிரயோகத்துக்கு இலக்காகி ஆஸ்பத்திரிக்கு அவர் எடுத்துச் செல்லப்பட்ட போது எப்படிப் போராடினாரோ, அதே போல் இன்றும் போராடுகிறார். அவரும் அவருடைய வாரப் பத்திரிகையும் ஒரு ஜீவன். வேறுபடுத்த முடியாதவை.

இந்த வாரத்திய இதழுடன் ஸ்வராஜ்யா பத்திரிகை ஒரு புதிய வருஷத்தை ஆரம்பிக்கிறது. இது ஸ்வராஜ்யாவின் நான்காவது ஆண்டு. நிர்வாகத் தொல்லைகளிலிருந்து திரு காஸா அவர்களுக்கு ஓய்வு கிடைத்திருக்கிறது. இது பெருத்த நன்மை. அவருடைய சக்தி முழுவதையும் இனி அவர் தமது பத்திரிகைக்குச் செலவிட முடியும். இப்போது நம் நாட்டை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் பல. அவற்றில் முக்கியமானது தனி மனிதனின் சுதந்திரத்தைச் சர்க்காரின் ஆதிபத்தியத்துக்குப் பலியிடாமல் பொதுநலத்தை எவ்வாறு அடைவது; மக்கள் செலுத்தும் வரிப் பணத்துக்கு உகந்த பிரதிபலனை உச்சவரம்பு அளவுக்கு எவ்வாறு பெறுவது; சுகவாழ்க்கைக்கான வசதிகளைப் பெறுவதற்கு முயற்சி செய்கையில் மக்களின் ஆன்மீய சம்பத்தை எப்படி இழக்காமல் இருப்பது, ஆகியவைகளே. இந்தப் பத்திரிகை இந்த லட்சியங்கள் எல்லாவற்றுக்காகவும் உழைத்துப் பாடுபடும். என்னுடைய மனப்பூர்வமான வாழ்த்துக்களுடனும், பிரார்த்தனைகளுடனும் இந்தப் பரந்த பாரத நாட்டின் பல பாகங்களிலுள்ள நேர்மை நிறைந்த எல்லா நல்ல மனிதர்களுடைய ஆசிகளுடனும், 'ஸ்வராஜ்யா' தனது தெய்வத் திருப்பணியை அதனுடைய நான்காவது ஆண்டில் இப்போது ஆரம்பிக்கிறது.

திரு காஸா சுப்பாராவ்

அச்சமற்ற தீரத்துக்கும் தருமநியாயத்துக்கும் திரு காஸா ஒரு சின்னமாக விளங்குகிறார். அவருடைய பத்திரிகை தேசீய தனங்களில் மிகவும் சிறந்ததென விளங்கும் ஒரு ஸ்தாபனம். தமது உணர்ச்சிகளை அவர் எழுத்தில் வடிக்கும் போதெல்லாம், ஆண்டவனை இருதயத்தில் வைத்தே அவர் எழுதுகிறார். அதனால் தான் அவருடைய எழுத்துக்களுக்கு மதிப்பு.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி



சேலம், திரு கே. எஸ். ராஜூ நாயுடு அவர்களின் குமாரர் செல்வன் ஆர். நாகமாணிக்கத்துக்கும், திரு எம். மன்னூர் அவர்களின் குமாரத்தி செல்வி சுசீலாவுக்கும் 19-6-59ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்திற்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும், நகரப் பிரமுகர்களும் வருகை தந்து மணமக்களை ஆசிர்வதித்தனர்.

**வாழ்க, சுசீலா – நாகமாணிக்கம்**

# துறைமுகத்தில் நெருக்கடி

கொழும்பு, ஜூன் 30உ

சென்ற சில தினங்களாகக் கொழும்புத் துறைமுகத்தில் மிகப் பெரிய வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதனால் நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகம் ஸ்தம்பித்துப் போய் நிற்கிறது. கொழும்புக்கு வந்து பல தினங்கள் வரையில் காத்துக் கிடக்க நேரிட்ட அநேக கப்பல்கள் சாமான்களை இறக்காமலும் சாமான்களை ஏற்றிக் கொள்ளாமலும் திரும்பிப் போய் விட்டன. துறைமுகத்தில் கப்பல்களில் இறக்க முடியாமல் கிடந்த பல ஆயிரம் டன் நிறையுள்ள உருளைக்கிழங்கு அழுகிப் போய் நாற்றமெடுத்துக் கடலில் அவைகளை வீச வேண்டியதாகிவிட்டது. அரிசி, சீனி, பருப்பு முதலான அத்தியாவசிய உணவுப் பொருள்களுடன் அநேகம் கப்பல்கள் துறைமுகத்தில் நிற்கின்றன. அரசாங்கம் ராணுவத்தையும் சிறைக் கைதிகளையும் ஏவி ஓரளவு சாமான்களை இறக்குமதி செய்து வருகிறது. இந்த வேலைநிறுத்தம் பண்டாரநாயகா அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்காகவே நடைபெறுகிற தென்பதைப் பகிரங்கமாகவே பேசிக் கொள்கிறார்கள்.

துறைமுகத் தொழிலாளர் தங்களுக்கு மாதச் சம்பளம் வேண்டுமென்று கோருகிறார்கள். மாதச் சம்பளம் கொடுப்பதாயின் மாதந்தோறும் குறிப்பிட்ட அளவு வேலை செய்ய வேண்டுமென நிர்ணயிக்க வேண்டுமென்றும் அந்த அடிப்படையில் மாதச் சம்பளம் கொடுக்க ஆட்சேபணையில்லையென்றும் அரசாங்கம் கூறுகிறது. ஆனால் மழை முதலான பல காரணங்களையும் முன்னிட்டு, குறிப்பிட்ட அளவு வேலையைச் செய்ய முடியாமற் போய்விடலாம் என்றும் வேலையின் அடிப்படையில்லாத சம்பளம் நிர்ணயிக்கப்படுவதைத் தாங்கள் ஏற்க முடியாதென்றும் தொழிலாளர் யூனியன்கள் கூறுகின்றன. இது தான் மூலகாரணம். இதை எழுதும் வரை நிலைமை மிக மிக நெருக்கடியாகவே இருந்து வருகிறது. வேலைநிறுத்தத்தில் சமரசத்துக்கான சாத்தியக் கூறுகளைக் காணோம்.

## இலங்கைக்கு இந்திய பருத்தி நூல்

இலங்கைக்கு இந்திய பருத்தி நூலை மேலும் அதிகமாக ஏற்றுமதி செய்யும் சாத்தியக் கூறுகளை ஆராய்வதற்காகப் பிரபல நூல் ஆலைத்தொழில் அதிபரும் சேலம் ராஜேந்திரா மில் ஜெனரல் மானேஜருமான திரு எஸ். சுந்தரம் இங்கு விஜயம் செய்து இலங்கை முழுதும் விரிவாகச் சுற்றுப் பிரயாணம் செய்தார். இலங்கையிலுள்ள பல நெசவாலைகளையும் அவர் பார்வையிட்டுக் கைத்தொழில் வர்த்தக இலாகா அதிகாரிகள் பலருடனும் பேச்சு வார்த்தைகள் நடத்தினார். தற்சமயம் இலங்கை தனது பருத்தி நூல் தேவையில் 100 க்கு 90 சதவிகிதத்தை வெளி நாடுகளிலிருந்தே தருவித்துக் கொள்ளுகிறது. இதில் சுமார் 62 சதவிகித நூல் இந்தியாவிலிருந்து வருகிறது. அரசாங்கத்தின் பத்துவருட அபிவிருத்தித் திட்டம் அமுல் நடத்தப்படும் பொழுது இலங்கையின் பருத்தி நூல் தேவை பன்மடங்கு அதிகரிப்பதாயிருக்கும். மற்ற நாடுகளைக் காட்டிலும் இந்தியாவிடமிருந்து நூலைத் தருவித்துக் கொள்ளுவதுதான் இலங்கைக்கு மலிவாகவும் நன்மையாகவும் இருக்குமென்பதைத் திரு சுந்தரம் தாம் சந்தித்துப் பேசிய பலரிடமும் பலமாக வற்புறுத்தினார்.

## சென்னையின் புதிய கலெக்டர்

இங்குள்ள இந்திய உ. ஹைகமிஷனில் முதலாவது காரியதரிசியாயிருக்கும் திரு எஸ். ஏ. வெங்கடராமன் என்பவர் சென்னை நகர கலெக்டராக மாற்றப்பட்டிருக்கிறார். ஜூலை மாத இரண்டாவது வாரம் அவர் இங்கிருந்து இந்தியாவுக்குப் பயணமாகிறார். சுமார் ஒன்றரை வருடங்களுக்கு முன்னால் தற்சமயம் சென்னையில்

---

செம்பியன் மாதேவியில் உள்ள ஸ்ரீ கயிலாச நாதர் கோவில் சோழப் பேரரசி செம்பியன் மாதேவியாரால் கட்டப் பெற்றது. சமீபத்தில் நிகழ்ந்த இக்கோவிலின் கும்பாபிஷேக விழாவுக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழக துணை வேந்தர் திரு டி. எம். நாராயணசாமிப்பிள்ளை தலைமை வகித்தார்கள். ரிஜிஸ்டிரார் திரு மீனாட்சி சுந்தரம் சொற்பொழிவாற்றினார்கள். நூலாசிரியர் திரு டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தப் பட்டது.





கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்க ஆதரவில் குருதேவ் ரவீந்திர ஜயந்தி சமீபத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஸ்ரீ டி. எஸ். சிதாபதி அனைவரையும் வரவேற்றார். பிரபல வழக்கறிஞர் ஸ்ரீ கே. பி. கைத்தான் விழாவுக்குத் தலைமை வகித்தார். கல்கத்தா மேயர் ஸ்ரீ பிஜாய் குமார் பானர்ஜி விழாவைத் துவக்கி வைத்தார். பிரபல சினிமா சங்கீத டைரக்டர் அபிஜித் பந்தோபாத்யா அவர்களும் கோஷ்டியாரும் ''ரவீந்திர சங்கீத்'' நிகழ்ச்சியில் பங்கு கொண்டனர்.

---

பாஸ்போர்ட் அதிகாரியாயிருக்கும் திரு கிருஷ்ணசுவாமி இலங்கையிலிருந்து சென்னைக்கு மாற்றப்பட்டபோது அவருக்குப் பதிலாக இந்திய ஹைகமிஷனில் பாஸ்போர்ட் அதிகாரியாகக் கடமையாற்றுவதற்காகத் திரு வெங்கடராமன் இங்கு வந்தார்.

ஒரு வருட காலம் ஹைகமிஷனில் மிக மிகப் பிரபல்யமான திரு வெங்கடராமன் பதவி மாறிப் போவதை முன்னிட்டு, சென்ற பல தினங்களாக அவருக்குப் பிரியாவிடை உபசார விருந்துகள் நடைபெற்ற வண்ணமாக இருக்கின்றன.

## காங்கிரஸில் பிளவு ஏற்பட அனுமதியாதீர்

தோட்டத் தொழிலாளரின் ஏகப் பிரதிநிதித்துவ ஸ்தாபனமாக இருந்த இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸில் ஏற்கனவே பிளவு ஏற்பட்டு, தொண்டைமான் காங்கிரஸ் என்றும் அஸீஸ் காங்கிரஸ் என்றும் இரண்டு கூறுகளாக அந்த ஸ்தாபனம் பிளவுபட்டது. இப்போது அஸீஸ் காங்கிரஸில் மீண்டும் ஒரு பிளவு ஏற்பட்டு விடுமோ என்று பலரும் அஞ்சுகிறார்கள். இவ்வருடத் தலைவர் தேர்தலுக்கு இருவர் போட்டியிடுகின்றனர்.

முன்பெல்லாம் போட்டி அபேட்சகர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட்டபோதிலும் கடைசி நேரத்தில் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துத் தேர்தல் ஏகமனதாக நடைபெறுவது வழக்கம். இதற்கு மாறாக இவ்வருடம் ஜனாப் அஸீஸும் திரு எஸ். எம். சுப்பையாவும் தேர்தலில் பலப் பரிசோதனை செய்து பார்க்கத் தீர்மானித்திருப்பது பலருக்கும் கவலையைக் கொடுத்திருக்கிறது. இந்தப் போட்டி மனப்பான்மை கட்சியில் பிளவுச் சக்தியைப் பெருக்கிவிடுமோ என்ற எண்ணத்துக்கு இடமளிக்கிறது!

சில ஆண்டுகளுக்கு முன்னால் நடைபெற்ற இவ்விதப் பலப் பரிசோதனைதான் காங்கிரஸ் இரண்டுபடக் காரணமாயிருந்தது.

மேலும் காங்கிரஸ் சிறுசிறு கோஷ்டியாகப் பிரிந்து சீர் குலைந்து போக மறுபடியும் நடக்கும் பலப் பரிசோதனை வழி வகுத்து விடுமோ என்று இந்திய வட்டாரங்கள் அஞ்சிக்கொண்டிருக்கின்றன.

இலங்கை இந்தியர் பிரச்னை நெருக்கடியாயிருக்கும் தருணத்தில் ஒற்றுமையோடு இருப்பதைவிட்டுப் போட்டி மனப்பான்மையில் ஈடுபட்டுக் காங்கிரஸில் பிளவு ஏற்பட அனுமதிக்காமல் இருக்கலாமல்லவா?

## பார்லிமென்டின் கடைசிக் கூட்டம்

தற்போதைய பார்லிமென்டின் கடைசிக் கூட்டத்தைக் கவர்னர் ஜெனரல் ஸர் ஆலிவர் குணதிலகா சென்ற வாரம் ஆரம்பித்து வைத்து சிம்மாசனப் பிரசங்கத்தை நிகழ்த்தினர். அப்பொழுது முன்னாள் ஆளும் கட்சியான யு. என். பி. கட்சி ஒன்றைத் தவிர மற்ற எதிர்க் கட்சியினர் எல்லோரும் இந்தக் கூட்டத்தைப் பகிஷ்கரித்தனர். எதிர்க்கட்சியினரின் ஆசனங்களெல்லாம் வெறிச்சென்று கிடந்தன. கவர்னர் ஜெனரல் தமது சிம்மாசனப் பிரசங்கத்தில் நாட்டின் தற்போதைய அமைதியற்ற நிலைமையைப் போக்க அரசாங்கம் என்ன செய்ய உத்தேசித்துள்ளதென்பதைப் பற்றி ஏதும் குறிப்பிடவில்லை. புதிய விவரம் ஒன்றையும் அவரது பேச்சில் காண முடியவில்லை. உப்புச் சப்பில்லாமல் இருந்தது அவர் பேச்சு. இந்தியப் பிரச்னையைச் சுமுகமாகத் தீர்க்க அரசாங்கம் விரைவில் நடவடிக்கையெடுக்கப் போவதாக கவர்னர் ஜெனரல் தமது பிரசங்கத்தில் சொல்லியது கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன விஷயம். பண்டாரநாயகா அரசாங்கம் அதிகாரத்துக்கு வந்த நாள் முதல் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறதே தவிர, காரியத்தில் ஏதும் செய்யக் காணோம். இம்முறையும் பல பிரச்னைகளிலே விழி பிதுங்கிக் கொண்டிருக்கும் அரசாங்கம் இந்தியப் பிரச்னையில் கவனம் செலுத்துமென்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

— ரஜனி

# ஆகாச வெடி

"பிச்சைக்காரர்களைப் போல் வேடம் தரித்துச் சென்னைப் போலீஸ்காரர்கள் இருவர் ஒரு திருடர் கூட்டத்தைப் பிடித்தனர்." —செய்தி

சென்னைப் பிச்சைக்காரர்களிடமிருந்து திருடர்களால்கூடத் தப்ப முடியாது என்பது இப்போது வெளியாகிறது.

❋

"சாப்பாட்டுக்கு வழி இல்லையானால் இந்திய எல்லைக்குள் போங்கள் என்று ஆஸாத் காஷ்மீர் அதிகாரிகள் மக்களைத் தூண்டுகிறார்கள்." —காஷ்மீர் செய்தி

சாப்பாட்டிற்கு வருவது போல், காஷ்மீரைச் சாப்பிடலாமென்று மட்டும் நினைக்க வேண்டாம்!

❋

விறகுக்கு ஒரே முனையில் வரி விதிக்கவும். —தலைப்பு

வீண் எரிச்சலைத் தவிர்க்க இந்த யோசனையை அரசாங்கம் ஏற்க வேண்டும்.

❋

"எண்ணெயில் கலப்படம்!" —தலைப்பு

இந்தப் படம் எப்போ வந்தது என்று நினைக்கிறார் சினிமா ரஸிகர்.

❋

"உடுமலையில் வண்டிகளுக்கு வரி குறைந்தது!" —செய்தி

'அப்பா! பாரம் குறைந்தது!' என்று வண்டிக்காரர்கள் ஆனந்தப்படுவார்கள்

"பாலக்காட்டில், சர்க்கார் பஸ்ஸுக்கு அடியிலேயும் படுத்துக்கொண்டு தொண்டர்கள் மறியல் செய்தார்கள்." —செய்தி

சென்னை சர்க்கார் பஸ்களானால் ஆபத்தில்லை, கேரளாவில் ஓடுகிற பஸ்களாயிற்றே என்று ஒருவர் அஞ்சுகிறார்.

❋

"சோவியத் உதவியுடன் மேற்கு வங்காளத்தில் மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கப்படும்." —செய்தி

இந்திய - சோவியத் தொழில் உறவு எவ்வளவு தூரத்துக்கு வளர்ந்திருக்கிறதென்பதை இந்த மூக்குக் கண்ணாடித் தொழில் மூலம் வெளியாகலாம்.

❋

"சீட்டாடிக் கொண்டிருந்தவர்களிடையே பெரிய சண்டை..." —தலைப்பு

துருப்புகள் தலையிட வேண்டிய அவசியம் ஏற்படவில்லையே!

❋

"ஒரு குமாஸ்தா வேலையிலிருந்து பெரிய பதவிக்கு வந்திருந்த அதிகாரி ஒருவர், லஞ்சக் குற்றம் காரணமாக, மீண்டும் குமாஸ்தாவாக்கப் பட்டார்." —பாகிஸ்தான் செய்தி

இதன் பிறகு, தாங்கள் ஏன் குமாஸ்தாக்களாக விளங்க வேண்டும் என்று இதர குமாஸ்தாக்கள் கேட்டிருந்தால் ஆச்சரியமில்லை.

## ஜனநாயகம் பிழைக்கும்

"உலகில் சிறந்த முறையில் நடைபெறும் ஜனநாயக அரசுகள் இருக்கின்றன. எந்தப் பொதுப் பிரச்னைகளையும் தமக்குத் தோன்றியபடி இவை முடிவு செய்துவிடுவதில்லை. மக்கள் சமுதாயத்தில் எல்லாச் சாராரையும், கட்சிகளையும் கலந்துகொண்டபிறகே கொள்கைகளை வகுக்கின்றன. இதற்கு மாறாக, நிர்வாகம் வகிக்கும் கட்சி பிறர் ஆட்சேபங்களை மதியாமல் கொள்கைகளை நிறைவேற்ற முற்படுமானால் ஜனநாயகம் என்பது வெறும் கேலிக்கூத்தான விஷயமாகிவிடும். நம் நாட்டில், ஜனநாயகக் கொள்கைகளுக்கு அரசியலில் இத்தகைய ஆபத்துத்தான் ஏற்பட்டிருக்கிறது. நிலைமை இன்னும் மோசமாகுமுன், மக்களின் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாக்கச் சுதந்திரக் கட்சியைத் துவக்கி வைத்திருப்பதை முழுமனத்துடன் வரவேற்கிறேன்."

பங்களூர் ரோட்டரி சங்கத்தினர் கூட்டத்தில் ஸ்ரீ டி. வி. குண்டப்பா

# கலப்பு விவாகம்

## பழைய தினுசு

ரங்கராமானுஜய்யங்கார் தென்கலை வைஷ்ணவ குலம். மனைவியார் வடகலை குடும்பத்தில் பிறந்த அம்மையார். இந்தக் கலப்பு விவாகங்கள் வைஷ்ணவ குடும்பங்களில் முன்னாட்களில் சாதாரணமாக நடைபெற்று வந்தன. பெண் புக்ககம் சென்றதும் அந்த வீட்டுச் சம்பிரதாயத்தை அவளும் மேற்கொள்வாள். ஒரு கலவரமும் இருக்காது. என்ன காரணமோ இதுவெல்லாம் பின்னால் குறைந்து வந்துவிட்டது. வைஷ்ணவ. ஸ்மார்த்த கலப்பு மணங்கள் தற்போது சர்வ சாதாரணமாகி விட்டன. ஆனாலும் தென்கலை வடகலைகள் இப்போதும் கொஞ்சம் எட்டி நின்றே வருகின்றன. இதற்குக் காரணம் பாஷ்யகாரரேதான் சொல்ல முடியும்.

* * *

ரங்கராமானுஜய்யங்காருடைய சதாபிஷேகம் அடுத்த ஆடி மாதம் பௌர்ணமி உத்தராட நட்சத்திரத்தன்று வெகு விமரிசையாக நடத்த ஏற்பாடுகள் நடைபெற்று வந்தன. வயோதிகத் தம்பதிகளை மணைமேல் உட்கார வைத்து மங்கல மகிழ்ச்சியை அனுபவிக்க அவர்களுடைய மூன்று குமாரர்கள் வெகு குதூகலமாக எதிர்பார்த்து வந்தார்கள். அழைப்புப் பத்திரிகைகள் 1000 அச்சிடப்பட்டன. இந்த முகூர்த்தத்துக்கு இன்னும் எட்டு நாட்கள் இருக்க நடந்த நிகழ்ச்சியை எழுதுகிறேன்.

"கேசு தீர்மானமாயிற்று. விஷயம் தெரியுமா?" என்றார் கிழவர் மனைவியைப் பார்த்து.

மனைவி அலர்மேலம்மாளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "எந்தக் கேசு? என்ன சமாச்சாரம்? ஒன்றும் கெட்டது இல்லையே?" என்றாள் கவலையோடு.

"கெட்டது ஒன்றுமில்லை. நல்லதேதான். உங்களூர் கோயில் வழக்கு. தென்கலையாருக்கு அனுகூலமாக ஹைகோர்ட்டில் தீர்ப்பாய் விட்டது" என்றார் ரங்க ராமானுஜய்யங்கார்.

"அப்படியா? நம்ம பையன் எந்தப் பக்கம் வக்கீலாக இருந்தது?" என்று கேட்டாள் அலர்மேலம்மையார்.

"நம்ம பையன் நம்ம தென்கலையாருக்குத்தான் வக்கீலாக இருந்தான்" என்றார் கிழவர்.

"அப்படியானால் கோயில் இனிமேல் வடகலையாருக்கு இல்லை. அப்படித்தானே?" என்று கேட்டாள் அலர்மேலம்மாள் கொஞ்சம் வருத்தத்தோடு.

"கோயில் இல்லாமற் போகாது, இருக்கும். ஆனால் அங்கே வடகலையாரின் ஆர்ப்பாட்டம் இனிமேல் இல்லை. அவர்கள் கொட்டம் அடங்கிற்று" என்றார் ரங்க ராமானுஜர்.

"நம்ம பந்துக்களுக்கு இனிமேல் கோயிலில் ஒன்றும் அதிகாரம் கிடையாது என்று தீர்ப்பு?"

"நீ என்ன விசனப்படுகிறாய் போல் இருக்கிறதே. பையன் கேசு ஜெயித்தான். அதற்குக்கூட நீ சந்தோஷப்படவில்லை. உன் வடகலைப் பந்துக்கள் கோவிலில்



முதல் பிரசாதம் வாங்கி வருவது தின்று போச்சு என்று துக்கப்படுகிறாய்'' என்றார் கிழவர் மனைவியைப் பரிகாசம் பண்ணி.

இந்தப் பரிகாசம் மனைவிக்குப் பிடிக்கவில்லை.

"உங்கள் பையன் ஜெயித்தது உங்களுக்குச் சந்தோஷம். என் அண்ணாவும் சித்தப்பாவும் அவமானப்பட்டுப் போனார்களே. அது எனக்குக் கொஞ்சம் விசனம் தானே!'' என்றாள்.

**ராஜாஜி**

இதற்குள் வக்கீல் குமாரனும் அவன் தம்பி என்ஜினீரும் வந்து சேர்ந்தார்கள்.

"தூப்பல் கோயில் கேசு முடிந்து போச்சு!'' என்றான் அனந்தாச்சாரி.

"தெரியும் தமிழ் 'பேப்பரில் பார்த்தேன். நமக்குத்தான் வெற்றி என்பதைப் பார்த்தேன்.''

"ஆனால் அம்மாவுக்குத் தோல்வியே?'' என்றான் அனந்தாச்சாரி, கேலி செய்வதில் சேர்ந்து கொண்டு.

கிழவிக்குப் பொறுக்கவில்லை; அழ ஆரம்பித்தாள்.

"ஏன் அம்மா அழுகிறாய்? இந்தப் பைத்தியக்காரச் சண்டையில் யார் ஜெயித்தால் என்ன? யார் தோற்றால் என்ன?'' என்று இரண்டாவது மகன் கோவிந்தராஜன் சமாதானப் படுத்தினான். அவன்தான் என்ஜினீர்.

"பைத்தியக்காரச் சண்டையில் எனக்கு பீசு ஆயிரத்தைந்நூறு ரூபாய்'' என்றான் தமையன் அனந்தாச்சாரி.

"அந்த ஆயிரத்தைந்நூறும் சதாபிஷேக கலியாணத்தில் செலவு செய்து விடப் போகிறேன்'' என்றும் சேர்த்தான் அம்மாவைச் சமாதானப்படுத்த.

"அந்தப் பைத்தியக்கார வியாஜ்ஜியத்தைப் போல் இந்தப் பைத்தியக்காரச் செலவும்'' என்றான் என்ஜினீர் கோவிந்தராஜன் அவன் தீவிர சீர்திருத்தக்காரன்.

"ஏன் பைத்தியக்காரச் செலவு என்கிறாய்? உனக்கு இந்த சதாபிஷேகம் பிடிக்கவில்லையா?'' என்றாள் அலர்மேலம்மாள் சிரித்துக் கொண்டு.

"இல்லையம்மா. இந்தத் தடபுடல் எல்லாம் என்னத்துக்கு? சந்தோஷத்துக்கு வீண் செலவு என்னத்துக்காக? அதற்குப் பதில் ஆயிரம் ரூபாய் ஏதாவது தர்மம் செய்யலாமே?'' என்றான் என்ஜினீர்.





இந்தியன் எக்ஸ்பிரஸைச் சேர்ந்த திரு வி. எல். கணபதி சர்மா அவர்களின் புதல்வர் திரு தக்ஷிணாமூர்த்தி பி. ஈ. க்கும் செள. ராதாவுக்கும் சென்னையில் வெகு சிறப்பாக விவாகம் நடந்தேறியது. திருமணத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை ஆசிர்வதித்தனர்.

---

"அந்தக் கோயிலில் வேலையிலிருந்து நீக்கப்படும் வடகலைப் பயல்களுக்கு மனச் சாந்திக்காக ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விடுவதுதானே?" என்றார் கிழவர் ரங்க ராமானுஜய்யங்கார்.

"அப்படியே செய்யலாம். அதுவும் நல்ல யோசனைதான்" என்றான் வக்கீல் மகன்.

"உங்கள் பிச்சையை அவர்கள் பெற்றுக் கொள்ள மாட்டார்கள்" என்றாள் அலர்மேலம்மாள் கொஞ்சம் கோபமாக.

"வடகலையாருக்குக் கர்வம் அதிகம் தான். அந்த வேதாந்த தேசிகரின் அகம்பாவம் இவர்களிடம் பரம்பரை" என்றார் ரங்கராமானுஜய்யங்கார்.

"தென்கலையார் ரொம்பச் சாதுக்களோ?" என்றாள் அலர்மேலம்மாள்.

இவ்வாறு கொஞ்சம் கொந்தளிப்பு ஏற்பட்ட போதிலும், அடுத்த வாரம் சதாபிஷேகம் வெகு விமரிசையாகவே நடந்தது.

ஊரிலுள்ள பெரிய மனிதர்கள் எல்லாரும் குடும்ப சமேதமாகக் குழுமி வயோதிக தம்பதிகளின் மங்கள முகூர்த்தத்தைச் சிறப்பித்தார்கள். எல்லாரும் அனந்தாச்சாரியைப் பாராட்டினார்கள். "கோயில் கேஸில் நீங்கள் பேசியது பிரமாதம்" என்றார்கள்.

மற்றும் சிலர் "நியாயம் எப்படியோ அப்படி முடிந்தது" என்றார்கள்.

ஒரு மூலையில் "நியாயமாவது, அநியாயமாவது. எல்லாம் மோசம். இந்த சம்பிரதாய விஷயங்கள் மட ஜட்ஜுகளுக்கு எப்படி விளங்கும்?" என்று சிலர் தங்களுக்குள் மெதுவாகப் பேசிக் கொண்டார்கள்.

"வைஷ்ணவாளுக்குள் வைஷம்யம் ஏற்படுத்துவதே நோக்கம், இந்த ஸ்மார்த்த உத்தியோகஸ்தர்களுக்கு" என்று சில வடகலை வைதிகர்கள் 'குசுகுசு' என்று பேசிக் கொண்டார்கள்.

"எவ்வளவு அழகாக இருக்கிறாள் பார்த்தாயா கிழவி? சின்ன கல்யாணப் பெண்போல் முகத்தில் களையைப் பார்!" என்றார்கள் சிலர் ஸ்திரீ கூட்டத்தில்.

"அதிர்ஷ்டசாலி! நமக்கெல்லாம் இந்தப் பாக்கியம் கிட்டுமா?" என்றார்கள் அவர்களில் வேறு சிலர்.

சொன்னபடி ஆயிரம் ரூபாய்ச் செலவில் முகூர்த்தம் வெகு தடபுடலாகத்தான் நடந்தது.

• • •

அலர்மேலம்மாளுக்குக் கோயில் விஷயம் மறக்கவில்லை.

"இந்தத் தென்கலை வடகலைச் சண்டை எப்போதாவது நிற்குமா?" என்று கிழவரைக் கேட்டாள். முகூர்த்தம் முடிந்து மூன்றாவது நாள்.

"எல்லாம் ஸ்மார்த்தாளுடைய விஷமம். அவர்களுடைய சூழ்ச்சியே இதுவெல்லாம். இல்லாவிட்டால் நமக்குள் சண்டையே இருக்காது" என்றார் கிழவர்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த என்ஜினீரும் வக்கீலும் "வரப் போகும் மாறுதல்கள் இந்த வயோதிகர்களுக்குத் தெரியவில்லை" என்று தங்களுக்குள் ஆங்கிலத்தில் பேசிக் கொண்டார்கள்.

"எனக்கு எல்லாம் தெரியும், நீங்கள் பேசுவது" என்றார் கிழவர். "நீங்கள் எதிர்பார்க்கும் சீர்திருத்தங்கள் நாட்டைக் குட்டிச்சுவராக்கும்" என்றார் அவர். ஆங்கிலம் தெரியாதாயினும் விஷயத்தை அவர் முகஜாடைகளினால் தெரிந்து கொண்டார்.

குமாரர்கள் இருவரும் சிரித்தார்கள். அவர்களில்ஒருவனுக்கு இரண்டு வளர்ந்த பெண்கள். மற்றவனுக்கும் ஒரு பெண். அவளும் விவாகப் பருவம் அடைந்தவள். இந்த நிலைமையில் சம்பிரதாய பேதங்களை அவர்கள் ருசிக்கவில்லை. அவர்களுடைய பார்வை அந்த வேலிகளையும் இன்னும் பெரிய வேலிகளையும் கூடத் தாண்டிச் செல்லத் தொடங்கி விட்டிருப்பது கிழவருக்குத் தெரியாது. தெரிந்தால் அவர் மூர்ச்சையாகிப் போயிருப்பார்.

## 45. அக்ரூரர் வரவு

கண்ணன் கோபிகளுடன் ராஸ க்ரீடை புரிந்த சில நாட்களுக்குப் பிறகு அரிஷ்டன் என்ற அரக்கன் ஆயர் பாடியை அடைந்தான். காளை வேடம் பூண்டு, பெரிய உடலுடன் பூமியைத் தன் காலால் பிளப்பது போல் ஓடினான். கொடுங் குரலோடு அலறினான். வாலைத் தூக்கிக் கொம்பால் மண்ணைக் குத்தி வாரி இறைத்தான். இமை கொட்டாது நோக்கினான். மலை என்று கருதி மேகங்கள் அவன் மீது படிந்தன. அலறலைக் கேட்டு அநேகருக்குக் கரு சிதைந்து விட்டது. ஊரை விட்டு அனைவரும் தப்பி ஓட முயன்றனர். "கண்ணா! மாயவனே!" என்று கோவிந்தனைச் சரண் புகுந்தனர்.

கண்ணன் அவர்களை "அஞ்ச வேண்டாம்" என்று ஆச்வாசம் செய்தான். காளையை நோக்கி, "மாட்டையும் மாடு மேய்ப்பவரையும் பயம் காட்டிப் பயனில்லை. உன்னைப் போன்ற கொடியவரின் செருக்கை அடக்க நான் இருக்கிறேன்" என்று உரைத்தான். சண்டைக்குத் தயார் என்று காண்பிப்பதற்குக் கைகளால் துடையில் தட்டினான். அரிஷ்டனுக்குச் சினம் அதிகரித்தது. கண் சிவந்து இமை கொட்டாப் பார்வையுடன் இந்திரனுடைய வஜ்ராயுதமோ என்று அச்சமளிக்கும் விதம் அரக்கன் கண்ணனை நோக்கிப் பாய்ந்தான். கண்ணன் அவன் கொம்புகளைப் பிடித்தான். தன் பலத்தால் அவனைப் பதினெட்டு அடி பின்னுக்குத் தள்ளினான். காளை கீழே விழுந்தது. ஆனால் திரும்பவும் எழுந்து பெருமூச்சு விட்டுத் திரும்பவும் கண்ணன் மீது பாய்ந்தது. கண்ணன் திரும்பவும் அதன் கொம்புகளைப் பிடித்தான். கீழே தள்ளினான். அதன் உடல் மீது தனது காலை வைத்து அழுத்தினான். காளை பிழிந்த ஈரத் துணியைப் போல் ஆயிற்று. அதன் கொம்புகளைப் பிடுங்கி அவைகளால் காளையைப் புடைத்தான். காளை சாய்ந்தது. அதன் வாயிலின்று ரத்தம் வழிந்தது. விழி பிதுங்கி உயிர் துறந்தது. வானோர் கொண்டாடிக் கண்ணன் மீது மலர்மாரி சொரிந்தனர்.

அரிஷ்டன் இவ்வாறு மாண்ட பிறகு நாரதர் கம்ஸனைச் சந்தித்தார். வசுதேவரின் எட்டாவது குழந்தை என்று அவன் எண்ணியது யசோதையின் வயிற்றில் பிறந்தது. வசுதேவருடைய மகன் கண்ணன் ஆயர்பாடியில் வளர்ந்து வருகிறான் என்று கம்ஸனிடம் தெரிவித்தார். 'ஆ'வென்று அலறி, 'வசுதேவரைக் கொன்று விடுகிறேன்' என்று வாளை உருவினான் கம்ஸன். நாரதர் அவனைத் தடுத்தார். வசுதேவரையும் தேவகியையும் விலங்கிட்டுச் சிறையில் தள்ளினான்.

கேசி என்பவனை அழைத்து, "இப்பொழுதே ஆயர்பாடி சென்று கண்ணனையும், பலராமனையும் கொன்றுவிடு" என்று கட்டளை இட்டான். சாணூரன், முஷ்டிகன் என்ற மல்லர்களையும், யானைப் பாகர்களையும் வரவழைத்துப் பின்வருமாறு பேசினான்: "வசுதேவருடைய மைந்தர் இருவரும் ஆயர்பாடியில் வசித்து வருகின்றனர். அவர் கையால் நான் இறக்க வேண்டுமென்பது என் விதியாம்! மல்லர்களே! அவ்விருவரும் இங்கு வருவார்கள். நீங்கள் அவர்களை மல்யுத்தம் செய்து கொன்று விடுங்கள், நகரவாசிகள் வீற்றிருக்க நாலா பக்கங்களிலும் மேடைகளைத் தயார் செய்யுங்கள். எல்லோரையும் இந்தக் காட்சியைக் காண வரவழையுங்கள். யானைப் பாகனே! மல் அரங்கின் வாயிலில் குவலயாபீடம் என்ற பட்டத்து யானையை நிறுத்தி வை. எனது பகைவரான இரு சிறுவர்களையும் யானை கொன்று விடட்டும். சதுர்த்தசியன்று ஒரு "தனுர்யாகம்" (அதாவது ஒரு வில்லில் சிவபெருமானை ஆவாகனம் செய்வது) நடத்தப்படட்டும். யாகத்தில் வேண்டிய மிருகங்களைப் பலியிடுங்கள்" என்று பலவாறு கட்டளையிட்டான்.

இவ்விதம் தனது சேவகர்களுக்குக் கூறி விட்டு, யதுகுலத்தோனாகிய அக்ரூரரை வரவழைத்தான். அக்ரூரர் வாசுதேவருக்குச் சுற்றம், மாந்தருக்குள் மேலானவர். கம்ஸன் அவருடைய இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, "தானத்தில் சிறந்தவரே! எனக்கு நீங்கள் ஒரு உபகாரம் செய்ய வேண்டும். போஜ குலத்திலும் விருஷ்ணி குலத்திலும் எனக்கு உங்களை விட நெருங்கிய நண்பர் இல்லை. ஒரு பெரிய காரியம் நடத்த எண்ணியிருக்கிறேன். அது கைகூடுவதற்கு

உங்களையே நம்பியிருக்கிறேன். விஷ்ணுவை நம்பி இந்திரன் பலியை வென்றானல்லவா? இப்பொழுதே ஆயர்பாடிக்குச் செல்லுங்கள். அங்கு வசுதேவருடைய இரு குமாரர்களும் வசித்து வருகின்றனர். நான் இளைய குமாரன் கையால் மாளவேண்டுமென்று விதியாம். அவர்கள் நந்தன் முதலிய கோபகர்களுடன் இங்கு வரட்டும். குவலயாபீடம் என்ற யானை அவ்விருவரையும் கொன்று விடும். யானை தவறினால் மல்லர்கள் அவர்களைக் கொன்றுவிடுவார்கள். பிறகு அந்தக் குலத்தையே அழித்துவிடுவேன். அப்பொழுது இடையூறின்றி நான் வாழலாகும். இதெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளுங்கள். தனுர் யாகத்தையும் மதுரா நகரத்தின் காட்சிகளையும் பார்க்கவே நான் சிறுவர்களை அழைத்ததாகச் சொல்ல வேண்டும்'' என்று கூறினான்.

நிற்க, கேசி என்ற அரக்கனைக் கம்ஸன் ஆயர்பாடி சென்று சிறுவரைக் கொன்று விடும்படி ஏவினான் என்று முன்னமே கூறினோம். கேசி குதிரை வேடம் பூண்டு மேகம் போன்ற மேனியுடன் அலறிக் கொண்டு இடையர் வாழும் இடத்தை அடைந்தான். கண்ணன் குதிரையை எதிர்த்து நின்றான். கேசி சிங்கம்போல் கர்ஜனை செய்தான். மறு பக்கம் திரும்பிக் கொண்டு பின் கால்களால் கண்ணனை உதைத்தான். ஆனால் கண்ணன் குதிரையின் கால் தன்மீது படாது நகர்ந்து கொண்டான். பின் கால்களால் அக்குதிரையைப் பிடித்துக் கொண்டான். கறகறவென்று சுற்றினான். தூரத்தில் வீசி எறிந்தான். ஆனால் அரக்கன் உயிர் துறக்கவில்லை. எழுந்து திரும்பவும் கண்ணனை எதிர்த்துப் பாய்ந்தான். கண்ணன் தனது கரத்தைக் குதிரையின் வாய்க்குள் திணித்தான். அரக்கனுக்கு அது காய்ச்சின இரும்பென நொந்தது. உள் சென்ற கை பெரிதாக வீங்கி அரக்கனுடைய மூச்சை அடக்கியது. அவனுடைய கண்கள் சுழன்றன. திடீரென்று புவிமீது விழுந்து உயிர் துறந்தான். கண்ணன் சற்றேனும் சோர்வின்றி நகைத்துக்கொண்டு நின்றான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நாரதர் அங்கு வந்தார். கண்ணனைத் துதித்தார். ''கண்ணா! யாருமறியா மாயவனே! ஈசனே! வசுதேவன் மைந்தனே! கட்டையினுள் தீயென அனைவர் உள்ளத்திலும் படிந்திருக்கின்றனே. தீயவரைக் கொன்று நல்லோரை வாழ வைக்கவே அவதாரம் செய்திருக்கின்றனை. இன்னும் இரண்டு நாட்களுக்குள் மல்லரும் கம்ஸனும் உன் கையால் மாள்வதைக் காணப் போகிறேன். அதற்கு மேல் நடக்கப்போகும் பல நிகழ்ச்சிகளையும் காணப் போகின்றோம். உன்னை வணங்குகிறேன்'' என்றனர். கண்ணனைத் தோத்திரம் செய்து விட்டு நாரதர் சத்தியலோகம் சென்றார்.

* * *

ஒரு நாள் மாடு மேய்த்துக் கொண்டிருந்த சிறுவர்கள் சிலர் திருடரென்றும், சிலர் காவலாளிகள் என்றும் பண்டங்களைத் திருடி ஒளித்து வைப்பதும் அதைத் துப்பறிந்து கண்டு கொள்வதுமாய் விளையாடினர். சில பையன்கள் ஆடுகள் என நடித்தனர். வியோமன் என்ற அரக்கன் இதுவே தருந்த தருணம் என்று கருதித் தானும் ஒரு மாடு மேய்க்கும் சிறுவனாக மாறி எல்லோருடனும் விளையாடினான். ஆடு போல் நடித்த பையன்களைத் தந்திரமாய்த் தூக்கிச் சென்றுவிட்டான். அவர்களை ஒரு குகைக்குள் அடைத்து அதன் வாயைக் கல்லால் மூடினான். நான்கு அல்லது ஐந்து சிறுவர்களைத் தவிர எல்லோரும் இவ்விதம் அடைபட்டனர். கண்ணன் இதை அறிந்தான். வியோமனைப் பிடித்துக் கொண்டான். அவன் கழுத்தைப் பிடித்து நெருக்கி அவனை வதம் செய்தான். குகையை மூடியிருந்த பாறையைப் பிளந்து சிறுவர்களை வெளியேற்றிக் காப்பாற்றினான்.

* * *

கம்ஸன் தம்மை ஆயர்பாடி செல்ல வேண்டும் என்றதுமே அக்ரூரர் ஆனந்தம் அடைந்தார். அன்றிரவு மதுரையில் தங்கிவிட்டு மறுநாள் காலையில் தம் தேரில் ஏறிக் கொண்டு ஆயர்பாடியை நோக்கி விரைந்தார். வழியில் தமக்குள்ளே பலவித சிந்தனைகள் செய்தார். ''நான் என்ன தவம் செய்தேன், என்ன கொடை அளித்தேன், என்ன நற்செயல் புரிந்தேன், இதோ கண்ணனை நேரிலே காணும் பாக்கியம் கிடைக்கப் போகின்றதே! சிற்றின்பங்களைத் துறவாத



எனக்குப் பரமனின் தரிசனம் கிடைப்பது ஆச்சரியம்! இல்லை, அவ்வாறு எண்ணுவது தவறு. ஈனனை எனக்கும் கண்ணனைக் காணும் பேறு வேண்டியதே! இல்லையேல், கடைத்தேறுவது எவ்விதம்? இன்று எனது தீவினை தீர்ந்தது. பிறவிப் பயன் கிடைத்தது. பரமனின் தாமரைத் தாள்களை வணங்கப் போகிறேன். எனக்குக் கம்ஸன் நன்மை புரிந்தான். செந்தாமரைக் கண் வாய்ந்த கண்ணனைக் காணப் போகிறேன்! கண்கள் இன்றே அப்பெயருக்கு உரிமை உற்றனவாகும். ஆயர்பாடி சென்றதும் தேரிலிருந்து கீழே குதிப்பேன். யோகிகள் தேடியும் காணாத பாதத்தில் தலை வணங்குவேன். அச்சமயம் தனது திருக் கரத்தை எனது தலைமீது வைத்துக் கண்ணன் என்னைப் பிறவி என்ற பிணியினின்று நீக்குவான் அன்றோ? அக்கரத்தில் நீர் வார்த்து மூவுலகத்துக்கு அரசுரிமையை மகாபலி பெற்றான். அக்கரம் பட்டதுமே கோபி[illegible]ன் தாபம் அடியோடு தீர்ந்தது. கம்ஸனுடைய தூதன் என்று கண்ணன் என்னைப் பகைக்க மாட்டான். புன்முறுவலோடு என்னைக் கண் நோக்கினால் நான் பயம் தெளிந்து பேரானந்தம் அடைவேன். என்னை அழைத்து ஆலிங்கனம் செய்ததுமே எனது உடல் அருளுக்குப் புகலிடமாகும். கர்மங்கள் கரைந்து போகும். பிறகு நான் கைகூப்பி நிற்குங்கால் கண்ணன் என்னை மாமனென்று அழைப்பான். அச்சமயம் எனது பிறவி பயனடையும். அன்பருக்கு அன்பனன்றோ அவன்! என்னைப் பலராமன் கையைப் பிடித்து வீட்டுக்குள் அழைத்துச் செல்வான்" என்றெல்லாம் பலவாறு எண்ணிக் களிப்படைந்தார்.

அக்ரூரர் ஆயர்பாடியை அடைந்த பொழுது கதிரவன் மறையும் நேரமாயிற்று. ஊரின் அருகில் அவர் கண்ணனின் அடிச்சுவட்டைக் கண்டார். அவருக்கு மெய் சிலிர்த்தது. கண்ணீரால் கண் மங்கியது. தேரிலிருந்து கீழே குதித்தார். திருமாலின் அடிச்சுவடு படிந்த புவி மீது புரண்டார். உடல் படைத்தவருக்கு நிகரற்ற பெருமை இதுவே — ஆசையும் பொய்ம்மையும் அகற்றிக் கவலை நீங்கி, ஹரியின் உருவங்களை நாடி அவன் புகழ் பாடி இன்ப நிலை அடைவதே.

அக்ரூரர் பரம பக்தர். பிரஹலாதனுக்குச் சமானமானவர். ஆண்டவனை அண்டினவர் உடல் நிலையும் மனோநிலையும் எவ்விதம் இருக்கும் என்பதை நாம் அவர் சரிதையிலிருந்து அறிந்து கொள்ள வேண்டும்.

எழுந்து நின்றதும் அக்ரூரர் கண்ணனையும் பலராமனையும் கண்டார். கண்ணன் மஞ்சள் பட்டாடை உடுத்தியிருந்தான். பலராமன் நீல நிறத்தாடை அணிந்திருந்தான். இருவரும் மாடுகள் கட்டியிருந்த தொழுவத்தில் நின்றுகொண்டிருந்தனர். சிறுவர் வேடம் கொண்டு, அருளுக்கு இருப்பிடமாகி, நீண்ட கைகளும் எழில் வழியும் வதனமும், இரு யானைக் குட்டிகளெனத் தோற்றம் அளித்தனர். நீராடிப் புத்தாடை உடுத்துக் களபம் பூசி நகையும் பூமாலையும் அணிந்து அழகு வாய்ந்திருந்தனர். ஒருவனைக் கண்டால் மரகத மலையோ என்று தோன்றியது; மற்றவனைக் கண்டால் பொன் பாய்ந்த வெள்ளி மலையோவென்று தோன்றியது. மன்னவா! அவருடைய ஒளியால் திக்குகள் திகழ்ந்தன

அக்ரூரர் புவி மீது விழுந்து இருவரையும் வணங்கினார். ஆனந்தத்தால் அவருக்குக் குரல் கம்மியது. தாம் யாரென்று சொல்ல நாவும் எழவில்லை. ஆனால் கண்ணனுக்கு எதுதான் தெரியாது? கண்ணன் அக்ரூரரை அருகில் அழைத்து ஆலிங்கனம் செய்து கொண்டான். அக்ரூரர் எண்ணியவாறே பலராமன் அவரை அணைத்துத் தழுவிக் கைகோத்துக் கொண்டு வீட்டுக்குள் அழைத்துச் சென்றான்.

உள்ளே சென்றதும் அவருக்கு ஆசனம் இட்டு வீற்றிருக்கச் செய்தனர். நல்ல உணவளித்து அவருடைய சோர்வையும் போக்கினர். தாம்பூலம் அளித்து நறுமணத் திரவியங்கள் பூசி மாலையிட்டனர். உபசாரங்கள் முடிந்ததும் நந்தன் அவரைப் பின்வருமாறு வினவினான் :

"அக்ரூரரே! ஆட்டுக்குக் கசாப்புக் கடைக்காரன் காவலெனக் கம்ஸனுடைய ஆட்சியில் எவ்வாறு வாழ்ந்து வருகிறீர்கள்? சிறு குழந்தைகளைக் கொன்ற கொடியவனிடம் புகலேது?" என்றார்.

இரவில் மஞ்சத்தின் மீது அயர்ந்த அக்ரூரர் தமது எண்ணங்கள் எல்லாம் நிறைவேறியதை நினைத்துக்களிப்புற்றார். இறைவன் இன்புற்றால் ஆகாததென்ன? கண்ணனும் அக்ரூரரைக் கம்ஸனைக் குறித்து வினவினான். "நீங்கள் இடையூறின்றிப் பிரயாணம் செய்கிறீர்கள் என்று எண்ணுகிறேன். உங்களுக்கு நன்மை உண்டாகட்டும். நமது குலத்துக்கே கேடாகக் காணும் கம்ஸன் இருக்கும் வரையில் சுற்றத்தார் சுகமாக இருக்கின்றனரா என்று கேட்டு என்ன பயன்? என் பொருட்டு என் தாய் தந்தையருக்கு எத்தனை துன்பங்கள்? எத்தனையோ நாட்களாய் உங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசை கொண்டிருந்தேன். எதற்காக இங்கு வந்தீர்கள் என்று தெரிவிக்க வேண்டும்" என்றான்.



## பிரபல திருமணம்

*

ஆர். எஸ். பதி அண்ட் கம்பெனி பார்ட்னர் திருமதி ஆர். எஸ். நாகரத்தினம்மாள் புதல்வர் திரு ஆர். எஸ். சந்தானகிருஷ்ணனுக்கும் சௌ. நர்மதா தேவிக்கும் சமீபத்தில் சென்னையில் விமரிசையாகத் திருமணம் நடந்தது.

# சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு

சமூகம் என்பது என்ன? வானத்திலிருந்து திடீரென்று கீழே வந்து குதித்த 'பறக்கும் தட்டா,' நம் இஷ்டப்படி அதை ஆட்டிக் குலைப்பதற்கு? பல்வேறு வித்தியாசங்களுடன் காணப்படும் பல மனிதர்கள் சேர்ந்ததல்லவா சமூகம்! அவ்விதமிருக்கும்பொழுது, மின்சார விசையை அமுக்கியதும் விளக்கை எரியப் பண்ணுவது போல, மக்கள் முன்னேற்றத்தைக் கொண்டு வருவது சாத்தியமான காரியமா?

ஒவ்வொரு தனி மனிதனும் தன்னுடைய நிலையில் முன்னேற்றம் அடைந்தால்தான் சமூகத்தில் மதிப்புடன் நடமாட முடிகிறது. சமூகத்தில் 'ஒருபக்கமான' (Lop Sided) முன்னேற்றம் இருந்தால் அதன் பயனாக நிலவக் கூடிய வித்தியாச மனப்பான்மை பெரிய கலகத்துக்கு அடிகோலிவிடும். சமத்துவமும், சகோதரத்துவமும் வறட்டு வேதாந்தமாகிவிடும். ஆகவே, முதலில் அஸ்திவாரக் கட்டத்தில் தனி மனிதன் முன்னேறியே ஆக வேண்டும். அதற்கு அவனுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்தல் அவசியமாகிறது. அப்படியில்லாமல், மக்களைப் பரதந்திரர்களாக ஆக்குவார்கள் என்றால், இருட்டறையில் ஒருவனைப் போட்டு அடைத்துவிட்டு, அவனுடைய க்ஷேம சமாசாரங்களைப் பற்றி விசாரிப்பது போலாகிறது.

இந்த நிலையில் ராஜாஜியின் ஆசியுடன் 'சுதந்திரக் கட்சி' உதயமானது. தேவேந்திரனே வந்து ஆளுக்கு ஒரு அவுன்ஸ் அமிருதம் (விலைக்கல்ல — சும்மாதான்) கொடுப்பது போல இருக்கிறது.

மாம்பலம்
?5-6-59 — பா. சுந்தரராஜன்

★

சுதந்திரக் கட்சி நமது ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்களின் ஆசியால் மேன்மேலும் வளரும்.

[illegible]
24-6-59 — எஸ். நாராயணன்

★

அநேக கட்சிகள் தோன்றுகின்றன. ஆனால் நல்லதொரு கட்சி இதுவரையில் தோன்றவில்லை. திரு ராஜாஜி அவர்களுடைய முயற்சியால் சுதந்திரக் கட்சி தோன்றியுள்ளது. நான் மனமார அதை ஆதரிக்கிறேன். தேவையுள்ளபோது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்யக் காத்துள்ளேன்.

உதகமண்டலம்
24-6-59 — எஸ். விஸ்வநாதன்

★

சுமார் 35 வருஷங்களாகக் காங்கிரஸையே ஆதரித்து வந்திருக்கிறேன். சர்க்கார் கூட்டுறவுப் பண்ணையும், நில உச்சவரம்பும் ஸ்ரீ ராஜாஜியின் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள சுதந்திரக் கட்சியில் என்னைச் சேர வைத்து விட்டன.

சென்னை
24-6-59 — கே. ஆர். ஆர். சாஸ்திரி

★

'சுதந்திரக் கட்சி' என்ற தலைப்பில் 21-6-59 இதழில் எழுதப்பட்டுள்ள தலையங்கம், 'கூட்டுப் பண்ணை–நிலச் சீர்திருத்தம்' முதலியவற்றால் ஏற்படும் விபரீதங்களை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. "காணி உழவர்களின் நிலைமை என்னவாகும்? அவர்கள், தங்கள் தொழில்களை விட்டுவிட்டு என்ன செய்வார்கள்? அவர்களுக்கு வேலை வாய்ப்புத் தரக் கூடிய தொழில் நம் நாட்டில் உண்டா?" என்பது போன்ற வினாக்களுக்கு, சரியான விடையை அளித்திருக்கிறது. மேலும் தற்போது இருக்கும், அரசாங்கம் 'சோஷலிஸம்' என்று சொல்லிக்கொண்டு செய்யும் பல அக்கிரமங்களைத் தடுத்து, அவர்களுக்கு இடித்துக் கூறி, நாடு அழிவுப் பாதையை நோக்கிச் செல்லாமல் தடுத்து நிறுத்தச் 'சுதந்திரக் கட்சி'யின் சேவை நமது நாட்டுக்குத் தேவை என்று உணர்த்துகிறது

கோயம்புத்தூர்
21-6-59 — கே. என். உபாமாலு

★

நிலத்தை நம்பினோர் நிலையைச் சீர்கேடு அடையாமல் பாதுகாக்கவும், சிறுபான்மையோருக்கும் தனியார் துறைக்கும் தகுந்த வலுவளிக்கவும், தனி மனிதனின் உரிமையை நிலைநிறுத்தவும், காங்கிரசுக்கு கம்யூனிஸ்ட் அல்லாத எதிர்க்கட்சியாக நல்லெண்ணங்களுடனும் பரந்த நோக்கங்களுடனும் ராஜாஜி அவர்களின் ஆசியைப் பெற்று அவதரித்துள்ளது "சுதந்திர"க் கட்சி. இந்தக் கட்சியை ஆதரிப்பது ஜனநாயகம் நேர்வழியில் செல்ல விரும்பும் ஒவ்வொரு பிரஜையின் கடமையாகும்.

கோவை-1
19-6-59 — ஒய். வி. விஸ்வேஸ்

★

ராஜாஜியின் புதிய கட்சி தோன்றியிருப்பது நாட்டின் நல்ல காலத்துக்கு ஒரு சிறந்த அறிகுறி.

திப்பிராஜபுரம்
11—6—59 — கே. பாலசுப்பிரமணியன்

★

நான் நீலகிரியில் படுகர் வகுப்பைச் சேர்ந்தவன். 1953-ம் வருஷத்தில் இந்தியா முழுதும் காங்கிரஸ் ஆட்சி எப்படி நடக்கிறது என்பதைப் பாதசாரியாக 11000 மைல்கள் நடந்து மூன்று வருஷங்களாகப் பார்த்து விட்டு 1956ல் ஊர் திரும்பினேன். அதற்குப்

பிறகுதான் காங்கிரஸிலுள்ள பற்றுதலை நான் இழந்து விட்டேன். புது சுதந்திரக் கட்சியில் சேர விரும்புகிறேன்.

ஆனிகோரை
15—6—59
டி. ராமன்

★

ராஜாஜி அவர்களின் சுதந்திரக் கட்சியை வரவேற்கிறேன். நம்முடைய புனிதமான தேசத்தைக் காப்பாற்றத் தான் ராஜாஜி மூலம் கடவுள் சுதந்திரக் கட்சியைத் துவக்கியுள்ளார் என்று நம்புகிறேன்

திருச்சி
11—6—59
கே. ஜி. ராமசாமி அய்யர்
அட்வகேட்

★

தற்காலம் நாட்டை ஆளும் கட்சியின் போக்கு பிடிபடாமல் ராஜாஜி அவர்கள் தமது முதிர்ந்த அரசியல் அனுபவமும் தெளிவும் கொண்டு தோற்றுவித்த புதிய கட்சிக்கு எனது அன்பும் ஆதரவும் என்றென்றும் உண்டு.

பேரத்தனூர்
11—6—59
ஓ.என் பழனியப்பசெட்டியார்

★

இன்றுள்ள நாட்டின் நிலைமையைக் கண்டு இதயம் துடிக்கிறது. எல்லாப் பொருள்களின் விலையும் ஏகத்தாறுக ஏறியுள்ளன. இந்நிலையில் புதிய கட்சி உருவாகி யிருப்பதைக் கண்டு அனைவரும் மகிழ்ச்சியடைகின்றனர். இந் நாட்டுக்குச் சுபிட்சமும், சமாதானமும் இக் கட்சி நிச்சயம் தேடித் தரும்.

சென்னை—17
12—6—59
வெ கிருஷ்ணசாமி சர்மா

★

நாட்டிலே பல கட்சிகள் இருந்தாலும் ஆளும் கட்சிக்குச் சரியான, எல்லாரும் வரவேற்கும் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு கட்சி இன்னும் ஏற்படவில்லை என்று வருத்தப் பட்டுக் கொண்டிருந்த பலருக்கும், புதிய கட்சி ஒரு ஆறுதல் அளிக்கும் வரப் பிரசாதமாக அமைந்துள்ளது.

ஈரோடு
12—6—59
கேசவலால் சேட்

★

இருளிலும், கல்லிலும், முள்ளிலும் திசை தெரியாமல் நடந்து செல்பவர்களுக்குப் பொழுது புலர்ந்தது.

சேலம்
14—6—59
ஆர். மாணிக்கம்

★

நலிந்து இன்று வாடிக் கிடக்கும் நம் அனைவரையும் ஒன்று திரட்டி நல் வாழ்வெனும் புதிய சமுதாயத்தில் இன்னல் ஒழிந்து தலை நிமிர்ந்து வீர நடை போடத் தமிழ் நாட்டுத் தனிப் பெருந் தலைவர், அரசியல் குளத்தில் நெடு நாள் நீந்திப் பயிற்சி பெற்ற மாவீரர் துவங்கியுள்ளது சுதந்திரக் கட்சி.

சென்னை—2
19—6—59
வி. சண்முகசுந்தரம்

★

ஸ்ரீராமன் சேது அணை கட்டும் போது அணில்கள் கைங்கர்யம் செய்ய முயன்றதுபோல் ஸ்ரீ ராஜாஜியின் ஆசீர்வாதத்துடன் ஆரம்பிக்கப்படும் புதிய கட்சிக்கு என்னால் ஆன பணிகளைச் செய்யக் காத்திருக்கிறேன்.

குடவாசல்
11—6—59
ஏ. கிருஷ்ணசாமி

★

1943-ம் ஆண்டிலிருந்து காங்கிரஸில் தீவிர அங்கத்தினனாகவும், மண்டல காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினனாகவும் இருந்து வந்தேன். காந்தீயத்தை விட்டு வேறு வழியில் போய்க் கொண்டிருக்கும் காங்கிரசிலிருந்து விலகிச் சுதந்திரக் கட்சியில் ஊழியம் செய்வதற்கு முடிவு செய்துள்ளேன்.

சென்னை—20
11—6—59
எஸ். ஏ. பழனிவேல்

★

பாரத நாட்டின் பாட்டாளிகளுக்கும் முக்கியமாக, விவசாயம் செய்யும் ஏழை உழவர்களுக்கும் உழைக்கப் போகும் சுதந்திரக் கட்சியை வரவேற்கிறேன்.

இலங்கை
15—6—59
எஸ். வி நடராசா

★

நாட்டிலே ஜனநாயகம் சாகடிக்கப் பட்டு வரும் இத் தருணத்தில், நம்மை வாழ்விக்க, உய்விக்க, ராஜாஜி அவர்கள் துணிந்து விட்டார்கள். அத் துணிவின் உதயமே சுதந்திரக் கட்சி.

மதுரை
13—6—59
என் ஆர். ராமகிருஷ்ணன்

### திருநெல்வேலியில்

திருநெல்வேலி ஜில்லா, நிலச் சொந்தக்காரர்கள் சங்கத்தின் காரியக் கமிட்டி, நிர்வாகக் கமிட்டி இவற்றின் சார்பாக விசேஷக் கூட்டம் ஒன்று கூடிற்று. விவசாயத் துறையில் அரசாங்கம் கடைப்பிடித்து வரும் எதேச்சாதிகாரப் போக்குகளைக் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேறின. விவசாயப் பெருமக்களின் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாக்க, ராஜாஜியின் சுதந்திரக் கட்சிக்கு அமோக ஆதரவு தெரிவித்தும், தீர்மானம் நிறைவேறிற்று. நெல்லை ஜில்லாவில் சுதந்திரக்கட்சிக்கு ஆதரவு திரட்ட ஸ்ரீ எஸ். ராமசாமிக் கோனார் அவர்களை கன்வீனராகக் கொண்ட சப் கமிட்டி ஒன்றும் நிறுவப்பட்டது.

# எச்சரிக்கை!



**இன்றைய ஜலதோஷம்**
**நாளை ப்ளூ, பிராங்கைடிஸ்**
**அல்லது நிமோனியாவாக மாறலாம்!**

**கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உடனடியாக உங்கள் ஜலதோஷ அவஸ்தைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பட்ட இந்த சக்தி வாய்ந்த மருந்தை தடவிக்கொள்ளுங்கள்**

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விஷப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் முதல் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை—தோன்றின உடனே, படுக்குமுன் விக்ஸ் வேபோரப்பை மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உடனேயே மூக்கு, தொண்டை, மார்பு இவைகளில் ஆஸ்வாஸம் அடைவதை உணர்வீர்கள், மேலும் நீங்கள் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் உங்கள் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுவீர்கள்.

**விக்ஸ் வேப்போரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்**

**1 மூக்கின் வழியே வேலை செய்கிறது.**

விக்ஸ்வேப்போரப்வெளியிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகள், நீங்கள் சுவாசிக்கும்போது உள்ளே போய் மூக்கிலும் தொண்டையிலுமுள்ள சளியையும் வலியையும் நீக்குகிறது.

**2 சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.**

விக்ஸ் வேப்போரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் மார்பகத்தில் அடைப்பை உடைத்தெறிகிறது. நீங்கள் துரிதமாக குணமடைவீர்கள்.

பெரிய நீல குப்பி

புதிய பச்சை டப்பி







# விக்ஸ் வேபோரப்

மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது.

VR-6

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

### 90

மக்கள் எல்லாரும் தத்தம் பெருமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். குல மகளிர் தம் கற்புத் தூய்மையை உயிரைவிட மேலாகக் காப்பதுபோல் காக்க வேண்டும்.

> ஒருமை மகளிரே போலப் பெருமையும்
> தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு

பெண்டிருக்குக் கற்பு எவ்வாறு சிறப்புத் தருவதும் உயிரைவிடப் பெரிதாகக் கருதப்படுவதுமான நிலையோ, அவ்வாறே மக்கள் தத்தம் பெருமையைக் காத்து வரவேண்டும். 'பெருமை' என்பது சமூகத்தில் தனக்குரிய மதிப்பு. ஒருமை என்பது கற்பு காத்த மகளிரது தூய்மை: அசையாத நிலை.

> அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
> குற்றமே கூறி விடும்

பெருந்தன்மையார் பிறருடைய குறைகளை மறைப்பார். பிறருடைய மானத்தைக் காப்பார்கள். பெருந்தன்மையற்ற சிறியார் பிறருடைய நற்குணங்களை விட்டு விட்டுக் குற்றங்களையே எடுத்துப் பேசுவார்கள்.

இதன் பொருள் என்னவென்றால், பிறருடைய குற்றங்களை எடுத்துக் கூறாமை பெருந் தன்மையின் இலக்கணம் என்பது.

பிறருடைய குற்றங்களை எடுத்துச் சொல்வது சிறுமைக் குணத்தின் போக்கு. 'சிறுமைதான்' என்பதில் 'தான்' பெருமையுடையார் அவ்வாறு செய்ய மாட்டார்கள் என்பதை உணர்த்தும்.

* * *

குணவானுக்கு அடையாளம் சொல்லுகிறார்.

> கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
> சொல்லா நலத்தது சால்பு

தவத்துக்குப் பல அடையாளங்கள் உண்டு. கொல்லாமை அவற்றில் சிறந்தது. அதுவே தவம் பூண்டவர்களை மற்றவர்களினின்று பிரித்துக் காட்டும் ஒழுக்கம். அதைப் போலவே பிறருடைய குற்றங்களை எடுத்துப் பேசாமை குணவானுக்குச் சிறந்த அடையாளம்.

*கொல்லா நலத்தது நோன்மை-கொல்லாமை என்னும் நலத்தில் நன்குநிற்பது நோன்மை.*

*பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு-பிறர் தீமையை எடுத்துக் கூறாமையில் சால்பு தங்கி நிற்கிறது.*

*தவத்துக்குக் கொல்லாமை சிறந்த உறுப்பு சால்புக்குப் பிறர் தீமை சொல்லாதது சிறந்த உறுப்பு.*

சால்பிற்குக் கட்டளை
யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும்
கொளல்.

சால்பாகிய பொன்னுக்கு அதன் மாற்று அறிவதற்கு உரைகல் எது என்பதைச் சொல்லுகிருர் தன்னை விடத் தாழ்ந்தவர்களிடம் சில சமயம் தோல்வியடைந்தால் அதைப் பெருந் தன்மையுடன் ஒப்புக் கொளல்

தாழ்ந்தவர்களாயிற்றே அவர்களிடம் தோல்வி யடைந்தோமே என்று அதைப் பற்றிக் கூச்சப்பட மாட்டார்.

துலையல்லார் - சமானமாகாதவர்கள்

சால்புக்கு முனிவர் மிக நுட்பமான ஒரு சோதனையை எடுத்துச் சொன்னுர்.

• •

நகல்வல்லர் அல்லார்க்கு
மாயிரு ஞாலம்
பகலும்பால் பட்டன்று
இருள்

நகுவது ஒரு சாதனம். பிறருடைய பிழையைக் கண்டபோதும், தனக்கு ஒரு இடர் நேரிட்டபோதும், அதைக் கண்டு கலங்காமல் நக வேண்டும். இயற்கையாக உள்ளத்திலிருந்து சிரிப்பு தோன்ற வேண்டும். அதுவே மனத்தின் சாந்தி நிலையைக் காட்டும்

அவ்வாறு நகுதலே துக்கத்தையும் கஷ்டத்தையும் கடந்து ஏறுவதற்குச் சாதனம். இப்படி நகுதல் செய்ய ஆற்றலும் நடுநிலைமையும் இல்லாதவர்களுக்கு இந்த உலகம் இருள் சூழ்ந்த அந்தகார உலகமாகும். பகலும் இருளும் ஒன்றேயாகும்.

பால் படுதல்-பிரிந்து நிற்றல்

இருள் வேறு, பகல் வேறு என்று பிரிந்து நிற்பதற்குப் பதிலாக எப்போதும் இருள் மூடிய உலகமாக இருக்கும்.

நகைப்பே வாழ்க்கைக்கு ஒளி தரும் என்றவாறு.

• •

எவ்வளவு கூர்மையுடையவராயினும் பண்பு இல்லாத மக்கள் மரங்களே ஆவர்.

அரம்போலும் கூர்மைய
ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா
தவர்.

கல்வியும் மூளையின் சக்தியும் பயனில்லை, பண்பு இல்லாமற் போனால்.

மக்கட் பண்பு—மக்களுக்கு உரிய பண்பு.

## ஸ்ரீஹரியின் சுற்றுப் பயணம்

| | |
|---|---|
| 11-7-59 | சென்னை எழும்பூரில் 20-15 திருவனந்தபுரத்துக்குப் புறப்பாடு |
| 12-7-59 | திருவனந்தபுரம் சேர்தல் 19-00 |
| 13-7-59 | திருவனந்தபுரம் சிடையரில் ரூம்-இருப்பு |
| 14-7-59 | டி. திரும்புகால் புறப்பாடு 08-05 |
| 15-7-59 | சென்னை சேர்தல் |
| 16-7-59 | சென்னை சென்ட்ரல் புறப்பாடு—10-15 கிராண்டிரங்க் எக்ஸ்பிரஸ் |
| 17-7-59 | ஹைதராபாத் 06-10 [தங்குமிடம் நியூ தாஜ்மஹால் ஹோட்டல் ஸைல்தான் பஜார்-ஹைதராபாத் போன் 4111 ] |
| 19-7-59 | ஹைதராபாத் புறப்பாடு-காசிக்கு [இடார்ஸி மார்க்கம்] 20-45 |
| 20-7-59 | இடார்ஸி |
| 21-7-59 | வாராணஸி—சேர்தல் 12-00... தங்குமிடம்: டாக்டர் பி. ரங்கசாமி வீ. கே 1/12, கங்க மகால், பட்விடோலா, வாராணஸி. |
| 22-7-59 | வாராணஸி புறப்பாடு — 18-46 டில்லிக்கு |
| 23-7-59 | டெல்லி சேர்தல். 10-15 தங்குமிடம்: ரயில்வே வெயிட்டிங் ரூம். |
| 23-7-59 | டெல்லி புறப்பாடு — 22-15 ஜாம் நகருக்கு |
| 25-7-59 | (ராஜகோட்) ஜாம் நகர் சேர்தல் 06-00 09-23 |
| 26-7-59 | ஜாம் நகர் புறப்பாடு — ஸூரத்திற்கு 10-44 |
| ,, | ராஜகோட் 13-45—14-10 |
| ,, | விராம்காம் 19-45—20-25 |
| 27-7-59 | ஸூரத் சேர்தல் 03-00 |
| ,, | ஸூரத் புறப்பாடு — பம்பாய்க்கு (20-53) |
| 28-7-59 | பம்பாய் சேர்தல் ( சென்ட்ரல் ) 05-55 [தங்குமிடம் : கல்வி காரியாலயம்] |
| 3-8-59 | பம்பாய் புறப்பாடு [V.T.] 23-15 பூனாவுக்கு |
| 4-8-59 | பூனா சேர்தல் 04-55 [தங்குமிடம்: திரு வெராமகிருஷ்ணய்யர், 69, ராஸ்தாபேட்டை, பூனா. |
| 5-8-59 | பூனா புறப்பாடு 18-35 சென்னைக்கு |
| 6-8-59 | சென்னை சேர்தல் 19-50. |

# இது மிட்லண்டாரின் தயாரிப்புதானென்று நிச்சயம் செய்துகொள்ளுங்கள்

**Midland**

டின்களில் வழங்கப்படும் அநேகவித பழவகைகளில் மிக அருமையானது மிட்லண்டாரால் தயார் செய்யப்பட்டவைதான் பழங்கள், காய்கறிகள்—ஜேம், பழரஸங்கள், ஜெல்லி முதலானவைகள் தயார் செய்யப்படுகின்றன. தேவைக்கு வேண்டியபடி தேர்ந்தெடுப்பதற்குரியதான இருபத்தெட்டு விதமான பழவகைகள் கிடைக்கின்றன. மிட்லண்டாருடைய தயாரிப்புகள் காலங்களில் கிடைக்கும் பழங்களைப்போல் வருஷ முழுவதும் கிடைக்கின்றன. பழம், காய்கறிவகைகள் தயாரிப்பவர்களில் நாட்டிலே மிகப் பெரியவர்கள் மிட்லண்டார்தான். ஆகையால்தான் தேர்ந்தெடுப்பதற்குரியதான மிகச் சிறந்த பழவகைகள் அவர்களிடமிருந்து கிடைக்க ஏதுவாகின்றன.




தயாரிப்பாளர்கள் :

**தி மிட்லண்ட் ப்ரூட் & வெஜிடபிள் ப்ராடக்ட்ஸ் ( இந்தியா ) மதுரா**

விநியோகஸ்தர்கள் :

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. ( இந்தியா ) பிரைவேட் லிமிடெட், பம்பாய்**

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள் : பாரி அன்டு கோ. லிட்.

# வேங்கையின் மைந்தன்

## மூன்றும் அத்தியாயம்

## ஒற்றைப் பனைமரம்

அடிகளார் விழித்த விழிப்பு அடி வயிற்றைக் கலக்கியது இருவருக்கும். கூர்வேலுக்கும் கொடுவாளுக்கும் அஞ்சாத இளங்கோ கூட அந்தக் கண்களை உற்றுப் பார்க்க முடியாமல் வேறு புறம் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். வீரமல்லன் தோள்மீது மெல்லத் தன் கையை வைத்து வெளியே அழைத்தான். அந்தப் பாறையைத் தாண்டிக் கொண்டு அப்பால் செல்வதற்கு வேறு வழிகள் இருக்கின்றனவா என்று இருவரும் பார்த்தார்கள். சுற்றிலும் செங்குத்தான பாறைகளும் முட்புதர்களுமே சூழ்ந்திருந்தன. அடிகளாருக்குப் பின்னால் சிறிது ஒளி தெரிந்ததால், அவரைத் தாண்டித்தான் பாறைகளுக்குள் புகுந்து செல்ல வேண்டும். அவராகவே வழி விட வேண்டும்; அல்லது அவரை அப்புறப் படுத்தி விட்டு உள்ளே நுழைய வேண்டும்.

வீரமல்லன் ரகசியமாக இளங்கோவிடம் கேட்டான்:

"பாண்டி நாட்டில் இன்னுமா சமணர்கள் இருக்கிறார்கள்? இவரைப் பார்த்தால் சமணத் துறவியைப் போல் தோன்றுகிறதே!"

"இன்னும் சமணர்கள் சிலர் இல்லாமலில்லை. பாண்டியர்களால் அழிக்கப்பட்டவர்களையும், அவர்களுக்குப் பயந்து வடக்கே குடி பெயர்ந்தவர்களையும் தவிர, எஞ்சியவர்கள் இந்தப் பகுதிகளில் அஞ்சி வாழ்கிறார்கள். நாடு நம்முடையதாகி விட்ட பிறகு, அவர்களுக்குப் போதிய பாதுகாப்பு இருக்கிறது. என்றாலும் பழைய பயம் அவர்களை ஆட்டிக் கொண்டிருக்கிறது."



அகிலன்



"இப்போது நாம் தான் இவரைக் கண்டு பயப்படுகிறோம்" என்றான் வீரமல்லன். அடுத்தாற்போல் அவனே, "இந்த அடிகளாரை ஒருபுறமாய் ஒதுக்கித் தள்ளிவிட்டு, நாம் குகைக்குள் புகுந்து போனால் என்ன?" என்று கேட்டான்.

"அபசாரம்! அபசாரம்!" என்றான் இளங்கோ. "இவரிடமே போய் வழி கேட்டுப் பார்ப்போம். இதற்காக இவரை நாம் துன்புறுத்த வேண்டாம். மாமன்னர் நமக்கு இட்டிருக்கும் கண்டிப்பான கட்டளையை நாம் மறந்து விடக் கூடாது. யாருடனும் எதற்காகவும் சண்டை நேருமென்று தெரிந்தால் அந்த இடத்தை விட்டு விலகச் சொல்லியிருக்கிறார். வீரமல்லா! கை தவறிக்கூட உடைவாளைத் தொட்டு விடாதே!"

மீண்டும் குகை வாயிலுக்குப் போய் எட்டிப் பார்த்தார்கள் இருவரும். அடிகளாரோ அடித்துவைத்த கற்சிலைபோல் இருந்த இடத்தை விட்டு நகராமல் இருந்தார். ஒருவேளை அவர் வடக்கிருந்து வீடு பெறுவதற்காக அந்தத் தனி இடத்துக்கு வந்திருக்கிறாரோ என்று இளங்கோ நினைத்தான். சமணத் துறவிகளில் சிலர் தம்முடைய கடைசி நாட்களை அன்னம், தண்ணீர், ஆகாரமின்றியே கழிப்பார்கள். தியானித்துக் கொண்டே, கட்டையைத் தரையில் கிடத்திவிட்டு, உயிரை அருகதேவனின் திருவடி நிழலுக்குக் கொண்டு செல்வார்கள். இப்படி உயிர் துறப்பதற்கு வடக்கிருத்தல் என்று சொல்வதுசமண மரபு.

ஆனால் அவர் வடக்கிருக்க வந்தவராகவும் இளங்கோவுக்குத் தோன்றவில்லை. வைரம் பாய்ந்திருந்த அவர் உடற்கட்டை நோக்கியபோது, ஆண்டு ஒன்றுக்கு அவர் பட்டினி கிடந்தாலும் அருகரின் அருள் அவருக்குக் கிட்டாதென்று தோன்றியது. மழிக்கப் பெறாத சடைமுடிகளுடன் அவர் விசித்திரமாகக் காட்சியளித்தார். நல்லவேளை; அவர் திகம்பரக் கோலத்தில் இல்லை. இடுப்பில் கோவணம் தெரிந்தது. காலமாறுதலுக்கேற்பச் சமணர்களும் மாறிக் கொண்டு வந்தார்கள்.

இளங்கோ தன் தொண்டையை மெல்லக் கனைத்தான்.

இடையில் மூடியிருந்த விழிகள் மீண்டும் திறந்தன.

"அடிகளாரின் அமைதியைக் குலைக்க வேண்டியிருக்கிறது; அதற்காக எங்களைமன்னிக்க வேண்டும்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான் இளங்கோ.

"அமைதியைத்தான் குலைத்து விட்டீர்களே!" என்று சிம்ம கர்ஜனை



செய்தார் துறவி. "நீங்கள் யார்? எங்கே வந்தீர்கள்? உங்களுக்' என்ன வேண்டும்?"

"அவரைச் சிறிது சாந்தமாகப் பேசச் சொல்" என்று இளங்கோவின் காதுகளில் கூறினான் வீரமல்லன். இளங்கோ தன் நண்பனை அசட்டை செய்துவிட்டு அவரிடம் பணிவுடன் கூறினான்: "நாங்கள் வழிப் போக்கர்கள். மலையைத் தாண்டிச் செல்வதற்கு எங்களுக்கு வழியைச் சொன்னால் உதவியாக இருக்கும்."

"வழிப் போக்கர்களுக்கு இங்கு வேலையே இல்லை. ஏன், மலைக்கு அடுத்தாற்போல் பத்துச் சமணக் குடும்பங்கள் பதுங்கி வாழ்

வது உங்கள் கண்களை உறுத்துகிறதோ? பாண்டியத் தொல்லைகள் மாண்டுபோன பிறகுமா இந்த அக்கிரமம்? உங்கள் வரவைக் கண்டாலே ஊரிலுள்ளவர்களெல்லாம் ஓடிப் போய்க் காட்டில் ஒளிந்து கொள்வார்களே!''

''நாங்கள் இருவரும் சோழ நாட்டைச் சேர்ந்தவர்கள்.''

''யாராயிருந்தால் என்ன?''

''அடிகளே! வெள்ளாற்றங்கரையிலும், கோனாட்டிலும், கானாட்டிலும் உங்களுக்குப் புகலிடம் கொடுத்துப் பாதுகாப்பளித்தவர்கள் நாங்கள். மதுரையிலிருந்து காஞ்சிக்குப் புறப்பட்டவர்களுக்கு வரவேற்பளித்து, நார்த்த மலையையும் சித்தன்ன வாயிலையும் குன்றாண்டார் கோயிலையும் கொடுத்தவர்கள் நாங்கள். சோழர்களிடம் கூடவா உங்களுக்குச் சீற்றம்?''

அவருடைய சீற்றம் இன்னும் அடங்கியபாடில்லை.

''நீங்கள் திரும்பிப் போகிறீர்களா, இல்லையா?'' என்று கத்தினார். கத்திவிட்டு, ''நீங்கள் திரும்பா விட்டால் என்னைக் கொன்று போட்டு, என் உடல் மேல் நடந்து செல்லுங்கள்'' என்றார். இளங்கோவுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. வீரமல்லன் அவன் காதருகில் சென்று, ''அடிகள் சொல்கிறபடியே செய்து விட்டுப் போனால் என்ன?'' என்று கேட்டான். அடிகளின் காதுகளிலும் இந்தப் பேச்சு விழுந்திருக்க வேண்டும்.

அவர் தம்முடைய குரலைச் சற்றுத் தாழ்த்திக் கொண்டு கூறினார்: ''சோழ நாட்டுச் சேனாபதி கிருஷ்ணன் ராமனை உங்களுக்குத் தெரியுமா? பத்து நாட்களுக்கு முன்பு அவர் இங்கு தரிசனத்துக்கு வந்து விட்டுப் போனார். அவர் சமணராகையால் அவரை யாரும் தடுக்கவில்லை. சைவர்களாகிய உங்களுக்கு இங்கு என்ன வேலை? கொலை செய்வதைப் பற்றி இவ்வளவு எளிதாகப் பேசுகிறீர்களே!''

சேனாபதி கிருஷ்ணன் ராமனுடைய பெயரைக் கேட்டவுடன் வீரமல்லன் நடு நடுங்கினான். இருவரும் பல முறைகள் துறவிக்குச் சிரம் தாழ்த்தி, வணக்கம் செலுத்திவிட்டு வந்த வழியே திரும்பினார்கள். சேனாபதி கிருஷ்ணன் ராமனுடைய பெயர் அவர்களிடம் மந்திரம் போல் வேலை செய்தது. சமணராக இருந்தாலும் இல்லறவாசி அவர். அவர் புதல்வர் மாராயன் அருண்மொழியும் சோழர்களின் பெருந் தனத்து அதிகாரிகளில் ஒருவராகப் பணியாற்றினார்.

சற்றுத் தூரம் நடந்தவுடன் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தான் இளங்கோ. வலதுபுறம் புதர்களுக்கப்பால் ஒரு மண் மேடு தெரிந்தது. ஒற்றைப் பனைமரம் அந்த மேட்டின் உச்சியில் தலை விரித்து நின்றது. அதையே கண்கொட்டாமல் நோக்கிய இளங்கோ, ''வீரமல்லா! எனக்குப் பசி எடுக்கிறது; வருகிறாயா, அந்தப் பனைமரத்தடிக்குப் போய் நுங்கு கிடைக்குமா என்று பார்த்து விட்டு வருவோம்!'' என்றான்.

''அது ஆண் பனையோ, பெண் பனையோ தெரியாது. பெண்பனையானால் அதில் நுங்கு இருக்குமோ, முற்றிய காய் இருக்குமோ தெரியாது. நீ வேண்டுமானால் போய்ப் பார்த்து விட்டு வா. நான் இங்கு காத்திருக்கிறேன்'' என்றான் வீரமல்லன்.

இதே பதிலை விரும்பியவன் போல் இளங்கோ செடிகளை விலக்கிக் கொண்டு புதருக்குள் சென்றான். ''பசிக்குப் பனம் பழமாக இருந்தாலும் விட்டு விடாதே!'' என்று வீரமல்லனின் குரல் பின்னாலிருந்து ஒலித்தது.

நல்ல வேளையாகக் குலை குலையாய் நுங்கு தள்ளிக் கொண்டிருந்த பெண் மரம் அது. விறு விறுவென்று மரத்தில் ஏறிய இளங்கோ உடனே குலைகளை வெட்டாமல் அதன் உச்சியில் ஏறி உட்கார்ந்து கொண்டான். நான்கு புறங்களிலும் தன் பார்வையை அலைய விட்டான். சமணத் துறவி தங்களுக்கு வழி விட மறுத்த திசையில் ஓர் பள்ளத்தாக்கு தெரிந்தது. அங்கே அவன் கண்ட காட்சியால் அவன் நெஞ்சு ஒரு கணம் நின்று விட்டு மீண்டும் துடித்தது.

ஆட்டு மந்தையைப் போல் அந்தப் பள்ளத்தாக்கில் குதிரைகள் மேய்ந்தன. எறும்புச் சாரைகளைப் போல் மனிதர்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். சூரியன் ஒளிக்குத் தன் கையால் நெற்றியை மறைத்துக் கொண்டு நன்றாக உற்றுப் பார்த்தான் இளங்கோ. எதேச்சையாக அவன் பார்வை மலைக் குகைக்குள் திரும்பிய போது, அங்கே வெளியில் வந்து, அந்தத் துறவி நின்று கொண்டிருந்தார். அவர் தன்னையே பார்க்கிறார் என்பதையும் இளங்கோ கண்டுகொண்டான். வேகமாக இரண்டு குலைகளை வெட்டிக் கீழே தள்ளி விட்டுச் சரசரவென்று இறங்கினான்.

குலைகளும் கையுமாக வரும் நண்பனை வீரமல்லன் மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றான்.

''எங்கே, மரத்தின் உச்சியிலேயே குடியிருக்கத் தொடங்கி விட்டாயோ என்று நினைத்தேன். சோலைமலைக் குரங்குகளுக்கு விவரம் தெரிய வந்தால் உன்னுடைய கொடும்பாளூர்க் கோட்டையே அதமாகிவிடும்!''

மரத்தின் மேலிருந்து தான் கண்ட காட்சியை அவன் தன் நண்பனிடம் சொல்லவில்லை. பதில் சொல்லாமல் சிரித்து மழுப்பி விட்டு, "உம், விரைந்து சாப்பிட்டு எழுந்து வா!" என்று எதிரிகளின் தலைகளைச் சீவுவது போல் பனங்காய்களைச் சீவி வைத்தான் இளங்கோ. வீரமல்லனோ மற்றவனுடைய பசியைப் பற்றி லட்சியம் செய்யாமல், சீவப் பெற்ற பனங்காய்களின் கண்களில் கட்டை விரலை விட்டு, வாயால் சுளை களை உறிஞ்சி உறிஞ்சித் தள்ளினான். வீரமல்லனின் விலாப் புடைத்து அவனுக்குக் களைப்பு ஏற்பட்ட பிறகு இளங்கோவுக்கும் பாதிப் பசி ஆறியது.

குதிரைகளை அவர்கள் அவிழ்க்கப் போகும் சமயம் அங்கே காய்ந்த சருகுகளின் சலசலப்புச் சத்தம் கேட்டு இருவரும் திடுக்கிட்டார்கள். அருவிக்கு அப்பால் நின்ற கடம்ப மரத்தின் மறைவிலிருந்து யாரோ ஒரு மனிதன் வெகு வேகமாக ஓடினான். எலும்புக்கூடு உயிர் பெற்றெழுந்து ஓடுவது போல் அத்தனை ஒல்லியாக, விகாரமாக இருந்தான் அந்த மனிதன். கவிழ்த்த சட்டியைப் போல் ஒட்டிக் கொண்டிருந்தது அவனுடைய பரட்டைத்தலை.

வீரமல்லன் அவன் முதுகுக்குக் குறி பார்த்துத் தன் உடைவாளை ஓங்கினான். இளங்கோவின் கரம் அதைப் பற்றிப் பிடுங்கிக் கொண்டது. என்றாலும் வீரமல்லன் சும்மா யிருக்கவில்லை. தன் இடுப்பில் சொருகியிருந்த வளை எறியை எடுத்துச் சுழற்றி விசினான். குறி தவறாத அந்த வளைஎறி அந்த எலும்பு மனிதனின் கணுக்காலில் பாய்ந்தது. "ஆ!" என்ற அலறலுடன் அவன் கீழே விழுந்து புரண்டு துடிதுடித்தான்.

அவனை நோக்கிப் பாயப் போன வீரமல்லனை இளங்கோ தடுத்து நிறுத்தி, "நீ புறப்படப் போகிறாயா, இல்லையா?" என்று அதட்டினான். "வந்த வேலையை மறந்து விட்டு வீண் கலவரத்தில் அகப்பட்டுக் கொள்ளாதே!"

"அவன் சுந்தர பாண்டியனுடைய ஒற்றனாக இருந்தால்? அவனை இப்படியே விட்டு விட்டு நாம் கிளம்பலாமா?"

"நாம் விழிப்போடிருக்கிறோம் என்பதை அவன் தெரிந்துகொண்டு போய்ச் சொல்லட்டும். வா! இனிமேல் நாம் இங்கே தங்கக் கூடாது."

இளங்கோவுக்கு, தன்னைப் பனை மரத்தின் மேல் அந்தத் துறவி பார்த்து விட்ட பிறகு, விவரிக்க முடியாத பரபரப்பு ஏற்பட்டிருந்தது.

"என்னுடைய வளை எறியையாவது எடுத்துக் கொண்டு போகலாம், வா" என்று அழைத்த வீரமல்லனிடம், "உனக்கு அதைப் போல் ஆயிரம் தருகிறேன்; குதிரைமேல் ஏறு," என்று பதில் அளித்தான் இளங்கோ.

வளைந்த மரக்கட்டையாலான சிறிய ஆயுதம் அந்த வளை எறி. தூரத்தில் மறைந்து செல்லும் மனிதர்களையோ, பிடிக்கு அகப்படாமல் ஓடுபவர்களையோ அதனால் தடுத்து நிறுத்த முடியும். தொலைவில் செல்பவன் நண்பனா எதிரியா என்று தெரியாத சமயம், அவன் உயிருக்கு ஆபத்து ஏற்படா வண்ணம் அவன் போக்கைத் தடுக்கச் சோழ வீரர்கள் இந்த வளைஎறியை வைத்திருந்தனர்.

வீரமல்லனின் வளைஎறி என்றைக்குமே தன் குறி தவறியதில்லை.

## நான்காம் அத்தியாயம்

# அருள் மொழியாள்

'மாதம் மூன்று மழையுள்ள நாடு' என்று கொடும்பாளூர்க் கோனாட்டைப் பற்றிப் புலவர்கள் பெருமையுடன் பாட முடியாது. ஆண்டுக்கு மூன்று மழை பெய்வதே அங்கு அபூர்வம். கொடும்பாளூருக்குத் தெற்கே அரைக் காத தூரத்தில் ஓடும் ஆற்றுக்கு வெள்ளாறு என்று பெயர் வைத்ததற்குப் பதிலாக மணலாறு என்றே அவர்கள் பெயர் வைத்திருக்கலாம். சங்க காலத்துக்கு முன்பே வேளிர்கள் அதன் கரையில் வந்து தங்கியதால் அந்தப் பெயர் பெற்றது என்று வரலாறு கூறுகிறது.

வேளிர்கள் மிகவும் பொல்லாதவர்கள்; உழைப்புக்கு அஞ்சாதவர்கள். அந்த வெள்ளாற்றின் வெள்ளத்தையும் அவர்கள் வீணாக்க வில்லை. மழைக் காலங்களில் முரட்டுத்தனமாய்ப் பாய்ந்தோடும் அந்தக் காட்டாற்றைக் கட்டுப்படுத்தி, தங்கள் நாட்டின் ஏரி குளங்களில் அவர்கள் நிரப்பிக் கொண்டார்கள். கொடும்பாளூரைச் சுற்றியிருந்த பெரிய பெரிய ஏரிகளும், கண்மாய்களும், குளங்களும் அந்த நாட்டின் பசுமையை வளர்த்தன. வெறிகொண்ட வேகத்தோடு கடலுக்குச் செல்ல விருந்த வேழமலை வெள்ளம் கோனாட்டுச் சாலை மரங்களாய், பூஞ்சோலைகளாய், நெற்கதிர்களாய் உருப் பெற்றுச் சிரித்தன. அது வேனிற் காலமாதலால் அப்போது



வெயிற் காலத்தில்
வேர்க்குருவின்
வேதனையிலிருந்து
விடுபடுங்கள்

*Kemp's*




கெம்ப்ஸ்

## வேர்க்குரு பவுடர்

அது வேர்க்குரு வராமல் தடுக்கிறது

★

தலையில் பொடுகு வராமல் பாதுகாக்க கெம்பஸ் ஃப்ளிடோரியல் ஹேர் டானிக்கையும் ஓ-டி-க்வினைனையும் உபயோகியுங்கள்.

*Kemp & Co. Ltd*

பம்பாய் - சென்னை - கல்கத்தா - டில்லி



ஊ-சு/ரு

# ஆரியன்

## உங்கள் பற்களுக்குப் பொருத்தமானவை



உங்கள் பற்களின் பாதுகாப்பை சரியான அமைப்புள்ள ஆரியன் பிரஷுக்கு விட்டுவிட்டீர்களேயானால், அது உங்கள் பற்கள் முழுவதையும் முற்றிலும் நன்றாகச் சுத்தி செய்யுமென்பதை நீங்கள் உறுதி செய்துகொள்ளலாம்.

ஸ்டாண்டர்டு சைஸிலும் சிறிய சைஸிலும் கிடைக்கும். மிகவும் நேர்த்தியான உயர்ந்த ரகம்-பிளாஸ்டிக் பெட்டியில் கிடைக்கிறது.




நன்றாகச் சுத்திசெய்கிறது, நீடித்து உழைக்கக் கூடியது.




பலனளிக்கும் சோப் நுரைக்கு ஆரியன் ஷேவிங் பிரஷையே எப்பொழுதும் உபயோகியுங்கள்.

கானல் நீரும் மணலும்தான் ஓடிக் கொண்டிருந்தன வெள்ளாற்றில். தென்னவன் இளங்கோவேளும் வீரமல்ல முத்தரையனும் அதன் வட கரையைக் கடந்து கொடும்பாளூரை நெருங்கி விட்டனர். மேலே வானில் இறங்கிக் கொண்டிருந்த மாலைச்சூரியன் மண்ணைப் பொன்னாக்கும் மந்திர ஜால வித்தைகளைச் செய்து கொண்டிருந்தான்.

கொடும்பை நகரின் தெற்கு வாயில் காவல் மண்டபம் அவர்கள் கண்களுக்குத் தெரிந்தது. மண்டபக் கலசத்தின் உச்சியில் அசைந்தாடிக் கொண்டிருந்த புலிக்கொடி அவர்களை வரவேற்றது. காவல் மண்டபம் நெருங்க நெருங்க அதை வியப்போடு உற்றுப் பார்த்தான் இளங்கோ. இரண்டு குதிரைச் சேவகர்களும் ஐந்தாறு காவலாளிகளுமே அங்கு நிற்பது வழக்கம். இப்போதோ வீரர்களும் பொது மக்களுமாகச் சேர்ந்த சிறு கூட்டமொன்றே அங்கு காத்திருந்தது. ஒரு குதிரைச் சேவகன் மட்டிலும் முன்னால் விரைந்து வந்து, இளங்கோவை இனம் கண்டு கொண்டு, மற்றவர்களுக்குக் கையசைத்தான்.

காவல் மண்டபத்தின் முரசுகள் அதிர்ந்தன. பல்வகை வாத்தியங்களும் ஒன்றாக முழங்கின. காரணம் புரியாமல் இளங்கோ திகைப்படைந்தபோது, கூட்டத்தினர் வானை முட்டும் குரலில் வாழ்த்தொலி வழங்கினார்கள்.

"கொடும்பாளூர் குலக் கொழுந்து இளவரசர் இளங்கோ வாழ்க!"

"மதுராந்தகப் பரகேசரி மூவேந்த வேளாரின் திருக்குமாரர் வாழ்க!"

"தென்னவன் இளங்கோவான பூதி விக்கிரமகேசரியின் பெயர் தாங்கும் வீர சோழப் படைத்தலைவர் வாழ்க!"

கூட்டத்தினரைக் கையமர்த்திய இளங்கோவேள், மக்கள் அங்கு குழுமியிருப்பதன் காரணத்தைக் குதிரைச் சேவகனிடம் கேட்டான். "போர்க்களத்துக்குப் போய் வெற்றியுடன் திரும்பும்போதல்லவா இதுபோன்ற வரவேற்பிருக்கும்? அப்படி ஒரு செயலும் நான் செய்து விட்டு வரவில்லையே! நான் இன்றைக்கு இங்கே வரப் போவதாக உங்களுக்கு யார் சொன்னது?"

"இளவரசே! சக்கரவர்த்திகள் தஞ்சை மாநகரிலிருந்து நம் நகருக்கு விஜயம் செய்திருக்கிறார்கள்."

"என்ன! என்ன! பெரிய உடையார் ராஜேந்திர தேவரா?"

"ஆமாம்; அவர்கள்தாம் தாங்கள் இன்று மதுரையிலிருந்து திரும்பக் கூடுமென்று கூறினார்கள்."

இராஜேந்திரரின் வரவு தெரிந்தவுடன் இளங்கோ வேளின் பிரயாணக் களைப்பு எங்கோ மறைந்து விட்டது. வந்தவர் அவன் வர வேண்டிய நாளையும் மறந்து விடவில்லை. இளங்கோ உடனடியாக அரண்மனைக்குப் பறந்து போகத் துடித்தான்.

"அவர்கள் மட்டிலும்தான் வந்திருக்கிறார்களா? இல்லை, உடன் கூட்டமும் வந்திருக்கிறதா?"

"உடன் கூட்டம் வரவில்லை. வீரமாதேவியாரும் இளவரசிகள் இருவரும் வந்திருக்கிறார்கள்."

உடன் கூட்டத்து அதிகாரிகள் யாரும் வரவில்லையென்பதால், பெரிய உடையாருடன் தனித்துப் பேச வாய்ப்புக் கிடைக்கும் என்று மகிழ்ந்தான் இளங்கோவேள். விருந்தினர் என்ற முறையில் அவர் வருகை தந்திருப்பது அவன் மகிழ்ச்சியை இரு மடங்காக்கியது. "வீரமல்லா! புறப்படு!" என்றான் தன் நண்பனிடம்.

குதிரைச் சேவகர்கள் சிலர் முன்னும் பின்னும் செல்ல, நண்பர்கள் இருவரும் நகருக்குள் நுழைந்தார்கள். திருவிழாக் காலத்து அலங்காரங்களுடன் கொடும்பாளூர் நகரமே புதுமை பெற்று விளங்கியது. எங்கு பார்த்தாலும் மாவிலைத் தோரணங்களும், ஈச்சங் குலைகளும், தென்னங் குருத்துகளும், குலை தள்ளிய வாழைகளும் வீதிகளை அழகு செய்து கொண்டிருந்தன. விளக்கு வைத்த நேரமாதலால் நகரம் முழுவதும் ஒரே ஒளி வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தது.

அரண்மனைக் கோட்டை வாயில் அவர்களை அன்புடன் வரவேற்றது.

முதலில், விருந்தினர் மாளிகைக்கு வீரமல்லனை அழைத்துச் சென்று அவனுக்கு வேண்டிய வசதிகளைக் கவனித்தான் இளங்கோ. ஏவலாட்கள் இருவரைத் தன் நண்பனின் குரலுக்குக் காத்திருக்கச் சொன்னான். "வீரமல்லா! நன்றாகச் சாப்பிட்டு விட்டுக் களைப்பாற உறங்கு. பெரிய உடையார் வந்திருப்பதால் அரண்மனைக்குள் ஒரே பரபரப்பாக இருக்கும். நாம் போய்வந்த விஷயங்களை இந்த நேரத்தில் அவர் கேட்க விரும்ப மாட்டார். அதிகாலையில் உன்னை வந்து அவரிடம் அழைத்துக் கொண்டு போகிறேன்" என்றான்.

வீரமல்லன் சிரித்துக் கொண்டே, "ஆமாம், இனிமேல் என்னைக் கவனிப்பதற்கு உனக்கு எங்கே பொழுதிருக்கப் போகிறது? நீ போய் உன் முக்கிய விருந்தாளியான இளவரசியை நன்றாகக் கவனித்துக் கொள்" என்றான்.

இளங்கோவின் வரவு சேவகர்கள் வாயிலாக அவன் அன்னையார் ஆதித்த பிராட்டிக்குத் தெரிந்து விட்டது. அந்தப்புரத்தின் முன் வாயிலில் தன் குமார

வின் வரவை நோக்கி அவர் காத்து நின்றார். அவரோடு இராஜேந்திர சோழரின் மனைவியார் வீரமாதேவியும், அவர் சிறிய பெண் அம்மங்கை தேவியும் சேர்ந்து கொண்டனர். அம்மங்கை தேவிக்கு இளங்கோவைக் கண்டவுடன் குதூகலம் தாங்கவில்லை. அறிவறியாப் பருவத்தினளாக இருந்ததால் இளங்கோவேள் அவளிடம் மட்டும் எப்போதும் கலகலப்பாகப் பேசுவான். அவனை அவன் தாயாரிடம் கூடப் பேசவிடாதபடி வளைத்துக் கொண்டாள் அம்மங்கை.

குளித்து விட்டு, மாற்றுடை உடுத்திக் கொண்டு, மேல் மாடக் கூடத்திலிருந்த தன் தந்தையாரையும் சக்கரவர்த்தியையும் பார்க்கச் சென்றான் இளங்கோ. அந்தப்புரத்தில் அருள்மொழியைக் காணவில்லை. வீரமல்லன் பேசிய பேச்சால் அவளுடைய நினைவு அவனிடம் எழுந்து கொண்டிருந்தது. அதை எண்ணிப் புன்னகை செய்து கொண்டே படிகளில் ஏறிக் கூடத்தின் வாயிலை அடைந்தான்.

மேல் மாடக் கூடத்தில் அலங்காரத் தூண் விளக்கு தும்பைப் பூக் கொத்தைப் போல் தன் எண்ணற்ற சுடர்களால் ஒளி உமிழ்ந்து கொண்டிருந்தது. சேர நாட்டு வேழம் பதித்த தேக்குமரக் கட்டிலில் திண்டுகளின் மீது கம்பீரமாய்ச் சாய்ந்து கொண்டிருந்தார் இராஜேந்திரர். அருகே மற்றொரு ஆசனத்தில் மதுராந்தக வேளார் அமர்ந்திருக்க, அருள்மொழி தன் தந்தையாருக்குப் பக்கத்தில் துவளும் முல்லைக்கொடியைப் போல நின்றிருந்தாள்.

பெரிய உடையார் இராஜேந்திரருக்கும் தன் தந்தையாருக்கும் வணக்கம் தெரிவித்தான் இளங்கோ. அருள்மொழி அங்கிருப்பது தெரிந்தும் கூட அவன் அவளை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அவள் அவனை "வாருங்கள்" என்று மெல்ல அழைத்து விட்டு, அங்கிருந்து விரைந்து வெளியேறப் போனாள்.

"வா, இளங்கோ! இப்படி வா!" என்று அவனுக்குத் தம் அருகிலிருந்த ஓர் இருக்கையைச் சுட்டிக் காட்டினார் இராஜேந்திரர். பிறகு அருள்மொழியையும் அழைத்தார். "அருள்மொழி! நீயும் வா. பிறகு போகலாம்."

அருள்மொழி திரும்பி வந்து, தூண் விளக்கின் தீபங்களைத் தூண்டிவிடும் பாவனையில் தன் தந்தையின் அருகில் நின்றாள். ஒளியில் புத்தெழில் பெற்ற அவள் முகம் உயிர் துலங்கும் பொற்சிலையின் முகமெனத் திகழ்ந்தது.

"என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்?" என்று, எடுத்த எடுப்பில் வினவத் தொடங்கினார் சக்கரவர்த்தி.

இராஜேந்திரரின் உடல் எந்த இடத்திலிருந்தாலும் அவர் உள்ளம் எங்கே இருக்கிறதென்பதைத் தெரிந்துகொண்ட இளங்கோ, அருள்மொழி அருகில் இருந்ததால் மறுமொழி கூறத் தயங்கினான். 'அரசியல் அந்தரங்கச் செய்தியை அருள்மொழியின் முன்னிலையில் கூறலாமா?' என்று கேட்பதைப் போல், அவளைப் பார்த்துவிட்டு அவரை நோக்கினான்.

"தாராளமாய்ச் சொல்லலாம்; அருள்மொழியும் தெரிந்து கொள்ளட்டுமே!" என்றார் மாமன்னர். பிறகு, "அருள்மொழி எந்த ரகசியத்தையும் காப்பாற்றுவாள்; அவள் தங்கை அம்மங்கையோ எதையும் மனத்தில் வைத்துக் கொள்ள மாட்டாள்" என்றார்.

தான் கண்ட காட்சிகளையும், கேள்வியுற்ற செய்திகளையும், இடையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையும் விவரமாகக் கூறினான் இளங்கோ.

அந்தச் செய்தியின் சாரம் இதுவே :-

சுந்தரபாண்டியன் தலைமையில் மற்ற இரு பாண்டிய மன்னர்களான மானாபரணனும் வீரகேரளனும் ஒன்றுகூடியிருக்கிறார்கள். மதுரையைச் சுற்றியுள்ள மலைச்சாரல்களிலும், தெற்கே பொதிகை மலைப் பக்கத்திலும் படை வீரர்கள் திரட்டப்படுகிறார்கள். எலிமலை நாட்டுச் சேரன் மூவர் திருவடிக்கும் பாண்டியர்களுக்கும், சோழர்களுக்கு எதிராக நட்புறவு ஏற்பட்டிருக்கிறது. இரவோடு இரவாகச் சேர நாட்டு வீரர்கள் ஈழ மன்னர் மகிந்தனின் படைப் பெருக்கத்துக்காக அனுப்பப்படுகிறார்கள். மேலைச் சளுக்கரைத் தூண்டிவிடும் முயற்சியிலும் பாண்டியர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்.- ஒரே சமயத்தில் தெற்கிலிருந்து ஈழப் படையும், வடக்கிலிருந்து மேலைச் சளுக்கப் படையும், உள்நாட்டில் பாண்டிய சேரப் படைகளும் போர் துவக்கிச் சோழப் பேரரசைப் பணிய வைக்க வேண்டுமென்பது அவர்கள் திட்டம்.

"நம்முடைய தெரிந்த படைகளின் தலைவர்கள் என்ன கூறினார்கள்?" என்று கேட்டார் சக்கரவர்த்தி.

"தெரிந்தும் தெரியாததுபோல் நடந்து கொள்ள வேண்டுமென்பது நமது பேரரசின் கட்டளையாம். அப்படியே செய்து வருகிறார்கள். தவிரவும், நமது மண்டலச் சேனாபதியின் ஆணைப்படி நம் வீரர்கள் பலர் பாண்டிய சேரப் படைகளில் அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் போல் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் கொடுத்துள்ள விவரங்களை

நோக்கினால், நம்முடைய மண்டலத்துக்கு இன்னும் ஆறுமாத காலத்தில் நான்கு திசைகளிலிருந்தும் ஆபத்துச் சூழலாம் என்று தெரிகிறது."

இராஜேந்திரர் இதுகேட்டுத் தமக்குள் நகைத்து விட்டு, "சோழ நாட்டுத் தமிழர்களை 'வடதேசத்தவர்கள்' என்று கூறிச் சுந்தர பாண்டியன், தென் மண்டலத் தமிழர்களிடம் வெறியூட்டி வருவது மெய்தானா?" என்று வினவினார்.

மாமன்னரின் இந்தக் கேள்வியைச் செவியுற்ற கொடும்பாளூர் மதுராந்தக மூவேந்த வேளார் பயங்கரமாகச் சிரித்தார். "மணி முடியைப் பறித்துக் கொண்டு துரத்திவிட்ட ஈழ நாட்டார் அவர்களுக்கு உறவினர்களாகி விட்டார்கள். முடி கொடுத்து அவர்களை நாடாள விட்டிருக்கும் நாம் 'வடவர்' களாகி விட்டோம்! அப்படியானால் தென்பாண்டித் தமிழர்களுக்கு மதுரைத் தமிழர்கள் வடவர்களா?"-மதுராந்தகரின் சிரிப்பு அடங்கவில்லை.

மணிமுடி என்ற சொல்லைக் கேள்வியுற்றவுடன் பெரிய உடையார் இராஜேந்திரரின் முகத்தில் உணர்ச்சி மின்னல்கள் பாய்ந்து நெற்றி நரம்புகளாய்ப் புடைத்தெழுந்தன. கட்டிலிலிருந்து கீழே குதித்து, தீபச் சுடர்களின் அருகே போய் நின்று கொண்டு பயங்கரமாய் விழித்தார். அவருடைய மீசை துடித்த துடிப்பும், விழிகள் கக்கிய நெருப்பும், தேகம் பதறிய பதற்றமும் அங்கிருந்தவர்களைத் திகைப்படையச் செய்தன. மாமன்னருக்கு, அவர் தம் தந்தையாரிடம் ஆணையிட்டுச் சொன்ன சொல் நினைவுக்கு வந்து விட்டதா? வேங்கைகள் உலவும் தமிழகத்தின் மானம் ரோகணத்துக் காட்டில் நரிப்புதருக்குள் சிறையிடப் பட்டிருப்பதை அவர் நினைத்துப் பார்க்கிறாரா? மதுராந்தக வேளார் மெல்ல எழுந்து சென்று பேரரசருக்குப் பின்புறமாக வந்து நின்றார்.

தீபச் சுடரொளியைப் பார்த்தவாறே வேங்கையின் மைந்தன் உறுமினார்:

"ஈழத்திலுள்ள தமிழ் முடியை நாம் வென்று வராவிட்டால், இத்தனை பெரிய சோழ சாம்ராஜ்யத்தை நாம் கட்டி ஆள்வதில் பொருளே இல்லை! மதுராந்தகரே, இந்தச் சோழ மண்டலத்தை மேலைச் சளுக்கரும் பாண்டிய சேரரும் ஒன்று கூடி அழித்தாலும் அழித்துக் கொள்ளட்டும். நம்முடைய முதல் போர் தமிழன் ஒருவனுடைய மணி முடிக்காக!"

"சோழ மண்டலத்து வீடுதோறும் பாசறைகள்; கடல் போன்ற பெரும் படையுடன் கடலைக் கடப்போம்" என்றார் மதுராந்தகர்.



இராஜேந்திரரின் உணர்ச்சிக் குமுறல் அடங்கி, அவர் சிந்தனைத் தெளிவோடு மேலே பேசினார்: "நமக்கு ஈழ நாட்டுப் பெரு மக்களிடம் விரோதமுமில்லை; வெறுப்புமில்லை. நம்முடைய ஆட்சியில் இப்போது ரோகணத்தைத் தவிர மற்ற ஈழப் பகுதிகள் முழுமையும் அடங்கியிருக்கின்றன. ஆனால் ஈழ நாட்டு மக்களின் விருப்பப்படியே அவர்களைக் கொண்டு ஆட்சி செய்து வருகிறோம். ஜனநாதமங்கலம் என்று நாம் அதன் தலைநகருக்குப் பெயர் சூட்டியிருப்பதிலிருந்தே, குடிமக்களாட்சியில் நம் தலையிடாத் தன்மை அவர்களுக்குத் தெரிந்திருக்கும். நாம் தொடுக்கும் போரால் ஈழ நாட்டு மக்களுக்கு இன்னல் ஏதும் நேரக் கூடாது. ஏன், ரோகணத்தரசர் மகிந்தர் மீது கூட நமக்கு விரோதமில்லை. மீண்டும் ஒரு முறை அவருக்குத் தூது அனுப்பி நமக்குரிய பொருளை நட்பு முறையில் கேட்டுப் பார்ப்போம்."

"ஒரு காலும் கொடுக்க மாட்டார் சக்கரவர்த்தி! சென்ற போரில் நாட்டை நம்மிடம் கொடுத்து விட்டு, அந்த முடியை எடுத்துக் கொண்டு, காட்டில் ஓடி ஒளிந்தவர் அவர்."

"இம் முறையும் முடி கிடைக்கா விட்டால்........." என்று பற்களை நறநற வென்று கடித்தார் இராஜேந்திரர்.

இளங்கோ, மாமன்னருக்குமுன் போய்ப் பணிவுடன் நின்று கொண்டு, அவர் முகத்தை பயபக்தியுடன் ஏறிட்டுப் பார்த்தவாறே, "சக்கரவர்த்திகளிடம் ஓர் விண்ணப்பம்" என்றான்.

"என்ன?"

"ஈழத்துக்குச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிடைக்க வேண்டும்."

"நீயும் வருகிறாய்" என்றார் பேரரசர்.

இதைக் கேட்ட இளங்கோவின் தலை அவன் கழுத்தில் பெருமை தாங்காமல் சுற்றத் தொடங்கியது. 'நீயும் வருகிறாய்' என்று அவர் கூறியதிலிருந்தே, அவரும் வருகிறார் என்பது உறுதியாகி விட்டது. அவனுக்குத் தரையில் நிற்பது போலவே தோன்றவில்லை.

ஓர் இரும்புக்கரம் இப்போது அவன் தோளின் மீது விழவே, அந்தக் கரத்துக்குரிய தன் தந்தையாரைத் திரும்பிப் பார்த்தான் அவன். கருங்காலிச் சிற்பம் போல் துண்டு துண்டாகத் தெரிந்தன மதுராந்தக வேளாருடைய உடற்கட்டின் தசைநார்கள்.

நெடிதுயர்ந்து நின்ற அவர் தம்முடைய ஒரே மைந்தனை இளங்கோ வேளின் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டு கூறலானார்:

"நீ ஈழத்துக்குப் புறப்படுவதால் கொடும்பாளூர்க் குலமே பெருமையடைகிறது. ஆனால் அந்தப் பெருமை எங்கேயிருக்கிறது என்பதை மட்டிலும் மறந்து விடாதே! நீ மணிமுடியோடு தான் திரும்பவேண்டும். வெற்றியோடு தான் இந்த மண்ணை வந்து மிதிக்க வேண்டும். ஈழத்துப் பட்ட உன் பெரிய பாட்டனார் கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் ரத்தம் உன் உடலிலும் ஓடுகிறது. வெற்றி அல்லது வீரமரணந் தான் நமக்கு வேண்டும். தெரிகிறதா, இளங்கோ? நீ திரும்பா விட்டாலும் முடி திரும்ப வேண்டும்!"

இராஜேந்திர சோழரே மதுராந்தக வேளாரின் இந்தச் சொற்களைக் கேட்டு அதிர்ச்சியுற்றுப் போனார். அரசுரிமை பெறவிருக்கும் தம்முடைய ஒரே புதல்வனிடம் தந்தை பேசுகிற பேச்சா இது? கொடும்பாளூர் வேளார் கொடுமை நிறைந்தவராக இப்போது மாமன்னரின் கண்களுக்குக் காட்சியளித்தார். என்றாலும் அவர் போக்கில் இராஜேந்திரர் தலையிடத் துணியவில்லை.

"ஆ!" என்ற கூக்குரல் விளக்கு அருகிலிருந்து எழுந்தது. அருள்மொழியின் குரல்தான் அது.

"என்ன அருள்மொழி?" — தந்தை வினவினார்.

"சுடரில் விரலைச் சுட்டுக் கொண்டேன்" என்றாள் அவள்.

அப்போது அவள் இளங்கோவைப் பார்த்த பார்வை கடலின் ஆழத்தை விடக் கொடிய ஆழம் நிறைந்ததாகத் தோன்றியது. விரலை அவள் சுட்டுக் கொள்ளவில்லை என்பதையும், மதுராந்தக வேளாரின் சொற்களால் நெஞ்சையே சுட்டுக் கொண்டாள் என்பதையும் இளங்கோ கண்டுகொள்ளவில்லை. இவற்றையெல்லாம் கண்டு கொள்ளாதவர்போல் கவனித்துக் கொண்டிருந்தார் மாமன்னர் இராஜேந்திரர்.

கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டு அருள்மொழி அந்த இடத்தை விட்டு விரைந்து சென்றாள். போகும் போது அவள் விட்ட பெருமூச்சின் சீற்றம் இளங்கோவின் செவிகளுக்கு மட்டும் எட்டியது.

அதற்கு மேலும் அவள் தங்குவதை விரும்பமாட்டாள் என்பதை அறிந்த இராஜேந்திரர் அவளைத் தடுத்து நிறுத்த முற்படவில்லை.

(தொடரும்)

கொச்சைத் தமிழ்

## ஓட்டக்கூத்தன் பாட்டுக்கு......

'ஓட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' என்பது போல ஒரு பொருளைக் குறிப்பதற்கு இரு சொற்கள் கொச்சைத் தமிழில் வழங்கும். கூறைப் புடைவை என்பது அப்படிப்பட்ட சொல். தமிழ்நாடெங்கும் கூறை என்ற சொல் முன்னாளில் வழங்கிற்று. புடைவை என்பது அதன் பொருள். புடைவை நெய்யும் நாட்டுக்குக் கூறை நாடு என்ற பெயர் அமைந்தது. அதுதான் மாயூரத்துக்கு அருகேயுள்ள 'கொரநாடு'. நாளடைவில் கூறை என்பது அரும்பதமாய்விட்டது. அதன் பொருள் மழுங்கிவிட்டது. அதனால் கூறைப் புடைவை என்று இப்போது வழங்குகின்றது. பழுதை என்பது ஒரு பழமையான சொல். கயிறு என்பது அதன் பொருள். இப்போது இரண்டையும் சேர்த்துப் 'பழுதைக் கயிறு' என்று கூறுகின்றார்கள்.

இவ்வாறு இரு வேறு மொழிச் சொற்களை இணைத்துப் பேசும் முறையும் கொச்சைத் தமிழில் உண்டு. 'கேட்டு வாசல்', 'சாப்புக் கடை' முதலிய வார்த்தைகளில் ஆங்கிலமும் தமிழும் இணைந்து வருகின்றன. 'நல்லவருக்கு அடையாளம் சொல்லாமல் பறையாமல் போவது' என்று தென்னாட்டிலே ஒரு பழமொழியுண்டு. 'சொல்லாமல் பறையாமல்' என்பதில் சொல்லாமல் என்பது தமிழ். பறையாமல் என்பது மலையாளம்.

— பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை

# அவள் எவ்வளவு அழகாயிருக்கிறாள்...

## அவள் உபயோகிப்பது பாண்ட்ஸ்

நீங்களும் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், அழகாகவும் வைத்துக் கொள்ள **பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

இலேசானதும் பனிக்கட்டி போல் மென்மையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தின் மென்மையான அழகைப் பாதுகாத்து, அதை எழிலுடனும், பொலிவுடனும் இருக்கச்செய்யும். எண்ணெய்ப் பசையில்லாத இந்த கிரீம் தேய்த்துக்கொண்ட மறு விநாடியிலேயே மறைந்து விடுகிறது. பவுடர் போட்டுக் கொள்வதற்குமுன் இந்த க்ரீமைத் தடவிக்கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.




**சருமத்தை சுத்திகரிக்கும் சிறந்த க்ரீம்**
தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை முகத்தில் தடவுங்கள். அது உங்கள் மிருதுவான சருமத்தை சுத்தம்செய்து முக அழகைப் பாதுகாக்கும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்ட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

# கௌரி கல்யாணம்

**காந்தன்**

நம் தமிழகத்தில் சினிமாப் படங்கள் ஏராளமாக வெளிவருவதைப் போல் இப்பொழுது நாடகங்களும் ஏராளமாக அரங்கேற்றப்படுகின்றன. நாடகக் காட்சி ஜோடனைகளும் மிக மிக முன்னேற்றம் அடைந்து வருகின்றன. இதைப் பார்க்கும்போது என் மனத்தில் ஒரு சந்தேகம் தோன்றியது. நாடகம் முன்னேற்றம் அடைந்திருக்கிறதா? இல்லை, சினிமா முன்னேற்றம் அடைந்திருக்கிறதா என்பதுதான் அந்தச் சந்தேகம்.

சினிமா முன்னேற்றம் அடைந்திருப்பதாகத்தான் பொதுவாக எல்லாருக்கும் தோன்றும். ஓரளவுக்கு அது உண்மையும்கூட. ஆனால் குறிப்பிட்டுப் பாராட்டத்தக்க முறையில் தமிழ்ப் படம் முன்னேறியிருப்பதாக நாம் மனப் பூர்வமாக ஒப்புக் கொள்வதற்கில்லை.



ஒரே கருத்தைத் தழுவிப் பல படங்கள் தயாரிப்பது, பல படங்களில் பலமுறையும் வந்த காட்சிகளையும் கருத்துக்களையும் துணிந்து இன்னொரு முறை இன்னொரு படத்தில் புகுத்துவது போன்ற பிற்போக்கு மனப்பான்மை இன்னும் நம் படாதிபதிகள் மனத்திலிருந்து அகலவே இல்லை.

தாங்கள் எத்தகைய படங்களைத் தயாரித்தாலும் விமரிசகர்கள் அவற்றைப் பாராட்டி எழுதிவிட வேண்டும் என்னும் எண்ணமும் மாறவில்லை.

இதையெல்லாம் யோசித்துப் பார்த்துவிட்டு நம் நாடக மேடைகளின் பக்கமாகக் கவனத்தைச் செலுத்தினால், பல நாடகங்கள் தோல்வியடைந்து விட்டாலும், சில நாடகங்கள் அபாரமாக வெற்றியடைந்திருக்கின்றன என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

தொழில் நடிகர்கள் நடத்தும் நாடகங்கள் வெற்றி பெறுவது ஒரு பெரிய அதிசயமில்லை. அமெச்சூர் நாடகச் சங்கங்கள் வெற்றிகரமாக நடத்துவதுதான் பாராட்டத்தக்கதாகும். அமெச்சூர் நாடகக் குழுவினருக்கு உள்ள தொல்லைகளுக்கு எல்லையே இல்லை. அவர்கள் எவ்வளவு சிறப்பாக நாடகம் நடத்தி நல்ல பெயர் வாங்கினாலும் அதில் நல்ல வசூலை எதிர்பார்க்க முடியாது. அப்படியே வசூல் பிரமாதமாகக் கிடைத்ததாக வைத்துக்கொண்டாலும், கணக்குப் பார்த்தால் நஷ்டம்தான் லாபமாக இருக்கும்! காரணம், நாடகம் நடத்துவதற்கு ஆகும் செலவு அதிகமாக இருப்பதுதான். நாடகத்தில் உள்ள ஆர்வம்தான் அமெச்சூர் நடிகர்களை வாழ வைத்திருக்கிறது.

சினிமாப்படங்களை அடிக்கடி பார்த்து அலுத்துப் போன எனக்கு ஒரு நல்ல சமூக நாடகத்தைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது.

20-6-59 அன்று சென்னை ஸ்ரீ கலாநிகேதன் ஆதரவில், ராஜா அண்ணாமலை மன்றத்தில் இந்தியன் நேஷனல் ஆர்ட்டிஸ்ட் நடித்த "கௌரி கல்யாணம்" என்ற நாடகத்தையே குறிப்பிடுகிறேன்.

"எங்கிருந்தோ வந்தான்" என்னும் அரிய நாடகத்தை அருமையாக நடத்திப் புகழ்பெற்ற குழுவினர்தான் இந்நாடகத்தின் நடிகர்கள் என்னும் எண்ணம்தான் எனக்குச் சிறிது உற்சாகத்தை அளித்தது.

"கௌரி கல்யாணம்" என்னும் நாடகம் முன்பு 'கல்கி'யில் வெளியான "களவும் கற்பானால்" என்னும் பூவாளூர் சுந்தரராமன் எழுதிய சிறுகதையை ஆதாரமாகக் கொண்டது. மேற்படி கதையோடு நிறையப் பல சம்பவங்களைச் சேர்த்துச் சுவை ததும்பும் நாடகமாக்கியிருக்கிறார்கள்.

செல்வச் செருக்கும், பரம்பரை கௌரவமும் அளவுக்கு மிஞ்சித் தலைக்கேறிய சீமை ஒட்டுச் சிதம்பர உடையார் பரம்பரையில் தோன்றிய "நாவன்னா" என்றுகூறப்படும் நடேச உடையார் அச்சுதமங்கலம் கிராமத்தின் செல்வச்சீமான். கௌரி அவருடைய மூத்த மனைவியின் மகள். முத்து தர்மலிங்கத்தின் மகன்; நேர்மையின் உருவம். பொதுநலச் சேவையில் பொங்கும் ஆர்வம் கொண்டவன். அவனுக்கும் கௌரிக்கும் காதல்.

கமலம் "நாவன்னா"வின் இரண்டாந் தாரம். முத்து – கௌரி காதலுக்குக் குறுக்கே நிற்கும் முட்டுக்கட்டை–'வில்லி.' நெருப்புக்குக் காற்று தோழமையானதுபோல் கமலத்தின் சதித்திட்டங்களுக்குப் பட்டாமணியம் பக்கிரிசாமி உறுதுணையாயிருக்

கிறார். ஒன்றும் இல்லாத விஷயம் பெரிதாக்கப்பட்டு, தர்மலிங்கத்துக்கும் 'காவன்னா'வுக்கும் இடையே பெரும் பகை மூளுகிறது. பகையின் பலனாக, கௌரி-முத்துவின் காதல் முறிக்கப்படுகிறது. முத்து கௌரிக்குத் திருட்டுத் தாலி கட்டினதாகப் பொய்க் குற்றம் சாற்றப்படுகிறான்.

மணமான பின்பு ஒரு மாது நெறி தவற முயல்வதற்கும் இளம் பெண் ஒருத்தியின் வாழ்வில் ஏற்படும் சலனங்களுக்கும் வேற்றுமை உண்டு. கமலம் தன் உள்ளத்தில் விகம் காமப் புயலை முத்துவுக்கு அறிவிக்க முயலும் இடம் கொஞ்சம் சங்கடமாயிருந்தாலும் அது நிறைவேறாமல் போனதுடன் அவளும் அழிந்து போய் விடுவதால் கடைசியில் ஆறுதல் அடைந்தேன்.



கேட்டையுடன் அசட்டு வேஷத்தில் வந்து ஹாஸ்ய விருந்தளித்த அனுஷமும், விருச்சிகமும். வலப்புறம் ஓரத்தில் நிற்பவர் பட்டாமணியம் பக்கிரிசாமி.

முத்துவாக நடிக்கும் ராகவன் ஒரு நல்ல நடிகர். பல நாடகங்களில் திறமையாக நடித்துப் புகழ் பெற்றவர். நல்லவனாகவும், அதே சமயத்தில் சிறுமை கண்டு சீறும் இயல்பு கொண்டவனாகவும் இருக்க வேண்டிய பாத்திரம் முத்து. அந்தப் பாத்திரத்துக்கு ராகவன் மிக மிகப் பொருத்தமானவர் என்பதை அவர் நடிப்பும், பேச்சும், முக பாவங்களும் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

கௌரியின் பாத்திரத்தை ஏற்ற வஸந்தா கௌரியாகவே மாறி விட்டாள் என்று கூறினால் மிகையாகாது. உணர்ச்சியும், துடிப்பும் கொண்ட அந்தப் பாத்திரத்தை மிகவும் லாகவமாகக் கையாண்ட வஸந்தாவுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. முத்துவினிடம் அன்போடு பழகிய போதும், சிற்றன்னையின் சிறுமதியினால் ஏற்பட்ட சிறுமைகளுக்குத் தாழ்ந்த போதும், தந்தை 'காவன்னா'வின் கொடுங்கோன்மைக்கு அஞ்சாமல் எதிர்த்த போதும் வஸந்தாவின் நடிப்பு சிகரத்தில் இருந்தது.

எம். எஸ். எஸ். பாக்கியம் கமலமாக வருகிறார். அது கொஞ்சம் சிரமமான பாத்திரம். ஆனால் அவர் அனாயாசமாக நடித்தார். சதித் திட்டங்கள் போடும் போதும், பேசும் போதும் அவரது முக பாவங்கள் மிகவும் பாராட்டத் தக்கதாயிருந்தன.

கமலத்தின் சதித் திட்டங்களைச் செயலாக்க முயன்ற பட்டாமணியமும் பிரமாதமான பாத்திரம். அந்தப் பாத்திரத்தை ஏற்றவரும் நன்றாய் நடித்தார்.

சீமை ஓட்டுச் சிதம்பர உடையார் பரம்பரையில் வந்த "காவன்னா"வை மேடையில் பார்த்தபோது நான் அயர்ந்து விட்டேன். உண்மையிலேயே அப்படி ஒரு பரம்பரை இருந்து அதைச் சேர்ந்தவராகவும் இவர் இருப்பாரோ என்று ஐயங் கொண்டேன். அவ்வளவு மிடுக்கு துடுக்கு! நடிப்பென்றே கூற முடியவில்லை. நிஜமென்றே தோன்றியது.

அனுஷம், விருச்சிகம், கேட்டை மூவரும் நாடகத்தின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டனர். அனுஷம், விருச்சிகம் என்னும் இரண்டு வடிகட்டின அசடுகளையும் வைத்துக் கொண்டு கேட்டை ஓரே கலாட்டா பண்ணுகிறான். வாதிராஜ"ம், மாலியும், இன்னொருவரும் அதற்குப் பொறுப்பாளிகள். மேற்படி காட்சிகளை ஓர் அளவுக்குள் கட்டுப்படுத்தியிருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

திருட்டுத்தாலி கட்டினதாகப் பொய்க் குற்றம் சாட்டப் போய் அதுவே நிஜத் தாலியாகி விடுவதுதான் நாடகத்தின் கருத்து. அது நன்றாகக் காட்டப்படுகிறது.

நாடக வசனம் மிகவும் நன்றாக எழுதப்பட்டிருக்கிறது.



நடேச உடையாரின் இரண்டாம் மனைவி 'வில்லி,' கமலமாக நடித்த எம். எஸ். எஸ். பாக்கியமும், கதாநாயகன் முத்துவாக நடித்த ராகவனும்.

உன்னத உழைப்பிற்கு உகந்த உடல் உரம் பெற சிறந்த பொருள்களைத் தேர்ந்தெடுத்து, நன்றாகச் சாப்பிடுங்கள்




நோயற்ற வாழ்வும், குறைவற்ற பலமும் பெற, நல்ல உணவுப் பழக்கத்தை ஏற்படுத்திக்கொள்வது தான் சரியான வழியாகும். ஆகாரம், சமமான அளவில் போஷாக்குச்சத்து மிகுந்ததாக, வைட்டமின்கள் நிறைந்ததாக இருக்கவேண்டும். புரட்டீன், கொழுப்பு, கார்போஹைட்ரேட் சத்துக்கள் கலந்ததாக இருக்கவேண்டும்.

சூரியன் மார்க் மைதா, சூஜி, ஆட்டா ஆகியவை இயற்கையிலேயே வைட்டமின்கள் நிறைந்த பொருள்களைக் கொண்டு சுகாதாரமான முறையில் தயாரிக்கப் படுபவை. ரொட்டி, பிஸ்கோத்துகள், கேக்குகள், பூரிகள், சப்பாத்திகள் தயாரிக்க மிகவும் தகுதியானவை. கோதுமைப் பொருள்கள் சிறுவர்களுக்கு நல்லது. பெரியவர்களுக்கு ருசி மிகுந்த விருந்து.

## சூரியன் மார்க்
## மைதா, சூஜி, ஆட்டா

221, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
மதராஸ்-1
தபால் பெட்டி எண் 1558
போன்: 31241, 31242, 31243 & 4165
தந்தி: MATHOORAN

மதராஸ்
**செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.**
தயாரிப்புகள்

LP

அது அதிகாலை நேரம். ஐந்து மணி வண்டி அறுபது நிமிஷம் தாமதமாக வந்து அப்பொழுதுதான் சென்றது. பாகீரதி வாசலில் புள்ளி வைத்துக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் குனிந்து கொண்டிருந்ததால், அருகில் பெட்டியைச் சுமந்து கொண்டு வந்து நின்ற வாலிபனைக் கவனிக்கவேயில்லை. அவளுக்கு நல்ல தூக்க மயக்கம். அதோடு பெட்டியின் பளு வேறு அவன் கரத்தை இறுத்திக் கொண்டிருந்தது. இலேசாக 'க்கும்' என்று கனைத்துக் கொடுத்தான். அப்படியும் அவள் நிமிர்ந்து பார்க்கவில்லையே!

பிறகுதான் 'கொஞ்சம் இந்தப் பெட்டியை இங்கே வைச்சுட்டுப் போகட்டுமா?'' என்று சற்றுச் சங்கோசம் தொனித்த குரலில் கேட்டான் வாலிபன். அப்பொழுதுதான் அவள் நிமிர்ந்தாள். அவனை ஏறிட்டுப் பார்த்து விட்டு, ''யாரது? அவர் ஊரில் இல்லையே!'' என்று கூறினாள்.

''பரவாயில்லை. நான் பத்தரை மணி வண்டிக்குத் திரும்ப வேண்டும். அது வரைக்கும் இந்தப் பெட்டி இங்கேயே இருக்கட்டுமே!'' என்றான்.

''அவர் லீவில் தஞ்சாவூர் வரையில் போயிருக்கிறார். அநேகமாய்ச் சாயங்காலம் திரும்பி வந்து விடுவார்'' என்றாள் பாகீரதி.

''ஏது! ஏது! அம்மா செவிடு போலிருக்கு!'' அப்பொழுதுதான் தெரிந்தது அவனுக்கு.

அப்பொழுது உள்ளே தன் சரக் கூந்தலுக்கு அகிற் புகையூட்டிக் கொண்டிருந்தாள் சரோஜா. அன்று வெள்ளிக்கிழமையாதலால் அதிகாலையிலேயே எழுந்து எண்ணெய் தேய்த்துக் குளித்திருந்தாள். வாசலில் நடந்த பேச்சு வார்த்தை அவள் காதில் இலேசாய் விழுந்தது. தன் செவிட்டுப் பெரியம்மாவின் பதிலைக் கேட்டு உள்ளுக்குள் சிரித்த வண்ணம் எழுந்தாள். அவிழ்ந்த கூந்தல் தோளில் புரள விரல்களினால் கோதிய வண்ணம் வெடுக்கென்று வெளியே வந்தாள் சரோஜா.

# யாராயிருக்கும் அவன்?

சம்பந்தம்

"யாரது? உங்களுக்கு என்ன வேணும்?" என்று சற்று வேகமாகவே கேட்டு வைத்தாள். அவளுடைய மிடுக்கான தோற்றமும் வெடுக்கென்ற கேள்வியும் வாலிபனின் தூக்கக் கலக்கத்தை யெல்லாம் அடியோடு அழித்தன. "உம்...நான் சிதம்பரத்தில் இறங்க வேண்டும். தூங்கிப் போய் விட்டேன். இங்கே..."

"விடிந்து போய்க்கூட யாராவது தூங்குவாருண்டா?" அவள் குரலில் நைச்சியம் தட்டியது.

"இங்கே வல்லம்படுகை வந்ததுந்தான் விழித்துக் கொண்டேன்..."

"தேவலையே! ஒரே வழியாய் மாயவரம் போய் விழித்துக் கொள்ளாமல்..." அவள் சிவந்த இதழ்களைக் கேலிச் சிரிப்பொன்று கவ்வியது. 'எது! எது! படுலே பெண்ணாய் இருப்பாள் போலிருக்கே இவள்' என்று அவன் மனம் எண்ணியது; உடல் கூசியது. இருந்தும், "இப்போ சிதம்பரம் திரும்பிப் போக எனக்குப் பத்தரை மணிக்குத்தான் வண்டியாம்..." என்று இழுத்தான்.

"ஆமாம். அதற்கு...?"

அவளுடைய அந்தக் கேள்வியில் குறும்பும் கொஞ்சலும் இழைகளை மேவிக்கொண்டு ஒருவித ஆதுர உணர்வும் தெரிந்தன. "அது வரையில் இந்தப் பெட்டியை இங்கே வைத்துக் கொண்டால் தேவலை."

"ஏன், ஸ்டேஷனிலேயே வைத்து விட்டுப் போங்களேன்."

"அப்படித்தான் நினைத்தேன். அதற்குள் ஸ்டேஷன்மாஸ்டர் கதவைப் பூட்டிக்கொண்டு விடுவிடுவென்று வெளியே புறப்பட்டு விட்டார்" என்று அந்த வாலிபன் தயங்கியபடியே கூறினான்.

"சரி! நீங்கள் பத்தரை மணி வண்டிக்குத்தானே போக வேண்டும்? அதுவரையில் பெட்டியை வைத்துக்கொண்டு அதோ பிளாட்பாரத்தில் இருக்கும் ஆலமரத்தடியில் காத்துக் கொண்டிருங்களேன்" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போவதற்கு யத்தனித்தாள் சரோஜா.

"அப்படியில்லே அது! அதற்குள் இங்கே கொள்ளிடக் கரை வரையில் போயிட்டு வரலாம் என்று பார்க்கிறேன். கொள்ளிடத்தில் பாலம் கட்டிக் கொண்டிருந்தார்களே என்ன வாயிற்று? கட்டி முடித்து விட்டார்களா? இல்லையா?" என்று கேட்டான்.

"அது என்னவோ இங்கு யாருக்குத் தெரியும்!" என்றாள் அவள்.

"என்ன! உள்ளூரில் இருப்பவருக்கு அது கூடத் தெரியாதா?" வேண்டுமென்றேதான் அப்படிக் கேட்டான் வாலிபன், அவளை மட்டம் தட்டுவதாக எண்ணி.

"ஆமாம்! எதுவரை கட்டி முடித்திருக்கிறார்கள் என்று தெரிந்து வைத்துக்கொண்டு, இதுமாதிரி கேட்பவருக்கெல்லாம் சொல்ல வேண்டுமாக்கும்..." கொஞ்சம் சூடாய்த்தான் பதில் சொன்னாள். கேலியும் குத்தலும் நிறைந்த அவள் சொற்கள் அவன் அன்பு உள்ளத்தில் கூரிய முட்களைப் போல் குத்திக் கீறின. ஆனால் அவ்வளவாக வலிக்கவில்லையே! அதைப் பொருட்படுத்தாமல் "பரவாயில்லை. இதோ நானே போய்ப் பார்த்துக்கிறேன். அங்கே என் என்ஜினீயர் சிநேகிதன் வேலை செய்கிறான். இப்படியே அவனையும் பார்த்து விட்டுப் போகலாம் என்றுதான்......"

அவன் பேச்சைச் சரியாய் முடிக்கக்கூட இல்லை. அதற்குள் "ஓ! அப்படியென்றால் வேண்டுமென்றேதான் சிதம்பரம் டிக்கட்டை வைத்துக்கொண்டு தூங்கி விட்டேன் என்ற போர்வையில் இப்படி வல்லம்படுகை வந்து இறங்கி விட்டீர்களா! சரிதான்! சரிதான்!" என்றாள். அவள் கைகொட்டிக் கலகலவென்று சிரிக்காதது ஒன்றுதான் குறை.

அதே சமயத்தில் உள்ளே ஏதோ கைக்காரியத்தை முடித்துக்கொண்டு வெளியே வந்தாள் பாகீரதி. "என்ன சரோ அது? இன்னும் அவரை நிற்க வைக்கிறாயே! என்னவாம்?" என்று கேட்டாள்.

"பத்தரை மணி வண்டிக்குச் சிதம்பரம் போகிறாராம். அதுவரை அந்தப் பெட்டியை இங்கே வைக்கிறேன் என்கிறார்" என்று சுருக்கமாகக் கத்தினாள் சரோஜா.

"சரி, போ! இதற்குத்தானா இவ்வளவு பேச்சு. இந்தாப்பா இப்படி வைச்சுட்டுப் போ. சீக்கிரம் வந்து எடுத்துப் போய்விடு" என்றாள் பாகீரதி.

அவசரம் அவசரமாய் உள்ளே சென்று பெட்டியை வைத்தான் வாலிபன். ஆகா! அங்கே ரம்மியமான வாசனை. அங்கொன்றும் இங்கொன்றுமாக அழகான படங்கள். மலர்க் கொத்துகள் வேறு தொங்கின. உள்ளே தன் கண்களை ஒரு சுழற்று சுழற்றி விட்டுத்தான் வெளியே வந்தான் வாலிபன்.

நிமிஷம் கரைந்தது; நேரம் ஓடியது. அதற்குள் அந்தப் பத்தரை மணி வண்டியும் வந்து சென்று விட்டது.

"என்ன, சரோ! இப்படி நேர்ந்துபோச்சே. அப்படிப் பெட்டியை இங்கே வைச்சுட்டா வண்டி யேறிப் போயிருப்பான்? அப்படி இருக்காது. இல்லே, ஒருவேளை மறந்து போய் விட்டானோ என்னவோ!"

"அது என்ன செய்தானோ போ! நான்தான் பெட்டியை இங்கே வைக்க வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தேனே. அதற்குள்ளே நீ ஏன் அவனை வைச்சுட்டுப் போகச் சொன்னே! அது திருட்டுப் பெட்டியோ என்னவோ!" என்றாள் சரோஜா.

"ஐயையோ! அப்படியென்றால் உன் பெரிய அப்பா ஊரிலிருந்து வந்தால் சும்மா விடமாட்டாரே!" என்று தன் கைவேலையை விட்டு அப்படியே உட்கார்ந்து விட்டாள் பாகீரதி. ஒரு கணத்தில் ஒன்பதினாயிரம் எண்ணங்கள் அவளுடைய உள்ளத்தில் எழுந்து கொந்தளித்தன.

நேரம் வளர்ந்தது; நெஞ்சம் உழன்றது. இருவரும் சமைத்து வைத்ததைக்கூடச் சாப்பிடவில்லை, சாப்பிடப் பிடிக்கவில்லை. இதற்கிடையில் மாயவரம் செல்லும் பன்னிரண்டு மணி வண்டி கூட வந்து போய் விட்டது.

அந்தப் பெட்டியை வைத்துப் போனவன் அந்த வண்டி சமயத்தில் கூட வரவில்லை. ஆனால் மாலை வண்டியில் வருவார் என்று எதிர்பார்த்த ஸ்டேஷன்மாஸ்டர் சந்துரு இடுக்கென்று அந்த வண்டியில் வந்து இறங்கி விட்டாரே! ரயில் 'ஹோ ஹோ' என்று கூவிக் கொண்டே புறப்பட்ட பொழுது, 'அதோ உன் பெரியப்பா வந்து விட்டாரடி!'

என்று பதற்றத்துடன் சொல்லிக் கொண்டே உள்ளே ஓடி வந்தாள் பாரேதி. ஏதோ கைக் காரியம் பார்ப்பதாகப் பாவனை செய்து கொண்டு நேரே சமையல் உள்ளில் நுழைந்து விட்டாள். சரோஜாவும் 'வெடுக்' கென்று அறைக்குள் சென்று ஏதோ கைப் பின்னல் வேலையில் ஈடுபட்டாள்.

உள்ளே நுழைந்த சந்துருவுக்கு முதலில் கண்ணில் பட்டது பளபளவென்ற அந்த நீல நிறப் பெட்டிதான். அப்பொழுது மௌனம் வீட்டில் எல்லா இடங்களிலும் போர்த்துக் கொண்டிருந்தது. 'எங்கே யாரையும் காணோம்?' என்று கேட்டுக்கொண்டே சமையல் உள் பக்கம் சென்ஞர். அங்கிருந்த பாரேதியைப் பார்த்து விட்டு, "ஏது பெட்டி இங்கே? யாராவது ஊரிலிருந்து வந்திருக் கிறார்களா?" என்று ஆவலாய்க் கேட்டார். ஆனால் பாரேதி வார்த்தைகளை மென்று விழுங் கிக் கொண்டிருந்த பொழுது, 'வெடுக்'கென வெளியே வந்தாள் சரோஜா. நடந்த விஷ யத்தை அப்படியே பொழிந்து தள்ளினாள். பெரியப்பாவின் முன்னிலையில். தெறித்து விழுந்த அவளுடைய ஒவ்வொரு வார்த்தை யும் பெரியம்மாவின் மீதிருந்த குற்றச் சாட் டைப் பளிச்சென்று எடுத்துப் பறைசாற்றி யது. "ஐயையோ! அப்புறம்!" என்று உறுமினர் சந்துரு. அப்பொழுது அவர் முகத் தில் எள்ளும் கொள்ளும் மாத்திரம் வெடிக்க வில்லை. அவரை, துவரை, மொச்சை எல் லாமே வெடித்தன. அவசரம் அவசரமாய்த் தான் ரயிலில் படிக்க வாங்கிய பத்திரிகையை எடுத்துப் பிரித்தார். "இதோ கேட்டாயா செய்தியை? இது மாதிரிதான் கோவில்பட்டி ஸ்டேஷன் பிளாட்பாரத்திலே ஒரு பெட்டி கிடந்ததாம். ரொம்ப நேரமாக அதை எடுக்க யாரும் வராமலிருக்கவே, அதை ஸ்டேஷனுக்குள் கொண்டு வந்து உடைத்துப் பார்த்தார்களாம். உள்ளே இரண்டாய் வெட்டி வைத்திருந்த பிணமல்லவா இருந்த தாம்" என்று பாரேதியின் காதில் விழும்படி உரக்கக் கத்தினர். "இதுவும் அப்படி யிருக் குமோ!" என்று தலையிலடித்துக் கொண்டே அந்தப் பெட்டியைத் தூக்கிப் பார்த்தார். மிகவும் கனமாகவேதான் இருந்தது. 'இப்போ என்ன செய்கிறது இதை?' என்று அப்படியே உட்கார்ந்து விட்டார். "ஏன் சரோ! அவனை நன்றாய்ப் பார்த்தாயோ? யாராயிருப்பான் அவன்? கொலைகாரன் மாதிரிதான் இருந் தானே!" என்றார்.

ஆகா! சரோஜாதான் அவனை நன்றாய்ப் பார்த்தவளாயிற்றே! ஆனால் " உம்! ஆள் எப்படி இருந்தால்தான் என்னவாம். முன் பின் தெரியாதவர் பெட்டியை இப்படி நாம் வாங்கி வைத்துக் கொண்டிருக்க வேண் டாமே!" என்று நீண்ட பெருமூச்சு விட் டாள். இன்னதென்று சொல்ல இயலாத ஏதோ ஒரு உணர்ச்சி உள்ளிருந்து கிளம்பி அவள் நெஞ்சைச் சுழற்றி அடித்தது. "நான் தான் ஊரிலில்லையே! அதைச் சொல்லி யேனும் தட்டிக் கழித்து விடக்கூடாதோ நீ?" என்று தம் மனைவியைத் திரும்பிப் பார்த்தார் சந்துரு. அவள்தான் தன் முகத்தை வேறு பக்கம் திருப்பி வைத்துக் கொண்டிருந்தாளே!



**கணவன்:** நான் லீவில் சிம்லா போகப் போகிறேன். அங்கு போய் உன்னையே நினைத்துக் கொண் டிருக்கப் போகிறேன்!

**மனைவி:** வேண்டாம், என்னுட னேயே இருந்து சிம்லாவை நினைத் துக் கொண்டிருங்களேன்!

## தமாஷ் சபாஷ்

"மைசூர்பாகு கொண்டு வா, அப்பா!"

"இரண்டணா மைசூர்பாகா அல்லது மூன்றணாவுதா?"

"அதில் என்ன வித்தியாசம்?"

"மூன்றணா மைசூர்பாகுடன் ஒரு கத்தியும் கொடுப்போம். அது இரண்டணா மைசூர் பாகுக்குக் கிடையாது!"



ஆகட்டும் இன்று சாயங்காலம் வரையில் அதை எடுத்துப் போக வரவில்லை யென்றால் இரவோடு இரவாய் அந்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு போய் ஸ்டேஷன் எல்லை யைத் தாண்டிப் போட்டு விட்டு வந்துட றேன்" என்று தமக்குத்தானே பேசிக் கொள்வதுபோல் தீர்மானித்துக் கொண்டார்.

அன்று இரவு வழக்கப்படி நேரத்தோடு மூவரும் படுத்தார்கள். ஆனால் வெகு நேரம் வரை இப்படியும் அப்படியும் புரண்டு கொண்டு கிடந்தார்களே! அம் மூன்று பேரு டைய உள்ளங்களும் வெவ்வேறு விதமான சிந்தனையில் ஆழ்ந்திருந்த போதிலும், பதை பதைப்பிலும், பரபரப்பிலும் என்ன நேருமோ என்ற கவலையிலும் ஒன்றுபட்டே இருந்தன. பிறகு எப்படித் தூக்கம் வரும்?

ஏதேதோ தன் எண்ணங்களின் நிழலாக சொப்பனம் கண்டு கொண்டிருந்த சந்துரு

'வெடுக்'கென கண் விழித்தார். 'சரி, பெட்டியைத் தூக்கி வெளியே போட்டு விட்டு வந்து விடுவோம்' என்று தீர்மானித்து வாசல் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். அதோ பிளாட்பாரம் வழியாகத் தோளில் வலையைப் போட்டுக் கொண்டு புறங் கொள்ளிடத்தைப் பார்க்கப் போய்க் கொண்டிருந்தான் வலைஞன். அவன் பின்னோடு ஒருவர்பின் ஒருவராக வந்து கொண்டிருந்தார்களே வலைஞர்கள்! 'இது ஏதுடா சங்கடம். இவர்களெல்லாம் போய்த் தொலையட்டும்' என்று அப்படியே துண்டை விரித்துப்போட்டு வெளிவராண்டாவிலேயே சற்றுப் படுத்தார். அப்படியே தூங்கிப் போய் விட்டார். சந்துரு கண் விழித்தபொழுது. பொழுது நன்றாய் விடிந்து விட்டது.

'சரி, சரி. இனிமேலும் தாமதிக்கக் கூடாது. நடக்கிறது நடக்கட்டும். இப்பொழுதே போய்ப் போலீசுக்குப் போன் செய்து விடுவோம்' என்று அப்படியே ஸ்டேஷனுக்கு எழுந்தோடி வந்தார். 'போனை'க் கையிலெடுத்துக் கொண்டு பேசுவதற்காகச் சந்துரு கனைத்தபொழுது. கொள்ளிடம் பாலத்து என்ஜினீயர் வந்தார்.

"எங்கே இரண்டு நாட்களாய் காணோம். லீவில் ஊருக்குப் போயிருந்தீர்களோ?" என்று விசாரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தார். அவருடன் 'க்ருக் முருக்' கென்று போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவரும் வந்திருந்தாரே!

அவரைக் கண்டதும் ரொம்பவும் பரபரப்பு அடைந்தார் சந்துரு. "ஆமாம்! இல்லை" என்று உளறிக் கொண்டே கையில் எடுத்த போனை வைத்து விட்டு, காதோடு காதாய், "இன்ஸ்பெக்டர் எங்கே வந்திருக்கார்?" என்று என்ஜினீயரைக் கேட்டார்.

அதைக் கண்ட அவர் சிரித்துக் கொண்டே, "இவன் என் நண்பன் சார். வேலூர் போலீஸ் பள்ளியில் சப்-இன்ஸ்பெக்டர் பயிற்சியில் இருக்கிறான். நேற்று கூடத் தன் பெட்டியை உங்கள் வீட்டில்தான் வைத்து விட்டு வந்தானே?" என்றார்.

"என்ன! என்ன! அந்தப் பெட்டியை வைத்தவர் இவர்தானா? அடடா. யாரோ எவரோ இன்னும் எடுத்துப் போகக்காணோமே என்றல்லவா நாங்கள் உழன்று கொண்டிருக்கிறோம். வாங்கோ வீட்டுப் பக்கம் போயிட்டு வரலாம்" என்று அவர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டார் சந்துரு.

வாசலில் நின்று கொண்டிருந்த பாரதி தன் கணவனுடன் யாரோ போலீஸ் இன்ஸ்பெக்டர் வருவதைக் கண்டதும். கையைப் பிசைந்து கொண்டே உள்ளே சென்றாள். ஆனால் சரோஜாவோ அவர்களைப் பார்த்து விட்டு வியப்பில் விழி தூக்கி நின்றாள். பகைக்கப்பட்டவனைப் பார்த்துத் திகைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

"உடனே வந்து பெட்டியை எடுத்துப் போவதாகச் சொன்னீர்களாமே!" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார் சந்துரு. "ஆமாம்!" என்று கூறிய வாலிபன் தன் என்ஜினீயர் நண்பனைப் பார்த்தான். உடனே அவர் "ஆமாம். ஆமாம். உடனே தான் புறப்பட்டான். நான்தான் அவனை இருக்க வைத்தேன். அநேக வருஷங்களுக்கப்புறம் இப்போதான் சந்திக்கிறோம்" என்றார். அப்பொழுதெல்லாம் கிருஷ்ணன் கண்கள் உள்ளேயே துழாவிக் கொண்டிருந்தன.

"இப்போ சிதம்பரம் போகிற வண்டி ஒன்று வருமில்லே சார்?" என்று சந்துருவைப் பார்த்துக் கேட்டார் என்ஜினீயர்.

"ஆமாம், இதோ இன்னும் அரைமணியிலே வரப்போகிறதே!" என்று அவர் சொல்லிக் கொண்டிருந்த பொழுதே, என்ஜினீயரின் முதுகைத் தட்டி, "வேண்டாம், நான் இப்படியே தஞ்சாவூர் திரும்பி விடுகிறேன். இனிமேல் அங்கே போய்வர எனக்கு மனமில்லே" என்றான் வாலிபன்.

"வேண்டாமடா. நீ போய் விட்டுத்தான் வாயேன். இந்த வண்டியிலே போய், சிதம்பரம் ஊருக்குள்ளே சென்று வந்து, அதே தஞ்சாவூர் வண்டியை நீ அங்கேயே பிடிச்சு விடலாமே! அவ்வளவு நேரம் இருக்கிறதே உனக்கு" என்றார் என்ஜினீயர்.

"ஊரில் எங்கே போய் வரவேண்டும்?" என்றார் சந்துரு.

"புதுத்தெருவுக்கு" என்றான் வாலிபன்.

"புதுத்தெருவில் யார் வீடோ?" என்றார் சந்துரு. உடனே தன் பையிலிருந்த ஒரு கடிதத்தைப் பிரித்துப் பார்த்து, "யாரோ ரகுராமனாம்" என்றான் வாலிபன். அதைக்

கேட்டதுதான் தாமதம். உடனே ஏவுக் கென ''அப்படியென்றால் நீங்கள் தஞ்சாவூர் நாராயணனுடைய பிள்ளை கிருஷ்ணன் தானே?'' என்று கேட்டார் சந்துரு.

''ஆமாம். சரியாய்க் கண்டுபிடித்து விட்டீர் களே, எப்படி எப்படி அது!'' என்று ஆச் சரியப்பட்டான் வாலிபன் கிருஷ்ணன்.

''நேற்று நான் தஞ்சாவூரிலிருந்து தானே வந்தேன்! உங்கள் அப்பாவைச் சந்தித்தேன். 'பையன் லீவில் வருகிறான். அப்படியே சிதம் பரத்திலே இறங்கிப் பெண்ணைப் பார்த்துவிட்டு வரச்சொல்லி எழுதியிருக்கேன்' என்றார். அதனால்தான் நான் மத்தியான வண்டிக்கே திரும்பி விட்டேன்'' என்றார் சந்துரு.

''புதுத்தெரு ரகுராமன் உங்களுக்கு உறவா என்ன?'' என்றார் என்ஜினீயர்.

''உறவாவது! அவன் என் தம்பி சார். ரகுராமனுக்கு ஒரே பெண். எனக்குக் குழந்தை இல்லாததால் அடிக்கடி நான் அவளை இங்கு அழைத்து வந்து விடுவேன். இப்பொழுது என் தம்பி பெண் சரோஜா இங்குதான் இருக்கிறாள். அவளைச் சிதம்பரத்தில் விட்டு வருவதற்குத்தான் அப்படி அவசரமாய் ஓடி வந்தேன். நேற்று இங்கே இந்தப் பெட்டியை எடுத்துப்போகாத தகராறினால் மனம் குழம்பி உட்கார்ந்து விட்டேன்'' என்றார் சந்துரு.

''அடடா அப்படியா அது. சபாஷ்! நேற்று இங்கு இவனோடு வாதாடி, இவனை வம்புக்கு இழுத்தவள் உங்கள் தம்பி மகள் தானா?'' என்றார் என்ஜினீயர்.

''அப்படியொன்றும் இராதே!'' என்று தடு மாறினார் சந்துரு.

''நீங்கள் ஒன்றும் தப்பிதமாக எடுத்துக் கொள்ள வேண்டாம். அப்பேர்ப்பட்ட பெண் தான் இவனுக்குப் பிடிக்கிறதாம்.''

''போடா!'' என்று வெட்கப் பட்டுக் கொண்டு என்ஜினீயரின் விலாவை நிமிண்டி னான் கிருஷ்ணன். சந்துருவின் வயிற்றில் பால் வார்த்தமாதிரி யிருந்தது.

''இதோ வந்து விட்டேன்'' என்று உள்ளே ஓடினார் சந்துரு. இவர் செய்தியைத் தெரிவிக் கும் முன்பேயே அங்கு தித்திப்பும் காரமுமாகப் பலகாரங்கள் தயாராகிக் கொண்டிருந்தன.

சற்று நேரத்துக்குள் சரோஜாவே வந்து இருவருக்கும் பலகாரம் பரிமாறினாள். அவள் அழகில் கிருஷ்ணன் மதிமயங்கியிருந்தான்.

அவர்கள் சாப்பிட்டுக் கை கழுவுவதற்கும் ஸ்டேஷனில் மணியடிப்பதற்கும் சரியாயிருந் தது. ''இதோ தஞ்சாவூர் வண்டி வரப் போகிறது.......'' என்றார் சந்துரு.

''நீங்கள் ஒன்றும் யோசிக்க வேண்டாம், சார்! நேற்றே அவன் இங்கே தன் இதயத்தைப் பறி கொடுத்ததை யெல்லாம் சொல்லி விட் டான், சார்!'' என்று மீண்டும் அடித்துப் பேசினார் என்ஜினீயர்.

அதைக் காதில் வாங்கிய சரோஜாவின் உள்ளம் தேன் கடலில் மூழ்கிப் பூக் காட்டில் வீசும் தென்றலிலே நடமாடியது.

யாரோவாக வந்த கிருஷ்ணன் இப்பொழுது ரொம்பவும் நெருங்கியவனாக வல்லவா புறப் பட்டான்! அதோடு வெறும் பெட்டியுடன் வந்து இறங்கியவன் இப்பொழுது சரோஜா வின் இருதயத்தையு மல்லவா எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டான்!

SISTA'S-SG-72-TAM

சிறிதளவு* டினோபால் வெள்ளைத்



துணிகளை —அதிவெண்மையாக்குகிறது—




★ டினோபால், ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பாஸல். ஸ்விட்ஸர்லாந்து, அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்

தயாரிப்பவர்கள் : ஸுஹ்ருட் கெய்கி பிரைவேட் லிமிடெட், வாடி, வாடி, பரோடா

ஏக விநியோகஸ்தர்கள் : ஸுஹ்ருட் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிமிடெட், பி. ஒ. பாக்ஸ் 965, பம்பாய்-1




## 110. மூலம் [2]

"வெய்யிலால் உலர்ந்து
மழையால் நனைந்து
பனியால் வறண்டு
மிக வாடி....

பசியால் மெலிந்து
பிணியால் நலிந்து
விதியால் உழன்ற
வருநாளில்..."

"போதுமய்யா! சற்று உமது கவிதைகளை நிறுத்தும்."

"ஏன்? எதற்காக நிறுத்த வேணும்?"

"இந்தக் கூப்பாடு போடுவதால் உமது விதி மாறப் போகிறதா?"

பொதுவாகச் சரீரம் முழுவதும் ஒருவகை வறட்சி (நெய்ப்புத் தன்மையின் இன்மை) ஏற்படுவது நமது ஆகார விஹாரங்களிலுள்ள குறைபாடுகளால் தான். காலத்தின் சுபாவத்தாலும் இது ஏற்படுவதுண்டு. அவ்வாறுயின் இந்த வறட்சி அனேகமாக உடலின் மேற்புறத்தை மட்டும் பீடிப்பதாயிருக்கும்.

"நீவினிக்குத் நீவினி" எண்ணெய்க் குளி செய்யும் ஒரு பாக்கிய புருஷன்,—உத்தியோகமோ மேலே யாப்பிறுல் யாத்துத் தெரிவித்த வகையைச் சேர்ந்தது,—உடம்பெல்லாம் பார்த்தால் பட்டுப் போன மரத்தின் பட்டையைப் போலிருக்கும். கை ஓயாமல் சொறிந்து கொண்டே இருப்பான். சொறிந்தஇடங்களில் "மாக்கோலம்" போட்ட மாதிரி "மார்க்குகள்" ஆனால் அவை நாமமும் அல்ல, விபூதியும் அல்ல. தலையைச் சொறிந்தால் போதும். தூவானம் வீசுவது போல் பொடுகுகள் உதிரும். தவிடு மழையாய்ப் பொழியும். இவை யாவும் சரீரத்தில் ஏற்படும் மேற்புற வறட்சியின் சின்னங்கள். இந்நிலையில் உள்ள சரீரத்தின் மேற்புறத்தில் (சருமத்தின் மேல்) சொறி சிரங்கு படர் தாமரை யானைச் சொறி நமட்டுச் சிரங்கு கரப்பான் இவை உண்டாவதற்கு இதைவிட அழைப்பிதழொன்று அச்சிட்டு அனுப்பவும் வேணுமா?

இவ்விதமே நெய்ப்புக் குணஞ் சிறிதுமில்லாத ஆகாராதிகளைச் சாப்பிடுவது அல்லது வறட்சி மிகுந்த பண்டங்களை விரும்பியோ அல்லது வேறு வழியில்லாமலோ ஏற்பது. அதிகமான காரம், புளி முதலிய அழற்சி தரும் இயல்பு பெற்ற ஆகாராதிகளையுண்பது. இராக் கண் விழிப்பது, அதிக தூரம் நடப்பது, அளவுக்கு மீறி வாகனாதிகளில் செல்வது. காலை 6 மணி முதல் இரவு பத்து மணி வரையில் 'கல்லாப் பெட்டி'யின் மேலே உட்கார்ந்திருக்கும் பலசரக்குக் கடை முதலாளியைப் போல் கடினமான ஆசனங்களில் நெடுநேரம் இருப்பது மணிக் கணக்கில் குந்தியிருப்பது துராஸிகா.

"'துராஸிகா' என்றால் என்ன?"

"துக்கமான நிலையில் அமர்ந்திருப்பது என்றுதான் அர்த்தம்."

அதென்ன ஐயா அது? ஒரு உதாரணஞ் சொல்லுங்கள்! 'ஒரு மரக்கிளையின் மேல் ஒரு காகம் உட்கார்ந்திருக்கிறது. அடுத்த மரக்கிளையில் ஒரு காகம் வந்து உட்காருகிறது. முதல் காகத்துக்கு அடுத்த மரத்துக்குப் பறந்து சென்று இரண்டாவது காகத்தின் அருகில் உட்காரவேண்டுமென்று தோன்றுகிறது. புறப்படலாம் என்று உடலைச் சற்று முன் பக்கம் சாய்த்துக் கால்களை உந்தப் போகும் நேரத்தில், அங்கு செல்ல வேண்டாமென்ற எண்ணம் தோன்றுகிறது. பறக்கவும் இல்லை; நல்லவிதத்தில் இருக்கவும் இல்லை இரண்டும் கெட்ட நிலையில் உடலைச் சிறிது குறுக்கி, முன் வாட்டில் சாய்த்து ஓரளவு இறக்கைகளை விரித்தும் விரிக்காமலும் உள்ள நிலையில் இமைக்கும் நேரம் இருக்குமல்லவா? ஏறத்தாழ இவ்விதக் கோலத்தில் தலைதெறிக்க மோட்டார் சைக்கிளில் செல்லும் ஒரு யுவனைக் கற்பனைக் கண்ணால் காண்பீர்களா? தான் ஓட்டிச் செல்லும் வாகனத்துக்கும் முன்பு செல்ல முயல்பவன்போல் உடலை வளைத்துக் கொண்டு காற்றுடன் போட்டி போடும் சவாரியில் அம்மனிதன் இருப்பதைத் தான் துராஸிகா—துராஸிகைக்கு உதாரணமாகச் சொல்லக் கூடும்.

இவ்வகைக் காரணங்களால் சரீரத்தில் உட்புற வறட்சி அதிகரிக்கும். மலம் இறுகி வெளியே போகக் கஷ்டமான நிலையை அடையும். எங்கு வேண்டுமானாலும் உட்புற அழற்சி ஏற்படலாம். அவ்வித அழற்சி மலாசயத்தில் ஏற்படுமானால் மூல வியாதிக்கு விதை நட்டாயிற்று எனலாம். பிறகு காலக்கிரமத்தில் முளைகள் ஏற்பட வேண்டியதுதானே!

உட்புற வறட்சியின் முதல் விளைவு மலபந்தம். பிறகு மூலத்தின் முளைகள். முளைகள் மல மார்க்கத்தை நிரோதனஞ் செய்தல் என்று இப்படி ஒன்றின்மேல் ஒன்றாக வியாதியின் அபிவிருத்தி



நாடகங்கள் பல நடத்தி நற்பெயருடன் விளங்கும் கல்யாண் பைன் ஆர்ட்ஸ் குழுவினர் அமரர் கல்கியின் 'கள்வனின் காதலி'யைச் சென்ற மாதம் கல்யாணில் (பம்பாய்) நாடகமாக நடித்துச் சபையோரின் பாராட்டுதலைப்பெற்றனர். நாடகத்தில் பங்குகொண்ட ஒவ்வொருவரும் தங்கள் பாகத்தை உணர்ந்து நடித்தனர். காட்சி ஜோடனைகள் அழகாக அமைக்கப்பட்டிருந்தன நாடகத்தில் பின்னணிப்பாடல்கள் இனிமையாக ஒலித்தன.

---

திட்டம் முன்னேறிக் கொண்டே போகும். நெடுநாளைய மலபந்தத்தால் வேறுவித உபாதைகள் எத்தனை எத்தனையோ ஏற்படவும் கூடுமல்லவா? இரும்புக் கம்பி போல் கெட்டியாகக் கட்டிப்போன மலம் வெளிவருங்காலத்தில் மலாசயம் அளவுக்கு மீறி விகாஸித்தாக வேணுமா? அச்சமயத்தில் மூலத்தின் முளைகளில் அபிகாதம் ஏற்படுமல்லா? இதனாலும், கெட்டியான மலம் அம் முளைகளின்மேல் பலமாக உராய்ந்து செல்வதாலும் முளைகளில் இன்னும் அதிகமான அபிகாதம் ஏற்படுகிறது அதனால், இம்முளைகளிலிருந்து இரத்தம் பெருக ஆரம்பிக்கும். மலத்துக்கு முன்பும் ரத்தம் போகலாம். மலத்துக்குப் பிறகும் ரத்தம் போகலாம். சில சமயங்களில் பீச்சுக் குழலிலிருந்து பீச்சப்படுவதுபோல் மிகவும் அதிகமாகவும் ரத்தம் போவதுண்டு. காலக்கிரமத்தில் ரத்தக் குறைவு — அனீமியா — பாண்டு சோகை என்ற வியாதிகளெல்லாம் ஏற்படவும் கூடும். ஆகவே மூலவியாதி உள்ளவருக்கு மலபந்தத்தால் இவ்வித இன்னல்கள் ஏற்படாமல் இருப்பதற்கு ஆவன செய்வது மிகவும் அவசியம். தினசரி ஏற்படும் மல சோதனை சிரமமில்லாதபடி மலம் சிறிது இளகிய நிலையில் போகுமாறு நெய்ப்புத்தன்மையை அதிகரிக்கச் செய்வது அவசியம்.

"ஒரு முட்டை ஆமணக்கெண்ணெயைச் சிறிதளவு பாலில் விட்டு ராத்திரி படுக்கப் போகச்சே சாப்பிட்டு வந்தால் நல்லது" என்று நாம் அடிக்கடி நம் வீட்டிலுள்ளோர் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

"பேயம்பழத்தை மெலிசாக துண்டுகளாக நறுக்கி, ஆமணக்கெண்ணெயிலே ஊற வைத்திருந்து - தினம் அதுலே ரெண்டு துண்டு பழமும் 'தனூண்டு' அது ஊறின ஆமணக்கெண்ணெயும் படுக்கப் போறசமயம் சாப்பிட்டுவந்தால்......" என்பதும் மேற்சொன்ன விதமே நாம் அடிக்கடி கேட்டிருக்கும் சிகிச்சை.

தினந்தோறும் ஒரு கீரையைச் சாப்பாட்டில் தவறாமல் சேர்த்து வருவது நல்லதென்றும், அதுவே மூல வியாதியை முற்றும் குணப்படுத்தப் போதுமானது என்றும் சொல்வார்கள்.

"நாலு நாளைக் கொருதரம் என்று கொஞ்சம் கொஞ்சம் எள்ளுப்பொடி [வெல்லம் சேர்த்ததானால் மிகவும் நல்லது]யை ஆகாரத்தில் சேர்த்துக் கொண்டு வந்தால்...மூலமும் பூராடமும் யாருக்கு வந்ததுன்னு ஆயிடும்" என்று நீட்டி முழக்கிச் சொல்வதையும் கேட்டிருக்கிறோம்.

உள் வறட்சிதானே இவ்வளவுக்கும் காரணம்! சரி, குடலில் கொஞ்சம் நெய்ப்புத்தன்மை வந்திடுமானால் குடல் இயங்குவது எளிதாகும். மலமும் சிறிது இளகிப் போகும் அல்லவா? அதற்காக, முதல் கவளஞ் சாதத்தில் நல்லதான வெண்ணெய் காய்ச்சிய நெய் இரண்டு உச்சிக்கரண்டி விட்டு, அத்துடன் ஒரு சிட்டிகை உப்பையும் சேர்த்துப் பிசைந்து தினந்தோறும் சாப்பிட்டு வந்தால் போதும். காலக்கிரமத்தில் இந்த வறட்சி அறவே தீர்ந்துவிடும். அதிலும் வெறும் சோற்றுப்புக்குப் பதில் வறுத்துப் பொடித்த இந்துப்புவானால் மிகவும் நல்லது

இதெல்லாம் எதற்கு? உப்பும் சப்பும் ஒன்றுமே வேண்டாம். ஒரு கழக்கோடி (கெச்சைக்காய்)யளவு புதிய வெண்ணெய். இதை நன்றாய்த் தேய்த்துக் கழுவிய ஒரு பாத்திரத்தின் உட்புறத்தில் பூசவேண்டும். பிறகு இந்தப் பாத்திரத்தில் நேரில் பாலைக் கறக்க வேண்டும். அரையாழாக்கு முதல் ஒரு ஆழாக்கு வரையில் கறந்தால் போதும். கறந்த சூட்டில் இந்தப் பாலுடன் முன் பூசிய வெண்ணெயும் கரைந்து நிற்குமல்லவா? நுரையுடன் உள்ளபோதே இந்தப் பாலைத் தினமும் காலையில் வெறும் வயிற்றில் ஒரு வாரம் சாப்பிடுங்கள். 'உள் வறட்சியானது யாருக்கு?' என்றாகி விடும். (தொடரும்)

### வேங்கடம் முதல் குமரி வரை

# காளத்தி அப்பர்

'இறைவனிடத்து இடையறா அன்பு செலுத்திய நாயன்மார்கள் அறுபத்து மூவரில் செயற்கரிய செயல் செய்தார் யார்?' என்பது ஒரு பட்டி மண்டபத்தில் விவாதத்துக்கு எடுத்துக் கொண்ட பொருள். அறுபத்துமூன்று அன்பர்களது செயலையும் அலசி ஆராய்வது சிரமம் என்று கருதிப் பட்டினத்தார் குறிப்பிடும் மூன்று திருத்தொண்டர்களை மட்டுமே விவாதத்துக்கு எடுத்துக் கொண்டனர்.

வாளால் மகவு அரிந்து ஊட்ட
வல்லேன் அல்லன்; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன்
அல்லன்; தொண்டு செய்து
நாளாறில் கண் இடந்து அப்ப
வல்லேன் அல்லன்; நான்இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்
காளத்தி அப்பருக்கே

என்று சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் மூவரையும் போல அரிய செயல் செய்து இறைவன் அருளைப் பெறத் தம்மால் இயலவில்லையே என்று ஏங்கிஇருக்கிறார் பட்டினத்தார். இம்மூவர் செயலையுமே அன்று அறிஞர்கள்விவாதித்தார்கள். கடைசியில் தலைவரது தீர்ப்பு கண்ணப்பர் பக்கமே இருந்தது. திருநீலகண்டர் தம் உறுதியில் நிலைத்துநிற்பதற்கு அவர் மனைவி இறைவன் பேரிலேயே ஆணை இட வேண்டியிருந்தது. சிறுத்தொண்டர் பெற்ற மகனையே அரிந்து கறி சமைத்த செயலில் 'எதுவும் எனக்கு அரியது அன்று' என்று சொல்லும் ஆணவம் சிறிது கலந்து விடுகிறது. கண்ணப்பர் ஒருவர்தான் பிறருடைய தூண்டுதல் ஒன்றுமே இல்லாமல் 'அயல் அறியா அன்பை' இறைவனிடம் செலுத்துகிறார். ஆதலால் அவர் அன்பே சிறந்தது. அவர் செய்ததே அரியசெயல் என்று முடிவு கட்டினார் மண்டபத் தலைவர். இப்படி அறுபத்தி மூன்று அன்பர்களில் இறைவனிடம் அன்பு செலுத்தியவர்களில் தலை நிற்கிறார் கண்ணப்பர். அந்த கைய கண்ணப்பராலே பெருமை பெற்றவர்தான் காளத்தி அப்பர். கொலைத் தொழி லே புரியும் வேட்டுவக் குலத்திலே பிறந்த திண்ணனார் வேட்டையாடச் சென்ற இடத்திலே, அங்குள்ள குடுமித் தேவருக்கு ஆட்பட்டு, அவருக்கு இயல்பான முறையிலே வழிபட்டு நின்றவர். இறைவனது வலக் கண்ணில் உதிரம் ஒழுகியபோது தம் வலக் கண்ணையே தோண்டி எடுத்து அப்பி, வழியும் ரத்தத்தைத் துடைத்தவர். திரும்பவும் இறைவனது இடக் கண்ணிலும் இரத்தம் வடிந்தபோது தக்க மருந்து தம்மிடம் உண்டு என்பதால் குதூகலித்துத் தம் இடக் கண்ணையே தோண்டி எடுக்க முனைந்தவர். திண்ணனாரது திண்மையான அன்பைக் கண்ட இறைவனும் 'நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!' என்று அவரது கையைப்பிடித்து, தடுத்து நிறுத்தும் பாக்கியம் பெற்றவர். இந்த கைய 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு' தம்மிடம் இல்லையே என்றுதான் மாணிக்க வாசகரும் அகங்கரைந்து உருகுகிறார். "வாய்கலசமாக வழிபாடு செய்யும் வேடன் மலராகு நயனம் காய்கணையால் இடந்து ஈசன் அடி கூடினான்" என்று ஞானசம்பந்தர் வியந்து வியந்து பாடுகின்றார். ஒரே ஒரு ரகசியம். இன்று காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் காளத்தி அப்பருக்குச் சொந்தமாக ஒரு கண் கூட இல்லை. இடக்கண்ணோ அம்மையின் கண். வலக் கண்ணோ, கண்ணப்பரது கண். ஆதலால் இரு கண்ணும் இழந்து நிற்கும் ஏழை ஏதலனாக வாழ்கிறார் அவர்.



கண்ணப்பர் - தாராசுரம்

* * *

காளத்திவாழ் கண்டனை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். நாம் மாத்திரம் என்ன? 'மனத்தகத்தான் தலைமேலான், வாக்கில் உள்ளான், வாயாரத் தன்னடியே பாடும்தொண்டர் இனத்தகத்தான், இமையவர் தம் சிரத்தின் மேலான்' என்றெல்

லாம் இறைவன் இருக்கும் இடங்களை வரிசையாக அடுக்கிக்கொண்டே போன அப்பரும் கடைசியில் 'காளத்தியான் அவன் என் கண்ணுளானே' என்று தானே முடிக்கிறார். இறைவனது அருள் பொழியும் கண்ணை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். கண்ணப்பனை நினைத்தால் காளத்தியானை நினைக்கிறோம்.

இந்தக் காளத்தியான் இருக்கும் கோயிலைத் தன்னகத் தடக்கிய ஊர்தான் இன்று காளாஸ்திரி என்றும் காளஹஸ்தி என்றும் சீகாளத்தி என்றும் வழங்கும் காளத்தி. சீ, காளம், அத்தி, என்னும், சிலந்தி பாம்பு யானை மூன்றும் வழிபட்ட காரணத்தால் சீகாளத்தி என்று இத்தலம் பெயர் பெற்றது என்று ஸ்தல புராணம் கூறும். சிலந்தி தன் வாயாலேயே நூல் இழைத்து அந் நூலாலேயே இறைவனுக்குப் பந்தல் இடுகிறது. அப்பந்தல் தீபச் சுடரால் அழிந்தது கண்டு அத்தீபத்திலேயே தானும் விழுந்து மடிந்து இறைவன் திருவடி அடைகிறது. காளன் என்னும் பாம்போ தன்னிடமிருந்த அருமையான ரத்தினத்தை இறைவன் திருமுடியில் சாத்தி அலங்கரிக்கிறது. அத்தி என்னும் கணத் தலைவன் யானையாக அவதரித்து, தன் துதிக்கையாலேயே நீர் முகந்து இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்விக்கின்றது. யானை செய்யும் திருமஞ்சனம் புஷ்ப அலங்காரம் எல்லாம் சுத்தமாக இல்லை என்று பாம்பு நினைக்கிறது. அதனால் யானையின் துதிக்கையில் பாம்பு நுழைந்து யானைக்கு வேதனை தருகிறது. யானையும் தும்பிக்கையை ஓங்கி அறைந்து பாம்பைக் கொல்கிறது. பாம்பின் விஷம் ஏறிய காரணத்தால் யானையுமே மாண்டு மடிகிறது. இப்படியே சிலந்தி பாம்பு யானை மூன்றும் இத்தலத்திலேயே முத்தி பெறுகின்றன. அதனால் தலமும் சீகாளத்தி என்றே பெயர் பெறுகிறது.

இந்தக் காளத்தி அப்பரது கோயில் பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்று. இதை வாயுத்தலம் என்பார்கள். அதற்கேற்ப கர்ப்பக் கிருஹத்தில் சுடர்விட்டுக்கொண்டிருக்கும் விளக்குகளில் இறைவன் திருமுடிக்கு அணித்தே உள்ள ஒரு விளக்கின் தீபம் மட்டும் காற்றிலே அசைவுற்று எப்போதும் துடித்துக் கொண்டே இருக்கிறது. இந்த விளக்குக்கு மட்டும் காற்று எங்கிருந்து வருகிறது என்பது கண்டறியாத அதிசயமாகவே இருக்கிறது. இது வாயுத்தலம் என்பதற்கும் ஒரு சிறுகதை. ஆதிசேஷனுக்கும் வாயு பகவானுக்கும் ஒரு பலப் பரீக்ஷை. மேருமலையை ஆதிசேஷன் சுற்றி வளைத்துக் கட்டிப் பிடிக்க, வாயு தன் பலங்கொண்ட மட்டும் காற்றை எழுப்பி மலையை அசைக்கக் கடைசியில் அம்மலையின் பிஞ்சுகள் மூன்று பறித்து எறியப்பட, அப்படி எறியப்பட்ட மலைப்பிஞ்சு ஒன்றே இங்கு



காளி கோபுரம் - காளத்தி

விழுந்து காளத்தி மலையாக உருவாகி இருக்கிறது என்பது கர்ண பரம்பரை.

இக்காளத்தி அப்பர் கோயிலுக்குச் செல்ல விரும்புபவர்கள் ரயிலிலே செல்வதானால் சென்னையிலிருந்து ரேணிகுண்டா சென்று கூடூர் செல்லும் ரயிலில் மாறி ரேணிகுண்டாவிலிருந்து பன்னிரண்டு மைல் செல்ல வேணும். இல்லை, காரிலோ பஸ்ஸிலோ சென்னையிலிருந்து நேரடியாக எண்பது மைல் சென்று இத்தலத்தை அடையலாம். மேற்கே இருந்து வருகிறவர்கள் திருப்பதி சென்று திருமலை ஏறி வேங்கடவனைத் தரிசித்து விட்டுப் பின்னர் இக்காளத்தி வந்து சேரலாம். ஸ்வர்ணமுகி என்னும் பொன் முகலி ஆற்றங் கரையிலே அமைந்திருக்கும் கோயிலுக்கும் சென்று தொழலாம். கோயில் வாசலிலே ஒரு பெரிய கோபுரம்; காளிகோபுரம் என்று பெயர். ஆனால் இந்தக் கோபுரத்துக்கும் கோயிலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை; தனித்து நிற்கிறது. பக்கத்தில் உள்ள சிறிய கோபுர வாயிலில் நுழைந்து வளைந்து வளைந்து சென்றால் தென்பக்கம் உள்ள கோயிலின் பிரதான வாயிலுக்கு வந்து சேருவோம். அதன்பின் கோயிலில் நுழைந்து வலமாக வந்தால் மேற்கு நோக்கியவராய் இருக்கும் காளத்தியப்பரைத் தரிசிக்கலாம். இவர் சிவலிங்கத்தில் ஒரு புதிய உருவை ஏற்றிருக்கிறார். மூன்று நான்கடி உயரம். அடியில் பெருத்து முடியில் கூர்மையாக ஒடுங்கிய உருவம்.

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்



நெல்லை டிரேடிங் (மதுரை) கம்பெனியின் அதிபர் தூத்துக்குடி ஏ. சங்கரய்யர் அவர்களின் ஷஷ்டியப்த பூர்த்தி விழா ஜூன் மாதம் 1-ம் தேதி வெகுவிமரிசையாக நடந்தேறியது. இந்த வைபவத்துக்கு நண்பர்களும், உறவினர்களும், திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.

மாலை போட்டு அலங்கரிப்பதற்கு என்று ஒரு தனிச் சட்டம், அதை விலக்கிவிட்டு அர்ச்சகர் ஹாரத்தி பண்ணினால், சிலந்தி, நாகம், யானைக் கொம்புகளோடு கண்ணப்பரது ஒரு கண்ணும் லிங்கத் திருவுருவில் தெரியும். அந்தராளத்திலே கூப்பிய கையுடனும் வில்லைத் தாங்கிக் கொண்டு கண்ணப்பரும் சிலை உருவிலே நிற்கிறார் அங்கே. காளத்தி அப்பரை வணங்கித் திரும்பவும் வலமாகச் சுற்றினால், கிழக்கே பார்த்த திருக்கோயிலில் ஞானப் பூங்கோதை நிற்கிறாள். கம்பீரமான திருவுரு. இந்த 'வண்டாடும் குழல் உமையைப் பாகத்தில் வைத்து மகிழ்ந்தவனே கண்டார்கள் காதலிக்கும் கணநாதனும் காளத்தியான்' என்பார் சுந்தரர். இன்னும் கோயிலுக்குள் எண்ணற்ற பிராகாரங்கள். வெளியேயும் ஒரு மண்டபத்தில் கண்ணப்பர் நான்கு ஐந்தடி உயரத்தில் நல்ல கற்சிலை வடிவில். இது தவிர, செப்புச் சிலை வடிவிலும் அவர் உண்டு. இவைகளையெல்லாம் படம்பிடிக்க யாருக்கும் அனுமதி இல்லை. கோயிலுக்குள் நுழையும்போதே தான் காமிராவைக் கைப்பற்றிக் கொள்கிறார்களே கோயில் நிர்வாகிகள். ஆனால் இங்குள்ள கண்ணப்பரைக் காட்டிலும் அழகான கண்ணப்பர் ஒருவரை, சோழ நாட்டுச் சிற்பி கல்லில் உருவாக்கி, தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலில் நிறுத்தி இருக்கிறான். அவனது திரு உருவை பக்கம் 60-ல் காணலாம். கண்ணப்பர் தமிழ் மக்களின் பொது உடைமைப் பொருளாயிற்றே. அவரைத் தமிழ் நாட்டுப் புராணங்கள் எல்லாம் பாராட்டிப் புகழ்வதுபோலவே சோழநாட்டுச் சிற்பியும் வடித்தெடுத்து நிறுத்தி இருக்கிறான். இந்தக் காளத்தியப்பர் கோயில் பழுதுற்றிருந்ததை, தேவகோட்டை ராமநாதன் செட்டியார் குடும்பத்தினர் பத்து லக்ஷம் ரூபாய் செலவில் புதுப்பித்திருக்கின்றனர். இவ்வளவு செலவு செய்தும் உட்கோயில்களையே புதுப்பிக்க முடிந்திருக்கிறது. மற்றவை எல்லாம் பழைய கோயிலாகவே இருக்கிறது இன்றும். புதுப்பித்த ராமநாதன் செட்டியார், கோயிலுக்கு வெளியே பொன்முகலி ஆற்றுக்குச் செல்லும் படிக்கட்டின் பக்கத்திலே ஒரு சிறு படத்திலே சிலை உருவில் நின்று கொண்டிருக்கிறார். அவரது பக்தி சிரத்தையைப் பற்றி எவ்வளவோ சொல்கிறார்கள் மக்கள்.

கோயிலின் பின் புறத்திலே இரண்டு குன்றுகள்; ஒன்றின் மேலே கண்ணப்பர் தொழுத குடுமித் தேவர், இன்று கண்ணப்ப ஈசுவரர் என்ற பெயரோடு எழுந்தருளி யிருக்கிறார். மற்றொரு குன்றின் மேலே துர்க்கை. இரண்டு கோயில்களுக்கும் செல்வது கொஞ்சம் சிரமம். உயரம் என்பதினால் அல்ல. சரியான பாதை இல்லாத காரணம்தான். கண்ணப்பர் மலை ஏறும் மலைச்சரிவிலே மணிகண்டேசுவரருக்கு ஒரு கோயில். அதை அடுத்து மலையை வெட்டிச் செதுக்கிய மண்டபம். இதற்கு மணிகர்ணிகா கட்டம் என்று பெயர். இங்குதான் பெண் ஒருத்திக்கு இறைவன் தாரக மந்திரத்தை வலது காதில் ஓதி அருளினார் என்று கதை. காசி மணிகர்ணிகா கட்டத்தில் விசுவநாதர் அருளியது போல. இன்றும் மக்களிடத்து ஒரு நம்பிக்கை: அந்திம திசையை நெருங்கிக் கொண்டிருப்பவர்களை இம் மண்டபத்துக்குக் கொண்டு வந்து வலப்பக்கமாக ஒருக்கச் சாய்த்துக் கிடத்தினால் சாகிறபொழுது உடல் திரும்பி வலது காது வழியாகவே உயிர் உடலை விட்டுப் பிரிந்து செல்லும் என்கிறார்கள். இந்த மணிகண்டீசுவரர் கோயில் மூன்றாம் குலோத்துங்கன் என்னும் வீர ராஜேந்திர சோழன் கட்டியது என்று கல் வெட்டுகள் கூறுகின்றன. ஆதலால் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே காளத்தியப்பர் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். கோயிலின் நூற்றுக்கால் மண்டபம், காளி கோபுரம் முதலியன பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விஜயநகர மன்னர்கள் கட்டினார்கள் என்று திருவண்ணாமலையில் உள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

இத்தகைய சரித்திரப் பிரசித்தியோடு இலக்கியப் பிரசித்தியுமே பெற்றிருக்கிறது இவ்வூர். மதுரை சொக்கலிங்கப் பெருமானிடத்திலேயே குற்றம் குற்றமே என்று வாதாடிய சங்கப்புலவன் நக்கீரன் சாப விமோசனம் பெற்று, கயிலாய தரிசனம் பெற்ற இடம் இதுவே. அதனாலேயே இத்தலத்தை தக்ஷிண கயிலாயம் என்கிறார்கள். 'கயிலை பாதி காளத்தி பாதி' என்று அந்தாதி பாடிய நக்கீரதேவ நாயனார் இத்தலத்தைப் போற்றி யிருக்கிறார். காளத்தியைத் தரிசித்தால் கயிலையைத் தரிசித்த பலன். ஆம்! நமக்கும் கிடைத்துவிடுகிறது, காளத்தியைத் தரிசித்த பலன். காளத்தியைப் பற்றி, காளத்தி வாழ் கண்ணப்பரைப்பற்றி இவ்வளவு தெரிந்து கொள்கிற காரணத்தால்.

**இச் சிறந்த நூல்களை அன்பர்களுக்கு அளித்து வீட்டிற்கு வீடு ஒரு புத்தகசாலை நிறுவ உதவுங்கள்**

முன்வந்தவை

| | |
|---|---|
| சிறுகதை மஞ்சரி | ரூ. 1.50 |
| கற்பனைக் காடு | .. 1 50 |
| அன்னையின் குரல் | .. 3.00 |
| கடலும் கிழவனும் | .. 1.25 |
| சித்தார்த்தன் | .. 1.75 |
| பிரதாபமுதலியார் சரித்திரம் | .. 1.25 |
| கப்பண்ணு | .. 1.00 |
| தென் இந்திய வரலாறு | .. 2.25 |
| ஆதிமனிதன் | .. 1.50 |
| அரசியல் அறிவு | .. 0.75 |
| உலக வரலாறு | .. 2.50 |
| தமிழ்நாட்டுவரலாறு | .. 1.50 |
| நீங்களும் உங்கள் மோட்டாரும் | .. 2.00 |
| வானக்காட்சி | .. 2.00 |
| இன்றைய விஞ்ஞானமும் நீங்களும் | .. 1.75 |
| மகாத்மா காந்தி | .. 2.00 |
| ஆல்பர்ட் ஷ்வைட்ஸரின் சுயசரிதம் | .. 1.75 |
| புதுத் தமிழ் கவிமலர்கள் | .. 1.00 |
| செஞ்சொற் கவிக் கோவை | .. 1.00 |
| விஞ்ஞானியாக வேண்டுமா? | .. 1 00 |
| முதிர்ந்த பாலம் | .. 1 50 |
| கானகத்தின் குரல் | .. 1.50 |
| கர்லயந்திரம் | .. 1 75 |
| கோகொரோ | .. 1 00 |
| தேர்ந்தெடுத்த தென்மொழிச் சிறுகதைகள் | .. 1.60 |
| பத்து நாடகங்கள் | .. 1.25 |
| கருமி | .. 1.00 |
| பிளேட்டோவின் சாக்ரடீஸ் | .. 0.90 |
| சமையல் கலை | .. 1.50 |
| குமாவும் புலிகள் | .. 2.00 |
| கோன்-டிகி | .. 2.00 |
| வேடன் மகன் | .. 1.50 |

**விரைவில் வெளிவரும்**

ஓரங்க நாடகம்
நாட்டு நடனங்கள்
யானைத்தலைவன்பில்
நம்பிக்கை மீட்டல்
மனித தர்மம்




## இன்றே ஒன்று வாங்குங்கள் என்றும் புத்தகம் படியுங்கள்

வழக்கமாக நீங்கள் வாங்கும் கடைக்காரரிடம் இச் சிறந்த புத்தகங்களை வாங்குங்கள். இல்லாவிடில் எங்களுக்கு எழுதுங்கள்.

## தென்மொழிகள் புத்தக டிரஸ்ட்,

**3, வீட்கிராப்ட் ரோட், சென்னை-31.**

மேல்கண்ட புத்தகங்கள் தனிப்பட்ட பதிப்பாளர்களால் தென்மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் பதிப்பிக்கப்பட்டவை. இந்த டிரஸ்ட் லாப நோக்கமின்றிச் செயலாற்றும் ஸ்தாபனம்.

# கண்கள் உறங்காவோ?

**மாயாவி**

அத்தியாயம் 14

## தட்டு பறந்தது!

சொன்னபடி சுந்தரம் வீணாவை எதிர்பார்த்துக் காத்திருந்தான். அவன் புங்கனூர்க் காலனிக்குள்ளே கூடப் போகவில்லை. காலனிக்கு வெளியிலேயே, காரை ஒரு மரத்தின் நிழலில் ஒதுக்கி நிறுத்தி விட்டுச் சாலை ஓரத்தில் நின்றுகொண்டிருந்தான்.

வீணா அவனைக் கண்டதும் வண்டியை நிறுத்தச் செய்து, "ஏன் இங்கே நிற்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உங்களை எதிர்பார்த்துக்கொண்டு தான்" என்றான் சுந்தரம்.

"வராமல் ஏமாற்றி விடுவேனோ என்ற சந்தேகமா உங்களுக்கு?" — அவள் சிரித்தாள்.

சுந்தரம் சிரிக்கவில்லை. "சரி, இறங்கிக் கொண்டு வண்டியைத் திருப்பி அனுப்பி விடுங்கள்" என்றான்.

"வேண்டாம், மிஸ்டர் சுந்தரம்! சொன்னபடி நான் வந்துவிட்டேன். இனி நீங்கள் காரில் சென்று வேலையை ஒப்புக்கொள்ளுங்கள். நான் பின்னால் வண்டியில் வந்து இன்ஜினியரின் அலுவலகத்தில் உங்களைச் சந்திக்கிறேன். பெரியவர்கள் ஒன்றைச் செய்யக் கூடாதென்று சொல்லியிருக்கையில் அதை நாம் கங்கணம் கட்டிக் கொண்டுசெய்வது அழகில்லையே" என்றாள் அவள்.

ஆனால் சுந்தரம் கேட்பதாக இல்லை. அவன் அந்தப் பெரியவர்களையும், அவர்களுடைய கட்டுப்பாடுகளையும் பலவாறு இகழ்ந்து விட்டு, "நீங்கள் என்னோடு வரப் போகிறீர்களா, இல்லையா?" என்று கண்டிப்பாகக் கேட்டான்.

அவனுடைய பிடிவாதப் போக்கு வீணாவுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் காலைச் சம்பவங்களால் மனம் நொந்து போயிருக்கும் அவனிடம் இதற்குமேல் மறுத்துப் பேசினால் ஒருகால் கோபித்துக்கொண்டு ஊருக்கே திரும்பிவிடுவானோ என்று பயந்து, கீழே இறங்கிக் கொண்டு, மாடசாமியிடம் வண்டியை ஊருக்குத் திருப்பி ஓட்டிச் செல்லும்படி சொன்னாள்.

பிறகு அவர்கள் காலனிக்குள்ளே சென்றனர். சுந்தரம் இதற்குமுன் இரண்டொரு தடவைகள் இங்கே வந்திருந்தான். ஆதலால் பிரதம இன்ஜினீயரின் அலுவலகம் இருக்கும் இடம் அவனுக்குத் தெரியும். காரை அலுவலகத்தின் வாசலில் நிறுத்திவிட்டு அவனும் வீணாவும் உள்ளேசென்றனர்.

அலுவலகத்தில் அவன் தலைமைக் குமாஸ்தாவிடம் தனது விலாசச் சீட்டைக் கொடுத்து, பிரதம இன்ஜினீயரிடம் அனுப்புமாறு கேட்டுக் கொண்டான்.

சீட்டை வாங்கிப் பார்த்த தலைமைக் குமாஸ்தா, "சீப் இன்ஜினீயர் ஊரில் இல்லையே, சார்! நீங்கள் என்னவேலையாக அவரைப் பார்க்கவேண்டும்?" என்று கேட்டார்.

சுந்தரம் தான் வந்த காரியத்தை விவரித்ததும் அவர் மரியாதையுடன் எழுந்து, அவனுக்கும் வீணாவுக்கும் நாற்காலிகள் கொண்டு போடச் சொல்லி உட்காரச் செய்தார். பிறகு, "நேற்றே எங்களுக்கும் உங்கள் உத்தரவின் நகல் வந்துவிட்டது. ஆனால் அதை இன்ஜினீயர் பார்க்கவில்லை. அவர் முந்தாநாளே பட்டணத்துக்குப் போய் விட்டார். இன்று கட்டாயம் திரும்பி விடுவார்" என்றார்.

"காரில்தானே போயிருக்கிறார்?" என்று கேட்டாள் வீணா.

"இல்லை, ரயிலில். இன்ஜினீயரை அழைத்துவர ஸ்டேஷனுக்கு 'வான்' அனுப்பியிருக்கிறேன். அது திரும்பி வராததிலிருந்து வண்டி இன்னும் வரவில்லையென்று நினைக்கிறேன்" என்று விளக்கினார் தலைமைக் குமாஸ்தா.

"அப்படியானால் வாருங்கள், வீணா! நாம் அதற்குள் அணை ஸ்தலத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு



வந்துவிடலாம். இங்கே வெறுமனே காத்திருப்பானேன்?" என்று கூறியபடியே சுந்தரம் எழுந்தான்.

இருவரும் வெளியே வந்து அணைஸ்தலத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தனர். நடந்து கொண்டிருக்கும்போதே விஜயின் முகம் வாட்டமடைந்திருந்ததைக் கவனித்தான் சுந்தரம். அவன் நின்று, "ஏன் ஒருமாதிரி இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"பெரியவர்களின் வார்த்தையை மீறி நடந்ததன் பலன் கைமேல் கிடைத்துவிட்டது, பார்த்தீர்களா?"

அவன் கடகட வென்று சிரித்தான். "நல்ல பைத்தியம் உங்களுக்கு! வேலையை ஒப்புக் கொள்ளப் போகிறவர்களை எதிர்பார்த்துப் பூர்ண கும்பத்துடன் காத்திருப்பார்கள் என்று நினைத்துக் கொண்டீர்களா? என்னவோ நாம் போன சமயத்தில் இன்ஜினியர் இல்லையென்றால், வேலையே இல்லையென்றாகி விட்டதுபோல் வருத்தப்படுகிறீர்களே!"

"எனக்கு என்னவோ, மிஸ்டர் சுந்தரம், நாம் போன சமயத்தில் அவர் இல்லாமல் இருந்தது ஓர் அபசகுனம் போலவே படுகிறது."

"அபசகுனமும் இல்லை; மண்ணாங்கட்டியும் இல்லை. வேண்டாததையெல்லாம் நினைத்து வருத்தப்பட்டுக் கொள்ளாதீர்கள். நடங்கள். நாம் முதலில் அணை வேலையைப் பார்த்து விட்டுப் பிறகு காலனியில் டிஸ்பென்சரிக்கு வசதியான இடம் எங்கே இருக்கிறது என்பதையும் தேடி வரலாம்." சுந்தரம் நடையை எட்டிப் போட்டான்.

அவர்கள் அணை வேலை நடக்கும் மலை அடிவாரத்துக்கு வந்தனர். அங்கே இரண்டாயிரம் மூவாயிரம் பேர்கள் பல்வேறு வேலைகளில் சுறுசுறுப்புடன் ஈடுபட்டிருந்தனர். ஒரு பக்கம் கற்கள் பெயர்க்கப்பட்டன. மற்றொரு பக்கம் அவை சரளைக் கற்களாக உடைக்கப்பட்டன. பிறகு அவை சிமெண்டுடன் கலக்கப்பட்டு, பெரிய பெரிய சால்களில் கொட்டப்பட்டன. பிரும்மாண்டமான பாரந்தூக்கிகள் அந்தச் சால்களைத் தூக்கி அணைக்காக அஸ்திவாரம் இடப்பட்டிருந்த இடத்தில் கொட்டின. எங்கும் ஒரே பரபரப்பு; ஒரே இரைச்சல்.

அணை வேலை நடந்து கொண்டிருந்த இடத்தில் சுமார் மூந்நூறு அடி உயரத்தில் குன்று ஒன்று நின்றது. அது நடுவே பிளக்கப்பட்டது போல் சுமார் ஒரு பர்லாங் இடைவெளி விட்டு இரு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. அந்த இடைவெளியில்தான் புங்காறு கிழக்கு நோக்கிப் பாய்ந்தது. அங்கேதான் அணையும் நிர்மாணிக்கப்பட்டு வந்தது. அக்குன்றின் இரு பகுதிகளில் வடக்குப் பக்கமாக இருந்த பகுதியின்மீது ஒரு கோவில் தெரிந்தது. விஜு அதைச் சுட்டிக்காட்டி, "அதோ தெரிகிறதே, அது என்ன கோவில்?" என்று கேட்டான்.

"சேரவாய்மலை முருகன் கோவில். இம் முருகனுக்குச் செந்திவேல் முருகன் என்று பெயர். நம்மூரில் பலருக்கு இவர் தான் குலதெய்வம். எங்கள் வீட்டுக்கு; உங்கள் வீட்டுக் கெல்லாங்கூட."

தன் அத்தை அடிக்கொரு தடவை, "செந்திவேல் முருகா! செந்திவேல் முருகா!" என்று சொல்லிக் கொண்டிருப்பதன் காரணம் இப்பொழுதுதான் விஜுவுக்குப் புரிந்தது.

சுந்தரம் தொடர்ந்து சொன்னான்: "இந்தக் குன்றின் அடிவாரத்தில் முன்பு சிறு கிராமம் ஒன்று இருந்தது. அதன் பெயரும் சேரவாய்மலைதான். இப்பொழுது அந்த இடத்தில் மின்சார நிலையம் நிர்மாணிக்கப்படுவதால், கிராமத்தை அழித்துவிட்டு அங்கு வசித்த மக்களுக்குக் காலனியில் வீடு கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். ஆனாலும் இந்த இடத்தின் பெயர் இன்னும் சேரவாய்மலை என்றுதான் இருக்கிறது. புதிதாக ஏற்பட்டுள்ள தபால் ஆபீஸ், தந்தி ஆபீஸ் எல்லாவற்றுக்கும் அதே பெயர்தான்."

பிறகு அவன் அந்த அணையின் நிர்மாணப் பணிகள், நீர்த்தேக்க சக்தி, மின்சார உற்பத்தி சக்தி, இதற்கெல்லாம் செலவிடப்படும் தொகை ஆகியவற்றை அவனுக்குப் புள்ளி விவரங்களுடன் விளக்கினான்.

"பரவாயில்லையே! வேலையில் சேரு முன்பே இந்த அணைப் பணியைப் பற்றிய விவரங்களையெல்லாம் தெரிந்து கொண்டிருக்கிறீர்களே!" என்று வேடிக்கையாகச் சொன்னான் விஜு.

"இந்த அணை மட்டுமென்ன; நம நாட்டிலும், அயல் நாடுகளிலும் உருவான, உருவாகிக் கொண்டிருக்கும் முக்கியமான அணைகள் எல்லாவற்றையும் பற்றி நாங்கள் விரிவாக அறிந்திருக்க வேண்டும். அது எங்கள் பாட திட்டத்தின் ஒரு பகுதிகூட."

பின்னர் சுந்தரம் அவனுக்கு அணை வேலைக்கு உதவும் பல்வேறு கனின இயந்திரங்களையும் அணையில் நிர்மாணிக்கப்பட்டிருந்த பகுதியையும் சுற்றிக் காட்டினான். விஜு இதுவரை இம்மாதிரிப் பெரும் பணி ஒன்றைப் பார்த்ததில்லை. ஆகையால் அதன் ஒவ்வோர் அம்சமும் அவனுக்குப் பிரமிப்பூட்டியது.

"இன்ஜினியர்களாகிய நீங்கள் கலியுக பிரும்மாக்கள்தான்" என்று அவன் பாராட்டினான்.

"அடேயப்பா! இந்தச் சிறிய அணையைப் பார்த்தே இவ்வளவு பிரமித்துப் போய் விட்டீர்களே; வட நாட்டில் கட்டப்பட்டு வரும் பக்ரா-நங்கல், ஹிராகுட் போன்ற அணைகளைப் பார்த்தால் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவீர்களோ?" என்று சிரித்தான் சுந்தரம். பிறகு, "இந்த அணையைப் பார்க்கும் போது எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா?" என்று கேட்டான்.

"என்ன தோன்றுகிறது?"



"புங்கனூற்றின் நீர் மக்களுக்குப் பல விதங்களில் பயனளிக்கும் சக்தி பெற்றிருந்தும், அதை அவர்கள் தங்கள் அறிவின்மையால் பயன்படுத்திக் கொள்ளாது கடலில் கலந்து வீண் போக விட்டுக் கொண்டிருந்தார்கள் அல்லவா? அவ்வாறே இளமையும் சக்தியும் உடைய உங்களைப் போன்ற பெண்களுக்கு நம் சமூகமும் அதன் பிரதிநிதிகளாக விளங்கும் நம் பெரியோர்களும் தங்களது அறிவின்மையால் பல கட்டுப்பாடுகளை விதித்து, உங்களைச் சக்தி யிழந்த நடைப் பிணங்களாக்கி, வாழ்வைப் பாழடித்து வருகிறார்கள். இதோ, ஜலசக்தியை உணர்ந்த இன்ஜினீயர்கள் ஓர் அணையை எழுப்பி, பாழாகி வந்த நீரைத் தேக்கி எப்படிப் பயனுள்ளதாகச் செய்கிறார்களோ, அவ்வாறே மாதர் குலத்தின் மேன்மையை உணர்ந்தவர்கள் சமூகத்தின் கட்டுப்பாடுகளைத் தேக்கி நிறுத்தி விட்டு உங்கள் வாழ்வு இதரப் பெண்களின் வாழ்வுபோல் வளமுறச் செய்யப் புரட்சி மூலம் ஓர் அணையை எழுப்ப வேண்டும் என்பதை இது உணர்த்துவதாகத் தோன்றுகிறது."

வீணாவிடம் பலம்பொருந்திய, கருத்துச் செறிவுடைய உவமை ஒன்றை அழுத்தந் திருத்தமாகக் கூறி அவளை வாய் மூட வைத்துவிட்டான் சுந்தரம். ஆனால் இப் பேச்சு அவளுக்கு ஒன்றை உணர்த்தியது. அதாவது, சுந்தரம் இன்று பிடிவாதம் பிடித்துத் தன்னை இங்கே வரச் செய்தது வெறும் விருப்புக்காக இல்லை; அவன் மனப்பூர்வமாகவே ஒரு சமூகப் புரட்சிக்குத் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கிறான்.

அவர்கள் வந்த வழியாகவே திரும்பிக் கொண்டிருந்தனர். பிரதம இன்ஜினீயரின் அலுவலகத்தைத் தாண்டித்தான் அவர்கள் காலனிக்குச் செல்ல வேண்டும். அலுவலகத்தை நெருங்கிக்கொண்டிருந்த போது, அதன் வாயிலில் சுந்தரத்தின் கார் அருகில் 'வான்' ஒன்று நிறுத்தப் பட்டிருந்ததை வீணா கண்டாள். அவள் மகிழ்ச்சியுடன், "மிஸ்டர் சுந்தரம்! அதோ பாருங்கள், 'வான்' வந்து விட்டது. இன்ஜினீயர் வந்து விட்டார் போலிருக்கிறது. வாருங்கள் சீக்கிரம்" என்று வேகமாக நடக்கலானாள்.

ஆம், பிரதம இன்ஜினீயர் குலசேகர முதலியார் சென்னையிலிருந்து திரும்பி விட்டார். அவருக்கு நாற்பத்தைந்து வயதிருக்கும். அருள் வடியும் தோற்றம். கண்டவுடன் கையெடுத்துக் கும்பிட வேண்டுமென்று எவருக்கும் தோன்றும். மேல்நாடு சென்று இன்ஜினீயரிங் தொழிலில் பல பட்டங்கள் பெற்று வந்தவராக இருந்தபோதிலும், அவர் இந்தியப் பண்பாட்டைச் சிறிதும் வழுவ விடாமல் காப்பாற்றி வந்தார். சுந்தரத்தைப் போல் சூட்டும் கோட்டும் அணிந்திருந்தாலும் நெற்றி நிறையத் திருநீறுடன் சிவப் பழமாகக் காட்சி தந்தார். உருவத்தைப் போலவே அவர் உள்ளமும் சிறந்து விளங்கியது. உள்ளே வந்த சுந்தரத்தையும் வீணாவையும் இன்முகத்துடன் வரவேற்று உட்காரச் செய்து எல்லா விவரங்களையும் கேட்டுக் கொண்டார். பிறகு



# பஸ், லாரி, கார்

# கண்காட்சிப் பொருள் இல்லை

பஸ், லாரி, கார் ஓட ஓட அவற்றின் உறுப்புகள் தேய்ந்து விடும். கண்காணிப்பால், தேய்ந்த உறுப்புகளை, செப்பனிட்டு, டி. வி. எஸ். கால விரயத்தையும், வருமானக் குறைவையும் தவிர்க்கிறது.

இறக்குமதி சிக்கலால், உறுப்புகள் கிடைப்பது அரிதாகி வருகிறது. இதனால் ஏற்படும் சங்கடங்களை 46 வருட அநுபவத் தேர்ச்சி பெற்ற டி. வி. எஸ். உழைப்பாளிகள், உரிய இயந்திர சாதனங்களின் உதவியால், பழைய பாகங்களைப் புதுப்பிப்பதன் மூலம் குறைத்து வருகிறார்கள். இதனால்தான் டி. வி. எஸ். சர்வீஸ் நிகரற்ற வகையில் திகழ்கிறது.




## டி. வி. சுந்தரம் அய்யங்கார் &

மதுரை - திருச்சி - திருநெல்வேலி

## சுந்தரம் மோட்டார்ஸ்

சொந்த மகனிடம் பேசுவது போல், "ஏன் அப்பா சுந்தரம், சரியான ராகு காலத்திலே வேலையை ஒப்புக் கொள்ளுகிறேன் என்று வந்திருக்கிறாயே!" என்றார்.

சுந்தரத்துக்கும் அது இப்பொழுதுதான் நினைவு வந்தது. "சரி, அப்படியானால் ஒன்றரை மணிக்கு மேல் உங்களை வந்து பார்க்கிறேன்" என்று எழுந்தான் அவன்.

"இரு, இரு. இப்பொழுது எங்கே போகப் போகிறாய்?"

"சும்மா, வீணாவுக்குக் காலனியைச் சுற்றிக் காட்டி விட்டு, அப்படியே டிஸ்பென்சரிக்குத் தோதான இடம் தென்படுகிறதா என்று பார்த்து விட்டு வந்துவிடுகிறோம்."

"கெட்டிக்காரப் பிள்ளைதான்!" என்று முறுவலித்தார் குலசேகரம். "இடத்தைப் பற்றிய கவலை ஒன்றும் உங்களுக்கு வேண்டாம். வசதியான வீடு ஒன்றை அதற்கு நான் ஒதுக்கிக் கொடுக்கிறேன். நீங்கள் இந்த நேரத்தை உபயோகமாகக் கழியுங்கள். அதோ சேரவாய் மலைமீது செந்திவேல் முருகன் நம் எல்லோருக்கும் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார். இன்னும் கால் மணியில் அங்கே உச்சிக் காலப் பூசை நடக்கும். உன்னுடைய இந்த உடைகளையெல்லாம் கழற்றி வை. வீட்டிலிருந்து ஒரு வேட்டி கொண்டுவரச் சொல்கிறேன். அதை உடுத்துக் கொண்டு இரண்டு பேரும் கோவிலுக்குப் போங்கள். நீங்கள் மேற்கொள்ளப் போகும் தொழிலில் மேன்மையுறச் செய்ய வேண்டுமென்று வேலவனை வேண்டிக் கொண்டு வாருங்கள்."

அவ்வாறே, சிறிது நேரத்துக்குப் பிறகு சுந்தரமும் வீணாவும் சேரவாய்மலை முருகனைத் தரிசனம் செய்யக் கிளம்பினர். அவர்கள் குன்றை நோக்கி நடந்து கொண்டிருந்தபோது எதிரே அணை ஸ்தலத்திலிருந்து ஓர் இளைஞன் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான். அவன் இவர்களை மிகக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டே தாண்டிச் சென்றான். பிறகு சட்டென்று சைக்கிளைத் திருப்பிக் கொண்டு இவர்கள் அருகில் வந்து இறங்கினான். "மன்னித்துக் கொள்ளுங்கள்; எனக்கு ஒரு சந்தேகம். உங்கள் பெயர் வீணாவா?" என்று அவன் வீணாவிடம் ஆங்கிலத்தில் கேட்டான்.

"ஆமாம்!" என்று அவனைப் பார்த்து விழித்தாள் வீணா. அவளுக்கு யாரென்று தெரியவில்லை.

"என்னைத் தெரியவில்லையா? காசிப்பூரில் உங்களுடன் படித்த......"

அவன் வார்த்தையை முடிப்பதற்குள், "விகாஸ்!" என்று கூவினாள் அவள். "நீ இங்கே எங்கே வந்தாய் விகாஸ்?"

"கடந்த ஏழு மாதங்களாக நான் இங்கேதான் இன்ஜினீயராகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறேன் வீணா. ஆனால் நீ...நீ...?" அவன் அவளையும் சுந்தரத்தையும் மாறி மாறிப் பார்த்தான்.

வீணா அவனுக்கு எல்லாவற்றையும் விவரமாகக் கூறினாள். சுந்தரத்தையும் அவனையும் பரஸ்பரம் அறிமுகப்படுத்தி வைத்தாள். பிறகு விகாஸின் பெற்றோரைப் பற்றி விசாரித்தாள். கடைசியாக, "ஆமாம் விகாஸ், காசிப்பூரின் இரண்டாவது மகாராஜா எனப் புகழ்பெற்ற ரகுசந்திர மாமாவின் பிள்ளை ஒரு முந்நூறு ரூபாய் வேலையை நாடி வடநாட்டிலிருந்து தென்னாட்டுக்கு வந்திருப்பதை என்னால் நம்பவே முடியவில்லையே! உன் பெற்றோர் உன்னை எப்படி இந்தவேலைக்கு அனுப்புவதற்கு உடன்பட்டார்கள்?" என்று கேட்டாள்.

"அது ஒரு பெரிய கதை. பிறகு சொல்லுகிறேன். வாயேன், வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொண்டிருக்கலாம். எனக்குப் பன்னிரண்டு மணியோடு 'ஷிப்டு' முடிந்து விட்டது. இனி வேலை ஒன்றும் கிடையாது. வீடு அருகில் காலனியின் ஆரம்பத்தில்தான் இருக்கிறது" என்று விகாஸ் அவளை அழைத்தான்.

"இல்லை, விகாஸ்! நாங்கள் இப்பொழுது கோவிலுக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். அதன் பிறகு மிஸ்டர் சுந்தரம் பிரதம இன்ஜினீயரிடம் போய் வேலையை ஒப்புக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு வேலைகளும் முடிந்த பிறகு வருகிறேன். முடிந்தால் இருவருமே வருகிறோம்" என்றாள் வீணா.

"எந்தக் கோவிலுக்கு? அதோ மலைமீது இருக்கிறதே, அதற்கா?"

"ஆமாம்."

"நானும் உங்களுடன் வரலாமா? ஏன் மிஸ்டர் சுந்தரம், உங்களுக்குத் தடையேதும் இல்லையே? நான் இங்கே வந்து ஏழு மாதங்களாயிற்றே தவிர, வீட்டையும் அணை ஸ்தலத்தையுமன்றி வேறு எங்கும் போனதேயில்லை."

"வாருங்கள்; நன்றாக வாருங்கள். தமிழ் நாட்டின் ஆலயச் சிறப்புகளையெல்லாம் உங்களுக்கு விளக்கிக் காட்டுகிறேன்" என்றான் சுந்தரம்.

விகாஸ் சைக்கிளை உருட்டிக் கொண்டு அவர்களுடன் புறப்பட்டான். மூவரும் பேசிக்கொண்டே நடந்தனர். விகாஸ் சுந்தரத்தின் படிப்பு முதலியவற்றைப் பற்றி விசாரித்தான். பிறகு தங்கள் வேலை விவரங்களை அவனுக்கு விளக்கினான். இறுதியில் நன்றிப் பெருக்கோடு பிரதம இன்ஜினீயர் குலசேகர முதலியாரை மிகவும் புகழ்ந்து பாராட்டினான். "அவரிடம் வேலை செய்யக் கிடைத்திருப்பது நமது வாழ்விலேயே ஒரு மகத்தான பாக்கியமாகும், மிஸ்டர் சுந்தரம்! அவர் தமக்குக் கீழே வேலை செய்யும் இன்ஜினீயர்களை வெறும் ஊழியர்களாக நடத்துவதில்லை; பெற்ற பிள்ளைகளைப்போல் பராமரிக்கிறார்!" என்றான்.

"ஆமாம் விகாஸ்! நீ இங்கே குடும்பத்துடன்தானே இருக்கிறாய்?" என்று வீணா கேட்டாள்.

"குடும்பமா?" அவன் சிரித்தான். ஆனால் அச்சிரிப்பில் மகிழ்ச்சியில்லை; கேலியில்லை; சோகம் எதிரொலித்தது. "குடும்

பம் வேண்டாமென்றுதான் இங்கே வந்திருக்கிறேன், வீணா!"

அவன் வாழ்வில் ஏதோ துயர சம்பவம் நிகழ்ந்திருக்கிறது என்பதை இந்தப் பேச்சு வீணாவுக்கு உணர்த்தியது. "என்ன விஷயம் விகாஸ், நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று அவள் வினவினாள்.

"அதுதான், சற்றுமுன், 'பெரிய கதை; பிறகு சொல்கிறேன்' என்றேனே, அந்தக் கதை வீணா. உன்னிடம் சொல்வதற்கு என்ன? நீதானே என் கண் திறக்கக் காரணமாக இருந்தவள்!"

"விவரமாகச் சொல், விகாஸ்."—வீணா பதறித் துடித்தாள்.

"என்னை அப்பாவும், அம்மாவும் ஜோதிஷ்நகர் பள்ளிக்கு அனுப்பியது உனக்கு நன்றாக நினைவிருக்கிறதா? அதாவது உன்னை நான் கடைசி முறையாகச் சந்தித்த நாள்."

"ஆமாம்!"

"அப்பொழுது நான் அவர்கள் செயலின் காரணத்தை அறியவில்லை. பின்னால், நீ வாழ்விழந்தவள்; உன்னுடன் பழகக் கூடாது என்பதற்காகவே அவர்கள் நம்மைப் பிரித்தார்கள் என்று அறிந்ததும் நான் மிகவும் கொதிப்படைந்தேன். அன்று நான் ஓர் உறுதி செய்து கொண்டேன். உலகிலுள்ள அத்தனை விதவைகளின் துயரத்தையும் துடைக்க முடியா விட்டாலும், என் வரையில் ஒரே ஒருத்தியின் துயரையாவது துடைப்பதென்ற முடிவுக்கு வந்தேன். அச்சமயம் நான் ஜோதிஷ்நகர் கல்லூரியில் 'இண்ட'ரில் படித்துக் கொண்டிருந்தேன். அப்பா என்னை பி. ஏ. வரையில் தொடர்ந்து படிக்க வைத்துப் பிறகு தமது வர்த்தகத்தில் இழுத்துப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தார். ஆனால் நான் தொழிற்கல்வி ஏதாவது பயில விரும்பினேன். பிடிவாதம் பிடித்து பி. இ. வகுப்பில் சேர்ந்தேன். நான் தொழிற் கல்வி பெற விரும்பியதற்குக் காரணம் இதுதான். என் திட்டப்படி வாழ்விழந்த பெண் ஒருத்திக்கு வாழ்வளிக்க வேண்டுமென்றால், பெற்றோரின் விருப்பத்துக்கு மாறாகவே அதைச் செய்ய வேண்டியிருக்கும். அவர்களை உதறிவிட்டு வெளியேறக் கூட வேண்டியிருக்கும். அப்படிப்பட்ட நிலையில் வெறும் பி.ஏ.யாக இருந்தால் எங்கேயாவது ஒரு சாதாரணக் குமாஸ்தாவாகப் பணியாற்ற வேண்டியிருக்கும்; வறுமையுடன் போராடவேண்டியிருக்கும்; பெற்றோரின் விருப்பத்துக்கு மாறாகப் பெற்ற வாழ்வில் இன்பத்துக்குப் பதிலாகத் துன்பத்தையே பெற வேண்டியிருக்கும். ஆனால் தொழிற் கல்வி பெற்றால் கணிசமான வருவாய் அளிக்கும் பெரிய உத்தியோகத்துக்குப் போகலாம் அல்லவா?"

"சரி, சரி; புரிந்தது! படிப்பு முடிந்த பிறகு உன் அப்பாவும் அம்மாவும் உனக்குத் திருமணம் செய்து வைக்க முனைந்தார்களாக்கும். நீ ஒரு விதவையைத் தான் மணந்து கொள்ளுவேன் என்று அவர்களிடம் தகராறு பண்ணிவிட்டு, அவர்களைப் பிரிந்து இங்கே வந்துவிட்டாயாக்கும். சுந்தரமாவது பரவாயில்லை போலிருக்கிறதே; நீ அவரை மிஞ்சி விட்டாயே விகாஸ்!" என்று வீணா சொன்னாள்.

"ஓ! மிஸ்டர் சுந்தரமும் என் கட்சி தானா?" விகாஸ் சைக்கிளை நிறுத்திவிட்டுச் சுந்தரத்தின் கையைப் பிடித்துப் பலமாகக் குலுக்கினான்.

"சுயநல நினைவற்ற எந்த இளைஞன் தான் இந்த அட்டூழியங்களைச் சகிப்பான், மிஸ்டர் விகாஸ்?" என்றான் சுந்தரம். அவன் முகம் மகிழ்ச்சியில் மிதந்தது. அவனுக்குப் பக்க பலம் இப்பொழுது கிடைத்துவிட்டதல்லவா?

"இதெல்லாம் வீண் முயற்சி விகாஸ்! உங்களைப் போல் ஆயிரம் பேர்கள் ஒன்று சேர்ந்தாலும் சமூகம் என்ற பெரு மலையைப் புரட்டிவிட முடியாது" என்று வீணா சொன்னாள்.

"சமூகம் என்பது என்ன வீணா? நம் போன்றவர்கள் சேர்ந்து உருவாக்குவது தானே சமூகம்? உலக நடைக்கு ஒப்பத் தன்னை மாற்றிக்கொண்டு செல்லுவது தானே சமூகம்?" என்றான் விகாஸ்.

"நன்றாக இருக்கிறதே உன் பேச்சு" என்று நகைத்தாள் வீணா. "அப்படியானால் நம்மைப் பெற்று வளர்த்து ஆளாக்கி விட்டவர்களுக்கு, அவர்களுடைய சொற்களுக்கு நம் சமூகத்தில் இடமில்லையா?"

"இடமில்லை என்று நான் சொல்லவில்லை, வீணா! ஆனால் அவர்கள் இன்னும் தாங்கள் பிறந்த காலத்திலேயே இருக்கிறார்கள். காலம் மாறிவிட்டதை ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள். ஆண்டுகள் உருண்டோடி வாழ்க்கை நிலை மாறி வருவதைக் கண்ணால் கண்டும், அதற்கேற்றவாறு தங்கள் மன நிலையை மாற்றிக் கொள்ள மறுக்கிறார்கள். அன்று வாழ்விழந்த பெண்கள் அறிவிலிகளாக இருந்தார்கள். அடுக்களைக்குள்ளே அடைபட்டு வெளி உலகம் தெரியாதவர்களாக இருந்தார்கள். ஆதலால் பேதைமையில் ஊறிப் போயிருந்த அவர்கள் சூழ்நிலைகளின் காரணத்தால் சீரழிந்து விடாதிருக்கச் சில கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. அன்றைய நிலைக்கு அது சரி. ஆனால் இன்று வாழ்விழந்த பெண்கள் கல்வியறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள்; உலக அறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள். எது நல்லது, எது கெட்டது, எவன் நல்லவன், எவன் கெட்டவன் என்பதைத் தாங்களே பகுத்தறியும் திறன் பெற்றிருக்கிறார்கள். இப்படிப் பட்டவர்களுக்கு அன்றையத் தடைகளை விதிப்பதும், இவர்களுக்கும் வாழ்வை அளிக்க மறுப்பதும் சரியா வீணா? நீயே நினைத்துப் பார்; உனக்கே இது நியாயமாகப் படுகிறதா?"

"சிற்சில தடைகள் காலத்துக்கு ஒவ்வாதவைகளாக இருக்கலாம். அதற்காக



சென்னை அம்பீஸ் கபே ஹோட்டல் உரிமையாளர் திரு கே. ஏ. சுப்பிரமணியத்தின் சகோதரி செள. சுந்தராம்பாளுக்கும் திரு ராமநாதன் எம். ஏ.க்கும் விவாகம் நடந்தது.



சென்னை ஸ்டேட் பாங்கில் ஆபீஸராக இருக்கும் திரு கே. எல். சுப்பிரமணியம் அவர்களின் புதல்வி செள ராஜலக்ஷ்மிக்கும், திரு கே. ராமமூர்த்தி எம். ஏ.க்கும் விவாகம் நடந்தது.

எல்லாவற்றையுமே அர்த்தமற்றவை என்று கூறி விடுவதா விகாஸ்? தவிர, உங்களைப்போல் ஒருவர், இருவர் இதற்காகப் போரிடுவதால் என்ன பயன் ஏற்பட்டுவிடப் போகிறது? நீங்கள் என்ன மகாத்மாக்களா? அவதார புருஷர்களா? உங்கள் ஒரு சொல்லின் ஒரு செயலின் மூலம் உலகத்தைப் புரட்டி விடுவதற்கு!''

''நாங்கள் மகாத்மாக்கள் இல்லைதான்; அவதார புருஷர்கள் இல்லைதான். ஆயினும் மகாத்மாக்களாலும், அவதார புருஷர்களாலுந்தான் உலக அநீதியைப் போக்க முடியுமென்றால் அது இந்த யுகத்தில் நடக்கப் போகிற காரியமில்லை. ஒருவர், இருவர் போரிட்டால் போதாது; இளைஞர் சமுதாயமே திரண்டு நின்று போரிட வேண்டுமென்று காத்திருந்தாலும் இந்த அட்டூழியங்கள் இப்பிறவியில் அழியப் போவதில்லை. எந்தப் புரட்சிக்குமே ஒருவர் இருவர் முதலில் வழிகாட்ட வேண்டும்; உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்யவேண்டும். அப்பொழுதுதான் மற்றவர்களுக்கு விழிப்பு ஏற்படும். என் வரையில் இந்தப் பணிக்கு எவ்வளவு தூரம் உதவ முடியுமோ, அவ்வளவும் உதவத் துணிந்திருக்கிறேன். என் முயற்சி பலனளியாமல்போகலாம். ஆனால் ஓர் அரிய தொண்டைச் செய்த சுயதிருப்தி எனக்கு அப்பொழுது ஏற்படுமல்லவா. அது போதும்.''

அவர்கள் குன்றின் அடிவாரத்துக்கு வந்து விட்டார்கள். அங்கே பூசைச் சாமான்கள் விற்கும் கடைகள் வரிசையாக இருந்தன. விகாஸ் ஒரு கடையின் வாசலில் சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தினான். பூட்சையும் தொப்பியையும் கழற்றிவைத்தான். சுந்தரம், மூவரும் அர்ச்சனை செய்வதற்காக மூன்று செப்புத் தட்டுகளில் பூசைப் பொருள்களை வாங்கினான். ஆளுக்கு ஒரு தட்டைக் கையில் எடுத்துக் கொண்டு படிகள் வழியே ஏறிக் கோவிலை அடைந்தனர்.

உச்சிக்காலப் பூசை ஆரம்பிக்கும் சமயம். அர்ச்சகர் அவசரம் அவசரமாக அவர்களுடைய பெயர் - நட்சத்திரங்களைக் கேட்டுக்கொண்டு காற்று வேகத்தில் அர்ச்சனையை முடித்தார். தீபாராதனை நடந்தது. சுந்தரமும் வீணாவும் தாங்கள்



பம்பாய் லார்சன் டூப்ரோவைச் சேர்ந்த திரு கணேசனுக்கும் செள அபயாம்பாளுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



திண்டுக்கல் திரு எஸ்.எஸ். குப்புராஜு அவர்களுக்கும் செள துளசிபாய்க்கும் சமீபத்தில் திருமணம் அதிவிமரிசையாக நடந்தேறியது.

மேலக்கேவல் திரு வி. செம்பர முதலியார் எம். ஏ., பி. ஓ. எல். அவர்களின் புதல்வி செள கோமதியைத் திரு எஸ். சண்முகம் பி. ஏ. மணம் புரிந்து கொண்டார்.

திரு ஜி. வி. லக்ஷ்மி வராஹன் அவர்களின் புதல்வி செள பத்மலோசனிக்கும் திரு ஏ. கோபாலகிருஷ்ணனுக்கும் சிறப்பாக திருமணம் நடந்தேறியது.

மேற்கொள்ளப் போகும் தொழில்களில் வெற்றிதர வேண்டுமென்று செந்திவேல் முருகனைப் பிரார்த்தித்தனர். கர்ப்பூர ஆரத்தி முடிந்தது. அர்ச்சகர் அர்ச்சனைப் பிரசாதத்தை ஒவ்வொரு தட்டாக எடுத்து வந்து கொடுத்தார். முதலில் சுந்தரம் வாங்கிக் கொண்டான். பிறகு விகாஸ் வாங்கிக் கொண்டான். மூன்றுவது தட்டை வீணுவிடம் நீட்டிய அர்ச்சகர் சட்டென்று கையைப் பின்னுல் இழுத்துக்கொண்டு அதைச் சுந்தரத்திடம் நீட்டி, "சார்! நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள்" என்ருர்.

"நான் வாங்கிக்கொண்டு விட்டேனே! அது அவர்களுடையது; அவர்களிடமே கொடுத்து விடுங்கள்" என்ருன் சுந்தரம்.

"இல்லை; இதை உங்களில் ஒருவர்தான் வாங்கிக் கொள்ள வேண்டும்!"

"ஏன்?"

"இந்தக் கோவிலில் ஆகாமற்போன பெண்களின் அர்ச்சனையையே ஏற்றுக் கொள்ளக் கூடாது சார். நான் அவர்கள் நெற்றியைப் பார்க்காமல் ஏற்றுக் கொண்டு விட்டேன். பிரசாதத்தையும் அவர்கள் கையில் கொடுக்கச் சொல்லாதீர்கள். தர்மகர்த்தாவுக்கு விஷயம் தெரிந்தால் என் வேலை போய்விடும்."

அவர்கள் தமிழில் பேசிக்கொண்டதால் விகாஸுக்கு விளங்கவில்லை. அவன் என்ன தகராறு என்று சுந்தரத்தைக் கேட்டான், சுந்தரம் விஷயத்தைக் கூறியதும் விகாஸ் கடுங்கோபம் அடைந்தான். "தெய்வத்தின் முன்னுல்கூட இந்த அநியாயமா?" என்று கத்திய அவன் அர்ச்சகர் கையிலிருந்த தட்டைப் பிடுங்கி, பிரசாதத்தோடு தூர வீசி எறிந்தான்.

கோவில் பிராகாரத்தின் திறந்த பலகணி வழியாக அந்தத் தட்டு பறந்து சென்று குன்றில் பல இடங்களில் மோதிக் கொண்டே, கீழே ரஸ்தாவில் நடந்துகொண்டிருந்த ஒருவன் தலையில் போய் விழுந்தது.

"ஏ எங்கப்பா! எந்தப் பாவிப் பயலோ மண்டையைப் பிளந்துட்டானே!" என்று அலறி உச்சந்தலையைக் கையினுல் அமுக்கிக் கொண்டு நடு ரஸ்தாவில் உட்கார்ந்து விட்டான் தானுவதி. (தொடரும்)

ஹிந்துஸ்தான் லிவர் லிமிடெட் என்ஜினியர் திரு ஆர். ராமசாமிக்கும் செள லீலாவுக்கும் விவாகம் சிறப்புடன் நடைபெற்றது.

திருப்பாப்புலியூர் திரு ராமானுஜ அய்யங்கார் அவர்களின் புதல்வி செள சரோஜாவுக்கும் திரு ரங்கநாதனுக்கும் திருமணம் நடந்தது.

காணத் தவறாதீர்கள்!

பொன்னலூரி பிரதர்ஸாரின்

# தெய்வபலம்

பாதிக்கு மேல் கலரில்

டைரக்ஷன்

வசந்தகுமார் ரெட்டி



செம்ரியா ரிலீஸ்

# ஜ்வாலை

அன்று பௌர்ணமியல்ல, அதற்கு மூந்தின நாள். நிறைவுபெறாத நிலாவின் ஒளி அந்தி இருளை விரட்டிவிட்டு உலகத்தை வியாபித்துக் கொண்டிருந்தது. அதன் அமுத கிரணங்கள் பரந்த கடலின்மீது படியும்போது இன்பலாகிரியால் உணர்ச்சி வசப்பட்டு அந்தக் கருநீலக் கடல் தன் உடலை அசைத்து நெளிந்தது. அந்த அசைவின் நெளிப்பில் எழுந்த அலைகள் கரையை நோக்கித் தவழ்ந்து வரும்போது கடலானது கண்ணைப் பறிக்கும் வெள்ளிக் குழம்பைக் கொப்புளித்துக் கொண்டிருப்பது போன்ற ஒரு பிரமையை உண்டாக்கியது.

டாக்ஸியை ஒரு ஓரமாக நிறுத்திவிட்டுத் தன் தொழிலையும் மறந்து வேலாயுதம் எதிரே விரிந்து கிடந்த நீலக்கடலையும் அதன் கரையில் அமர்ந்து தங்கள் கவலைகளையும், உடல் களைப்பையும் தணித்துக் கொண்டிருந்த மனிதக் கூட்டத்தையும் நினைத்துப் பார்த்தான். ஆழ்கடலுக்கும் மனித உள்ளத்துக்கும் ஏதோ ஒரு தொடர்பு நீண்ட காலமாக இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் கவிஞர்களும், கதாசிரியர்களும் மனித நெஞ்சத்தை ஏன் கடலின் ஆழத்துடன் ஒப்பிட வேண்டும்? அதிருக்கட்டும்; இந்த அலைகள் தாம் ஏன் மாலை நேரத்தில் அவற்றின் கரையில் ஜனங்கள் வந்து அமரும்போது குதித்துக் குதித்துக் கும்மாளம் போட வேண்டும்? எதற்காக அவை இப்படி 'ஹோ'வென்று கோஷமிடுகின்றன? தன் நெஞ்சின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் எந்த ரகசியத்தைக் கூற இப்படித் துடிக்கின்றன? ஆம்; அது வெறும் ரகசியமல்ல, ரகசியத்தின் சுமை! அந்தப் பெரும் சுமையைத் தாங்கமுடியாமல் தான் அவை இப்படி வேதனையுடன் தவிக்கின்றன. எத்தனை பேர்கள் எத்தனை வருஷங்களாக இந்தக் கரையில் நின்றுகொண்டு தங்கள் மகிழ்ச்சியையும் அயர்ச்சியையும், கண்ணீரையும் வெளியிட்டிருப்பார்கள்! மைந்தனைப் பறிகொடுத்த தந்தையின் வேதனையையும்; வீட்டில் நாலு பேர் முன்னால் பேச வெட்கப்பட்டுக்கொண்டு இங்கு வந்து தங்கள் உள்ளக் காதலையும், ஆசையையும் அன்பையும் போட்டி போட்டுக் கொண்டு இடைத்த அவகாசத்தில் பரிமாறிக் கொள்ளும் இளம் தம்பதிகளின் சுவையான கட்டுரைகளையும் இக்கடல் கேட்டிருக்கும். வாழ்க்கையில் உணர்ச்சி வசப்பட்டு ஏமாற்றமடைந்த உள்ளங்களின் ஆற்றாமை, வேலை கிடைக்காமல் அலைபவர்களின் குமுறல்... இது மட்டுமா? மானிடப் பிறவியின் சில பயங்கரச் செயல்களைக்கூட அது பார்த்திருக்கும்!

"டா...க்...ஸி!"

வேலாயுதம் திரும்பிப் பார்த்தான். அவன் நிறுத்தியிருந்த டாக்ஸியின் அருகே இருவர் நின்று கொண்டிருப்பதையும் தன்னை அழைத்தது அந்த இருவரில் ஒரு பெண் என்பதையும் தெரிந்து கொண்டான். வேலு அருகில் வந்ததும் கதவைத் திறந்து கொண்டு அந்த இளைஞனும் யுவதியும் பின் ஸீட்டில் ஒருவர்மேல் ஒருவர் விழாத குறையாக ஏறி அமர்ந்து கொண்டனர். அப்போது டாக்ஸி ஒருமுறை பலமாகக் குலுங்கியது. மீட்டரைப் போட்டுவிட்டு வண்டியைக் கிளப்புவதற்குள் உள்ளே அமர்ந்திருப்பவர்களை ஒரு 'நோட்டம்' விட்டான் வேலு. அவர்கள் அவனுக்குப் பரிச்சயமானவர்கள் தான். ஆனால் அவர்களுக்கு அவனைத் தெரியாது. தொழிலாளிக்கும் முதலாளிக்கும் உள்ள உறவு இப்படித்தானே இருக்கிறது?

"கிதர் ஜானேகா, சாஹப், மாதுங்கா?" என்று அவன் கேட்டதும், "ஆமாம்!" என்ற பதில் சற்று ஆச்சரியம் கலந்து வந்தது. அத்துடன், "சீக்கிரம்! வேகமாகவிடு!" என்று கூறிய அந்த யுவதியின் பதற்றக் குரலும் கலந்துகொண்டது.

கொஞ்ச நேரத்துக்கு அவர்கள் பெரிதாகவிடும் பெருமூச்சுமட்டுமே கேட்டது. பிறகு அவர்கள் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். அழகு கொழிக்கும் அந்த வனிதையின் அன்பு ஸ்பரிசம் அந்த ஆடவன்மீது பட்டது. தலைக்குமேல் மாட்டியிருந்த நீண்ட சதுரக் கண்ணாடியில் இக்காட்சியைக் கண்ட போது அடிக்கடி அந்த நாரீமணி தன் செம்பவழ உதட்டைத் திறந்து, "எனக்கென்னமோ பயமாக இருக்கிறது!" என்று பீதி கலந்த குரலில் திருப்பித் திருப்பி மிழற்றுவதும் அதற்கு அந்த வாலிபன், "இதற்கெல்லாம் கவலைப்




வெ. ராதாகிருஷ்ணன்





பரோடா ரயில்வே அதிகாரிகள் கல்லூரியைச் சேர்ந்த திரு வி.கே. ஸ்தாணுநாதன் அவர்களின் மருமானும், திரு சி. என். ராமனின் புதல்வனுமான சிரஞ்சீவி ராஜகுமாரின் உபநயனம் சமீபத்தில் சிறப்பாக நடந்தேறியது. இந்த வைபவத்தில் குமாரி ராணீராமன் நடனவிருந்தளித்து வந்திருந்தவர்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடித்தார்.

பட்டால் எப்படி? வீணாகப் பயந்து சாகாதே, விஜயா!" என்று தேறல் விழுந்த இசைத்தட்டாக மாறிப் பதில் அளிப்பதும் வேலுவுக்குத் திகைப்பாகவும், வேடிக்கையாகவும் இருந்தது. 'எதைக் கண்டு இவர்கள் பயப்பட வேண்டும்? எதற்காக இவர்கள் கவலைப்பட வேண்டும்?' என்று அவனுக்கு விளங்கவில்லை. என்றாலும் ஒரு மாதிரி விளங்கத்தான் செய்தது. ஏனென்றால் அவனுக்கு அவர்களைத் தெரியும்.

வேலு தன் டாக்ஸியில் எத்தனையோ தடவைகள் இதே நேரத்தில் இங்கிருந்து அவர்களை மாதுங்காவுக்கு ஏற்றிச்சென்றிருக்கிறான். முதன் முதலில் இவ்விருவரையும் சந்தித்தபோது வசீகரம் பொருந்திய இந்த ஜோடி அவன் மனத்தில் ஒரு மானசீகத் திருப்தியை ஏற்படுத்தியது. "இப்பெண்ணுக்கு இந்த ஆசாமிதான் கணவனாக வாய்க்க வேண்டும். இல்லாவிட்டால் பிரம்மா மிகுந்த பிரயாசையுடன் செய்த இந்த அற்புத சிருஷ்டி வீண்!" என்று எண்ணினான். என்றுமே உள்ளத்தில் தோன்றிய முதல் அபிப்பிராயம் வைரத்தை விட உறுதி வாய்ந்ததல்லவா? சிருஷ்டி கர்த்தாவும், காலதேவனும் கூர்ந்து நோக்கி ஒவ்வொரு அங்கத்தையும் ஆராய்ந்தறிந்து அமைத்து மலரின் மென்மையையும் பால்நிலவின் தண்மையையும் கொண்ட கலவை பூசி, வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் இந்தச் சுந்தரியைப் பூலோகத்துக்கு அனுப்பியிருக்க வேண்டும்! அவளைப் பார்க்கும்போதெல்லாம் சிவந்த எல்லைக்குள் தாழம்பூ நிறத்தில் ஒளிரும் விளக்கின் சுடர்தான் வேலுவின் கண்முன் தோன்றும். அந்த அழகில் அச்சம் தரும் ஒரு தீவிர சக்தி ஜ்வாலை விட்டுக் கொண்டிருந்தது. கண்ணைப் பறிக்கும் மின்னலின் வெட்டு எவ்வளவுதான் ரம்மியமாக இருந்தாலும், கண்ணிமைக்காமல் பார்க்க வேண்டும் என்ற துணிவு மட்டும் நமக்கு வருவதில்லையல்லவா? அதனால் அந்தப் பெண்ணை நோக்கும்போதெல்லாம், எண்ணும்போதெல்லாம் தூய்மையான, பயமும் பவ்யமும் கலந்த ஒரு உணர்ச்சி வேலுவின் மனத்தில் உண்டாவது வழக்கம். பார்த்தவுடன் இப்படிப்பட்ட புனிதமான உணர்ச்சியைத் தூண்டிவிட்ட ஒரே பெண் நாளதுவரை இவள்தான். அப்படியானால் அவன் எவ்வளவு நல்லவனாக யிருக்கவேண்டும்? அவனது நெஞ்சில் கிளர்ந்த காதல் எத்தகைய சக்தி வாய்ந்ததாக இருக்க வேண்டும்? அவன் வாயிலிருந்து பிறக்கும் வாக்கு இனிமையாகத்தானே இருக்க முடியும்? கொள்ளை அழகும், குன்றுபோல் குணமும் உடைய இந்தப் பெண்ணின் பரிபூரண அன்பைப் பெற்றது அந்த இளைஞனின் பூர்வ ஜன்மம் என்று ஒன்று உண்டானால் அதில் செய்த தவத்தின் பயனாகவே இருக்க வேண்டும்!

தாதர் சர்க்கிளில் வளைந்து திரும்பி நீண்டு கிடந்த வின்ஸன்ட் ரோடில் வழுக்கி விழுந்துவிடும் வேகத்தில் டாக்ஸி ஓடியது. டாக்ஸிக்குள் நிலவியிருந்த அமைதி கசப்பு மருந்தைக் குடிப்பது போலிருந்தது. அவ்விருவரும் பேசவேண்டியதையெல்லாம் பேசித் தீர்த்திருக்க வேண்டும். ஆனால் காதல் நெஞ்சம் இந்த உலகத்தில் புத்தம் புதிய கற்பனைகள் வற்றாத ஊற்றுப்போல் உதிக்கும் இடம். அதிக நேர மௌனத்துக்கு அங்கு இடம் கிடையாது. இது அநுபவ வாக்காக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் இதோ இவர்கள் திரும்பவும் பேச ஆரம்பித்திருப்பார்களா?

"விஜயா! இதோ பார், நான் இத்தனை நேரம் உன்னிடம் கூறியதெல்லாம் வீணாயிருக்கட்டும். இதைப்பற்றி நாம் தினமும் பேசியிருக்கிறோம். அதனால் புதிதாக யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. பயந்து பயந்து நாம் சந்தித்துக் கொள்வதில் சந்தோஷம் இருக்கிறது என்று நீ நினைக்கிறாயா? இந்த வேதனையிலிருந்தும் பயத்திலிருந்தும் விடுபடுவதற்குள்ள திட்டத்தைத்தான்.........!"

"உஸ்......அதற்குமேல் நீங்கள் பேச வேண்டாம். நான்தான் 'சரி'யென்று




## ஆபீஸ் மற்றும் வீட்டிற்கான ஆல் - ஸ்டீல் உபகரணங்கள்



**ட்யூபுலர் மேஜை :**
மிடுக்கான தோற்றம். வேலை செய்ய சௌகரிய மானது. ஆபீஸ்களுக்கு உபயோகமானது.



**ஸ்டாண்டர்ட் பீரோ :**
ரம்மியமான கலர்களில் கிடைக்கும். சாமான்களை சுத்தமாகவும் பத்திரமாகவும் இருக்க உதவுகிறது.



**மடக்கும் நாற்காலி :**
அழகானது. சுலபமாக மடக்கக் கூடியது. மற்றும் உறுதியானது.

**அடிஸன் & கோ., (பிரைவேட்) லிமிடெட்**
மதராஸ் - - - - - - பெங்களூர்

ஸ்டாக்கிஸ்டுகள் : விஜயலக்ஷ்மி & கோ., சேலம் ○ தண்டபாணி & கோ., ஈரோடு ○ கே. என். ஏ. குப்தா டிரேடிங் கோ., குடியாத்தம் ○ கேரளா எவரெஸ்ட் மர்க்கன்டைல் இன்டஸ்ட்ரியல் கோ., மதுரை. லக்ஷ்மி பர்னிச்சர் மார்ட், தஞ்சை ○ ஏ. ராஜமாணிக்கம், அவினாசி ரோடு, கோயமுத்தூர்



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
### பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதறாஸ் - 5
தந்தி : 'EVERMANS' போன் : 85834

சேரக் கடைசி தேதி 23-7-1959 .. முதல் ஏலத் தேதி 25-7-1959

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (4-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப் படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள் B-6, பிளாக் III, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி - 1. ● 10197, அஜ்மல்கான் ரோடு கரோல்பாக், புது டெல்லி-5 ● 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3 ● பெங்களூர் கிளை ஆபீஸ் : "ஜெயகத் பில்டிங்ஸ்", வில்சன் ஜுபிலி பார்க் ரோடு, பெங்களூர் - 2 ● பம்பாய் கிளை ஆபீஸ் : "விஜய விஹார்" 17-A, லையன் - மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய் - 22

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

அப்பொழுதே சொல்லிவிட்டேனே. என்னூலும் ஏனோ என் உள்ளம் கடுங்குகிறது.''

''மறுபடியும் சொல்லுகிறேன், விஜி, இப்படி கடுங்கிச் சாவதில் அர்த்தமில்லை. நீ செய்யும் காரியத்தினால் துரோகம் இழைப்பதாக அந்தராத்மா இடித்துக் காட்டினால் நீ தங்கி விடலாம். ஆனால்... அப்படித் தங்கிவிட்டால்...தங்கி விட்டால் என் கதி? விஜி, நீ தினமும் பிரிந்து செல்லும்போது என் மனம் எத்தகைய சித்திரவதைக்கு ஆளாகிறது, தெரியுமா? அந்த அவஸ்தையை நிரந்தரமாக்கி விடாதே, விஜயா!'' கம்பீரமாகத் தோன்றிய அந்த ஆணின் குரலிலும் ஒரு இளக்கம். ஐயோ! காதல் இன்பத்தைக் கொடுக்கும் உணர்ச்சியா? இல்லை, சுத்தப் பொய். உலகத்தில் ஆளை உருக்கிவிடும் துன்பம் ஒன்று உண்டானால் அது காதல்தான்!

வார்த்தைகள் மெதுவாக அடங்கியதும் விசும்பலின் ஒலி இலேசாக எழும்பியது. விஜயா என்று அழைக்கப்பட்ட அந்தச் சுந்தரி அவன் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்தாள். அந்த யுவனின் கரம் அவளது கூந்தலை வருடிக் கொண்டிருந்தது. ''அழாதே, விஜி!'' என்று உடைந்த குரலில் அவன் கூறியது கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல் இருந்தது.

வேலுவின் மூளை அவர்களது பேச்சைக் கேட்டுக் குழம்பியது. 'இதென்ன இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு அழுகிறார்கள்? இவர்களது பேச்சில் அடிபட்ட திட்டம், துரோகம் என்ற சொற்களுக்குள் புதைந்திருக்கும் ரகசியம் தான் என்ன? ஒருவேளை வழக்கம்போல் எல்லோரும் வரும்முடிவுக்கு அதாவது தங்களுக்கு எதிராகக் கிளம்பும் சக்தியின் கரங்களுக்கு எட்டாதபடி ஓடிவிடும் முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்களோ? அப்படி இவர்கள் திட்டமிட்டால் அது எப்படித் துரோகமாகும்? இவர்களது வாழ்வுக்குக் குறுக்குச் சுவர் எழுப்புபவர்கள் அல்லவா உண்மை துரோகிகள்?'

''இங்கே நிறுத்து டிரைவர்!''

அவர்களது மன நிலையைப் புரிந்து கொண்டவன்போல் வேலு பக்கத்திலிருந்த திருப்பத்தின் இருள் படிந்த பகுதியில் டாக்ஸியை 'நிறுத்தினான். இருவரும் கீழே இறங்கினார்கள். அந்த ஆடவன் அவளது வெண்மையான மென்மை பூசிய கரத்தைப் பற்றி, ''காலை ஏழு மணி, மறந்து விடாதே. நேராக ஸ்டேஷனுக்கு வந்துவிடு. இதே டாக்ஸி உனக்காக இங்கு ஆறரை மணியிலிருந்து காத்துக் கொண்டிருக்கும். உனக்காக நான் காத்துக் கொண்டிருப்பேன். தைரியத்தை நழுவ விட்டுவிடாதே!'' என்றான். அந்தச் சுந்தரி கருவண்டு போலிருந்த தன் கண்கள் அலைபாயத் தலையை அழகாக அசைத்தாள். பிறகு அவன் வேலுவிடம், ''டிரைவர்! காலைக்கு இதே இடத்தில் மாலை ஆறரை மணிக்கு இருக்க வேண்டும். இவளைக் காரில் ஏற்றிக்கொண்டு 'சென்டிர'லுக்கு 'டெக்கான் குயின்' புறப்படுவதற்கு அரைமணி முன்னதாக வந்துவிடு. முதல் வகுப்புப் பிரயாணிகள் தங்கும் அறையில் நான் இருப்பேன். இந்தா இருபது ரூபாய். காலை சரியாக ஆறரை மணிக்கு வந்துவிடு?'' என்று சொல்லியவாறே நோட்டுக்களை வேலுவின் கையில் திணித்தான். வேலு



வாயெல்லாம் பல்லாக, மனமெல்லாம் மகிழ்ச்சி பொங்கி வழிய, "இந்த வேலு கிட்டே ஒரு விசயத்தை ஒப்புச்சா அதை முடிக்கிறவரைக்கும் கண் மூட மாட்டான்!" என்று கூறினன் அவர்கள் மொழியிலேயே.

"அது மட்டுமல்ல, அப்பனே! இது பரம ரகசியமாக இருக்க வேண்டும்!"

"ஆ, அதென்ன அப்படிச் சொல்லிப் பிட்டிங்க. இந்த நெஞ்சுக்குள்ளே ஒரு விசயத்தைப் போட்டுட்டேன்னு அப்புறம் கடவுளே வந்தாலும் அறிஞ்சுக்க முடியாதுங்க. நீங்க கிஞ்சித்தும் பதருநீங்க!"

கடவுள் என்ற சொல்லைக் கேட்டதும் அந்த யுவதி திடுக்கிட்டாற்போல நிமிர்ந்து பார்த்தாள். அந்த ஒரே விநாடிக்குள் அவள் முகத்தில் விவரிக்க முடியாத கலவரத்தின் நிழல் படிந்து மறைந்தது. அவள் சட்டென்று, "ரொம்ப நேரமாகி விட்டது, நான் வருகிறேன்!" என்று கூறிவிட்டு வீதியில் இறங்கி விடு விடு வென்று நடக்க ஆரம்பித்தாள். அடுத்த முனையில் திரும்பும்போது அவள் முகத்தைத் திருப்பி அந்த இளைஞனை ஒரு தடவை பார்த்தாள். அவன் கரத்தை ஆட்டினன். அடுத்த விநாடி அவள் உருவம் மறைந்து விட்டது.

**ம**று நாள்.

'எம்பயர்' தியேட்டரில் ஆறரை மணி காட்சிக்கு 'க்யூ' நிற்கும்போது, வேலுவின் டாக்ஸி குறிப்பிட்ட இடத்தில் வந்து நின்று விட்டது. டாக்ஸியை ஒட்டியிருந்த காம்பவுண்டு சுவரின் உட்புறத்தில் வளர்ந்து வீதிப்பக்கம் கவிந்திருந்த மனோரஞ்சித மலரின் கொடி பரப்பிய சுகந்தம் 'கம்'மென்று வீசியது. முன் பனிக்காலமாதலால் இயற்கை தன் நீல நிறத் திரையை மெல்ல மெல்ல இழுத்து உலகத்தை மறைத்துக்கொண்டிருந்தது. தெருவின் முனையில் பதிந்த வேலுவின் கண்கள் விஜயாவின் உருவத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தன. இன்னும் சிறிது நேரத்தில் அவள் வந்து விடுவாள்! சில மணி நேரத்தில் அவள் அந்தக் கலை பொருந்திய வாலிபனுடன் ரயில் வண்டியில் பிரயாணம் செய்துகொண்டிருப்பாள். அவர்களது வாழ்க்கைப் பகுதியின் இரண்டாவது அத்தியாயம் இன்பமான பிரயாணத்துடன் ஆரம்பமாகும். பிறகு 'என்ஜின் லைட்'டின் பிரகாசமான வெளிச்சத்தில் கண்ணுக் கெட்டியதூரம் வரை விரிந்து கிடக்கும் ஒளி நிறைந்த பாதையைப்போல் அவர்களது வாழ்க்கையும் ...!

வேலாயுதம் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ஏழு அடிக்க இன்னும் இரண்டு நிமிடங்கள் இருந்தன. அவன் உள்ளத்தில் ஒரு பரபரப்பு மூண்டது. அவள் ஏன் இன்னும் வரவில்லை?

தெருவில் போவோரும் வருவோருமாக இருந்தார்கள். முனையில் திரும்பிய எத்தனையோ ஸ்திரீகள் அவனை நோக்கி வந்து அவனையும் தாண்டிச் சென்றார்கள். ஆனல் கொழுந்து விட்டெரியும் அழகு

டைய அந்த நங்கையை மட்டும் காண வில்லை! கடிகாரத்தின் நீண்டமுள் வெறி பிடித்ததுபோல் சுற்றுவதாகத் தோன்றி யது. மணி ஏழைக் கடந்து ஐந்து நிமிஷங்கள் ......பத்து......பதினைந்து...... வேலுவின் இதயம் படபட வென்று அடித்துக்கொண்டது. ஒரு வேளை ...ஒரு வேளை அவள் வரவே மாட்டாளோ? தன் மனத்தை மாற்றிக்கொண்டிருப்பாளோ? அல்லது விஷயம் வெளிப்பட்டுக் குடும்பத் தினர் அவளை ஓர் அறையில் அடைத்து வைத்த, "பெண்ணே! இப்பொழுது உன்னுடைய காதல் என்ன செய்கிறது, பார்ப்போம்!" என்று சவால் விட்டுக் கொண்டிருக்கிறார்களோ?

வேலு நம்பிக்கை இழக்கும் தருவாயில் மறுமுனையில் விஜயாவின் உருவம் தோன்றி வேகமாக அவனை நோக்கி முன் னேறியது. தன் முகத்தை முக்காடிட்டுக் கொண்டு பதற்றத்துடன் வந்தவள் டாக்ஸியின் கதவைத் திறந்து உள்ளே கோழிக்குஞ்சைப்போல் பதுங்கிக்கொண் டாள். வேலு வண்டியை 'ஸ்டார்ட்' செய்து 'மெயின்' ரோட்டில் விட ஆரம்பித்தான்.

"ஏம்மா, இத்தனை நேரம்? உங்களை எதிர்பார்த்து எதிர்பார்த்துக் கண்ணு பூத்துப் போச்சுங்க. ஏழு நாற்பத்தைந் துக்கு 'டெக்கான் குயின்' புறப்பட்டு விடுமே. இன்னும் இருபது நிமிசத்திலே சேர்ந்தாகணுமே!" என்றதும் 'ஆக்ஸி லேட்டரை' அழுத்தினான். வண்டி வேகத்தால் உந்தப்பட்டு விரைந்தது.

"இன்னும் வேகமாக விடு, அப்பா!"

மைல் முள் பத்து, இருபது என்று ஏறிக் கொண்டிருந்தது. தன்னை மறந்த நிலையில் வேலுவின் கைகளை வேறு ஏதோ ஒரு சக்திதான் இயக்கியிருக்கவேண்டும். இப்பொழுது வண்டி நாற்பது மைல் வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. ஐ...ய்...யோ இதென்ன?...அடுத்த திருப் பத்திலிருந்து மெயின் ரோட்டில் கலக்க வரும் இந்த ராட்சச லாரி......

வேலு 'பிரேக்' போட்டு வண்டியை நிதானப்படுத்துவதற்குள் குறுக்கே பாய்ந்த மலை போன்ற லாரியின் மீது டாக்ஸி பயங்கர சத்தத்துடன் மோதி யது. "வீல்!" என்ற ஒரு அலறலின் எதிரொலிமட்டும் எங்கும் பரவியது.

* * *

'ஜஹாங்கிர்' ஆஸ்பத்திரியின் இரண் டாவது மாடியில் அறுபத்தொன்றாவது வார்டில் பிரவேசித்த நர்ஸ் ஒருகணம் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றாள். கட்டிலில் பிரக்ஞையிழந்து உடம்பு முழு வதும் கட்டுக்களுடன் கிடந்த ஆசாமி யின் முகம் அசைந்து கொண்டிருந்தது. அவன் கண்கள் மெல்லத் திறந்துகொள் வதைக் கவனித்த நர்ஸ் இளநகை செய் தாள். திடீரென்று அவன் கண்களில் எதையோ ஞாபகப் படுத்திக் கொண்ட ஒரு உணர்ச்சி பிரதிபலித்தது. சடக் கென்று கட்டிலில் எழுந்து உட்கார



இந்தியாவிலிருந்து மலாயாவுக்குப் பிரபல திரைப்பட நடிகைகளான பத்மினியும், ராகினியும் வந்திருந்த பொழுது பினாங்கிலுள்ள தமிழ் இளைஞர் மணி மன்றத்தார் அவர்களுக்குத் தேநீர் விருந்தளித்து உபசரித்தனர். ஜியார்ஜ்டவுன் மேயர் டி. எஸ். ராமநாதன் இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்தார்.

முயன்ற அவனை நர்ஸ் பாய்ந்து வந்து பிடித்துக் கொண்டு "இப்பொழுது நீ எழுந்திருக்கக் கூடாது" என்று கூறினாள்.

நர்ஸ் ஒரு கணம் அவனை வெறித்துப் பார்த்தாள். பிறகு, "உனக்கு உடம்பு பூர்ணமாகக் குணமாக வில்லைபோலிருக்கிறதே. இப்பொழுது நீ பேசவே கூடாது!" என்றதும் சுவரில் தொங்கிய குறிப்பேட்டில் எதையோ கிறுக்கிவிட்டுக் கவுன் சரசரக்க வெளியேறினாள்.

மாலையில் டாக்டர் வந்தார். அவரைப் பார்த்தவுடன் வேலு மரியாதைக்காக எழுந்து உட்கார முயற்சி செய்தான். காலையிலிருந்ததை விட இப்பொழுது அவன் முகம் தெளிவடைந்திருந்தது; சற்றுத் தெம்பும் ஊறியிருந்தது.

"உடல்நிலை எப்படி இருக்கிறது, வேலாயுதம்?" என்று கேட்டுக் கொண்டே டாக்டர் கட்டுக்களையும் நாடியையும் பரிசோதித்தார்.

"உடம்பு தேவலீங்க. ஆனால் மனசு தான் சரியில்லை. என்னென்னவோ எண்ணங்கள் தோன்றி மனசு ரொம்பவும் கஷ்டப்படுதுங்க" என்றான் வேலு வெகுளியாக.

டாக்டர் மெல்லச் சிரித்தார். சிரிக்கும் போது முகத்தில் விழுந்த சுருக்கம் அவருக்குக் குறைந்தது நாற்பது வயதாவது இருக்கும் என்று மதிப்பிடத் தோன்றியது. வேலுவுக்கு அவர் கூறிய பதில் அவருடைய ஆழ்ந்த அனுபவத்தைப் பறைசாற்றியது. "எனக்குக்கூடத்தான் மனம் சரியாக இல்லை. நம்முடைய கடமையில் நாம் முன்னேறும்போது கவலைகள் மனத்தைவிட்டுத் தானாகவே அகன்றுவிடுகின்றன. இல்லையா, வேலாயுதம்? நான் சொல்வது சரிதானே?"

"ஆமாங்க......உம்...... ஒரே ஒரு விஷயம் உங்ககிட்டே கேட்கணும், என்னுடைய டாக்ஸியில் பிரயாணம் செய்த அம்மாள்......?"

"விபத்து நடந்த இடத்திலேயே...!"

"என்ன? இறந்துவிட்டார்களா? ஐயையோ, நான் கட்டின கோட்டையெல்லாவற்றையும் இடிச்சுத் தள்ளிப்பிட்டேனே பா...வி!"

"அந்த அம்மாளை உனக்கு எப்படித் தெரியும், வேலு?"

"நல்லாக் கேட்டீங்க, டாக்டர்! அந்த அம்மாளைப் பார்த்துப் பேசக் கொடுத்து வைச்சிருக்கணுமே, டாக்டர். அந்தச் சிரிச்ச முகமும், கொள்ளை கொள்ளும் அழகும்...அது ஒரு தெய்வப் பிறவிங்க. நான் முன்னேயே நினைச்சேன். இத்தனை அழகு ஜ்வாலை விட்டெரியுதே, மனுசனை எரிச்சுடுமேன்னு. ஆனால் அது தன்னையே எரிச்சுக்கிடுத்து. ஒருவேளை அன்னிக்கு அவங்க ரயில்லே போயிருந்தாங்கன்னு ரயிலே கீழே விழுந்து அந்த ஆளு பொசுங்கிப் போனாலும் போயிருப்பாங்க. அது ஆளை எரிக்கும் அழகு!"

"யாரப்பா அந்த மற்றொரு ஆசாமி?" டாக்டரின் குரலில் ஒலித்த நடுக்கத்தை வேலு கவனிக்கவில்லை. அதனால் அவன் எத்தகைய பாதகம் செய்துவிட்டான்?

"அது யாருன்னு தெரியாதுங்க. தினமும் அவங்க சந்திச்சுப்பாங்க. டாக்ஸியிலே திரும்பி வருவாங்க. 'ஆக்ஸிடெண்ட்' நடந்த முந்தின நாள் அவங்க இரண்டுபேரும் 'இனிமே பயந்து பயந்து சந்திக்க முடியாது, ஓடிடுவோம்'னு பேசிக்கிட்டாங்க. டாக்டர், உங்க உடம்புக்கு என்ன?...ஏன் இப்படி உங்க முகம் வெளுத்துப் போச்சு...நர்ஸ், நர்ஸ்!"

"உஸ்...நர்ஸைக் கூப்பிட வேண்டிய அவசியமில்லை. வேலு! உன்னை அறியாமல் நீ எனக்குக் கொடுமை செய்து விட்டாய். நீ கூறிய விஷயங்கள் இதுவரையில் எனக்குத் தெரியாது. தெரியாமலேயே இருந்திருக்கக் கூடாதா என்றுகூட இப்பொழுது தோன்றுகிறது!" இப்படிச் சொல்லிவிட்டு டாக்டர் சட்டென்று எழுந்து வெளியே சென்றார்.

டாக்டர் வெளியில் சென்றதும் நர்ஸ் வேகமாக ஓடி வந்தாள்.

"என்னைக் கூப்பிட்டது நீதானே!"

"ஆமாம்!"

"என்ன வேண்டும்?"

"ஒரே ஒரு விஷயம். என்னுடைய டாக்ஸியில் பிரயாணம் செய்த அந்த அம்மாளை டாக்டருக்குத் தெரியுமா?"

"தெரியும், மிக நன்றாகத் தெரியும்!"

"அவள் யார்?"

"அவருடைய இரண்டாவது மனைவி!"

## தாய்க்கு அடுத்தபடியாக

## குழந்தைக்கு

## க்ரைப்பினால்தான்





யார்தான் சந்தோஷத்தை
விரும்பாதவர்கள்? குழந்தை
உள்பட எல்லோரும்
சந்தோஷத்தை விரும்பு
கிறார்கள் குழந்தைக்கு
தாயின் சீராட்டலும்,
மணி சத்தமும் இன்பத்தை
அளிக்கலாம். ஆனால்
இவை மனதிற்குதான்
சிறிது சந்தோஷத்தை
அளிக்கின்றன.

உடம்பு ஆரோக்கியத்தினால்
சந்தோஷமடைவது
எப்படி? குழந்தைக்கு
தேக ஆரோக்கியமே
நீடித்த சந்தோஷத்தை
கொடுக்கக்கூடியது.
குழந்தைகளுக்கு
வயிற்றுக் கோளாறுகளையும்,
பல் முளைக்கும் சமயத்தில்
ஏற்படும் வயிற்றுப் போக்கின்
உபத்திரவத்தையும் தடுக்க
சக்திவாய்ந்த க்ரைப்பினாலை
எப்பொழுதும்
உபயோகியுங்கள்.

# ஜண்டு க்ரைப்பினால்

**மிகச்சிறந்தது......சக்தி வாய்ந்தது**




ஜண்டு பார்மஸூடிகல்
வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோட் ஸௌத், பம்பாய்-28

ஸ்டாக்கிஸ்டுகள்:
தாமோதர் & கம்பெனி
113, நைனியப்ப நாயக்கன் தெரு
சென்னை - 3

# இப்பொழுது என் உற்சாகத்திற்கு அளவேயில்லை!

வயிற்றுக் கோளாறு
களின்பொழுது

**ஈனோ**

சாப்பிட்டால்
சீக்கிரமே சுகம்
அனுபவமாகும்!






மிதமாக பேதி ஏற்பட விரும்பினால், காலி வயிற்றில் நிறைய பெரிய டோஸ் ஈனோ அருந்தினால் போதும்

அஜீரணக் கோளாறுகளினால் மந்த உணர்ச்சியும், உற்சாகமின்மையும் ஏற்பட்டாலும், மிதமிஞ்சி புசித்தாலும், ஈனோ சாப்பிட்டு நிவாரணம் பெறுங்கள்! ஈனோ சீக்கிரமே வேலை செய்ய ஆரம்பிக்கும். அது வயிற்றிலுள்ள அமித அமிலங்களை அடக்கி, தேக உஷ்ணத்தைத் தணித்து, உங்களை புத்துணர்ச்சியும், உற்சாகமும் பெறச் செய்யும்!

அருந்துவதற்குச் சுகமான ஈனோ அமித அமிலங்களை அடக்கும் சக்தி வாய்ந்தது. அது சிறு குழந்தைகள் முதற்கொண்டு பெரியவர்கள் வரை குடும்பத்தில் யாவருக்கும் ஏற்றது. வயிற்றுக் கோளாறுகள், அஜீரணம் மற்றும் உற்சாகமின்மையிலிருந்து துரித நிவாரணம் பெற ஈனோ சாப்பிடுங்கள்!

## ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' உங்களை தெம்புடன் வைக்கும்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள்
ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்
குருப் லாபரேட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

## அத்தியாயம் 27

## "மேக் - அப்"

விருந்தினர்கள் வந்து கூடும் வரையில் உஷா பொறுமையோடு காத்திருந்தாள். நீதிபதி தம்பதிகள் வரும்போது அவர்கள் வண்டியில் பாபு நிச்சயமாக வருவான் என்று அவள் நம்பி யிருந்தாள். அதே சமயத்தில் உள்ளத்தின் ஒரு கோடியில் அவன் எங்கே வரப்போகிறான் என்ற சந்தேகமும் இருந்து கொண்டேயிருந்தது. கடைசியில் அதுதான் உண்மையாயிற்று. பாபு வரவேயில்லை.

இதன் காரணத்தை அவள் ஓரளவு அறிந்துதான் இருந்தாள். அந்த ஆதாரமற்ற காரணம் அவள் உள்ளத்தை உறுத்தியது. மிஸஸ் மீனாட்சியின் மதிப்பிலே தான் மிகவும் தாழ்ந்து போய் விட்டதாக அவள் எண்ணினாள். பாபு என்ற ஒருவனைச் சில வருஷங்களுக்கு முன்பு பார்த்திராததைப் போல் இனியும் அவன் பார்க்கப் போவதில்லை. ஆனால் இது எத்தனை நாளைக்கு? எப்போதுமே அவனை அவள் பார்க்கப் போவதில்லையா? அப்படி ஆகிவிடுமா, என்ன?

அதை அந்தக் கணத்திலேயே உறுதிப்படுத்திக் கொண்டுவிட எண்ணி அவள் இரண்டு மூன்று முறை டெலிபோனைக் கையில் எடுத்தாள். ஆனால் அது தன் இயல்புக்கு ஏற்றதல்ல என்று உடனேயே வைத்து விட்டாள். அவன் வராததை ஒரு பொருட்டாக எண்ணுவது தவறு என்றும் அவளுக்குப் பட்டது. ஆனால் அந்த உறுத்தல் அவள் மனத்தைவிட்டு நீங்கவில்லையே! அவன் எப்படியோ போகிறான் என்று எண்ணும்போதே அவன்மீது அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவர்களோடு வராவிட்டால் என்ன? அவன் விரும்பினால் தனியாக வரக் கூடாதா? எப்போதும் ஏறி வருகிற சைக்கிள் எங்கே போயிற்று? சைக்கிளே இல்லாவிட்டாலும் நடந்து



கூட வரலாமே! இந்தப் பெரிய மனிதர்களோடு விருந்தில் கலந்து கொள்வதற்காகவா அவனை அவன் அழைத்தான்? ஒரு கோடியில் போய் நின்று நாட்டியத்தைப் பார்த்து விட்டுப் போனால் அவனுக்கு எவ்வளவு திருப்தியாக இருக்கும்! அவனுக்கும்தான் அது எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்! ஒருகால் நடந்து வருவதனால்தான் நேரம் பிடிக்கிறதோ? அப்படியும் இருக்கலாம். எதற்கும் இன்னும் நேரம் இருக்கிறதே! அதற்குள் வராமலா போய்விடுவான்?

உஷாவுக்கு இது நகைப்பைத் தந்தது. இவ்வளவு பிரபலமானவர்களையெல்லாம் விட்டு விட்டு, அவனை எதிர்பார்ப்பதும் அந்தக் கூட்டத்தில் அவன் எங்காவது கண்ணில் படமாட்டானா என்று கவனிப்பதும் அவளுக்கே விசித்திரமாகத்தான்



பட்டது. 'அவனை நான் இவ்வளவு தூரம் எதிர்பார்த்து ஏன் ஏங்க வேண்டும்? அவன் வந்தால் என்ன, வராவிட்டால் என்ன? அவனுக்கு நாட்டியத்தைப் பற்றியெல்லாம் என்ன தெரியும்? ஏதோ ஒரு வீட்டில் ஊழியம் செய்பவன் அவன். நான் பெரிய பாரிஸ்டரின் பெண்; எஜமானனின் மூத்த புதல்வி. அவன் என்ன என் கல்லூரி நண்பனா? பள்ளிக்கூடத்தைக் கூட அவன் மிதித்தறியாதவனாயிற்றே! எனக்கும் அவனுக்கும் என்ன?' என்று முதலில் அவள் எண்ணினாள். ஆனால் சற்றைக்கெல்லாம் வாசலில் சைக்கிள் மணிச் சத்தம் கேட்டதுமே அவள் கண்கள் அவளையறியாமலே அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தன. 'என்ன இருந்தாலும் அவன் நல்லவன்; என்ன இருந்தாலும் அவன் எல்லாரையும் விட மிக மிக நல்லவன்.' உஷாவின் நெஞ்சத்தில் இந்த எண்ணமே சுற்றிச் சுற்றிப் புரண்டுகொண்டிருந்தது.

கூட்டம் கூட்டமாக வளைய வந்து வேடிக்கை பார்க்கும் நடிகர்கள், படாதிபதிகள், பத்திரிகையாளர்கள் என்று பலர் பாரிஸ்டரின் அழைப்புக்கு இணங்கி அந்த வைபவத்துக்கு வந்திருந்தார்கள். உஷாவுக்கு அவர்களையெல்லாம் பார்ப்பதும், அறிமுகம் செய்து கொள்வதும், அவர்களோடு சிரித்துப் பேசுவதும் நல்ல பொழுதுபோக்காகத்தான் தோன்றியது. கௌரவமானதாகவும் சுவாரஸ்யம் நிறைந்ததாகவும் தோன்றியது. அவற்றிலே எவ்வளவுதான் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளப் பார்த்தாலும் இடையிடையே, 'பாபு இவர்கள் இத்தனை பேரைக் காட்டிலும் நல்லவன்; சிறந்தவன்' என்ற எண்ணமே தோன்றிக் கொண்டிருந்தது. அந்த நினைப்பிலிருந்து அவளால் சிறிதும் விடுபடவே முடியவில்லை. 'இது என்ன பைத்தியக்காரத்தனம்!'

ஏதோ ஓர் உறுத்தல் அவளுடைய உற்சாகத்தைக் குலைத்துக் கொண்டே யிருந்தது. வண்ணப் புது ஆடைகள் புனைந்து வண்ணாத்திப் பூச்சிகள் என வந்த பெண்மணிகளும் உயர்ந்த ரக உடையணிந்து கம்பீரமாகத் தோன்றிய ஆண் மக்களும் அவளுக்குச் சலிப்பையே உண்டுபண்ணினார்கள். எதிலும் மனம் பதியவில்லை; எல்லாமே கசந்தது.

"ஏன் குப்பா! பாபுவை இங்கே எங்கேயாவது பார்த்தாயோ நீ?"

"இல்லியே, குழந்தை! அவன் வந்திருக்கிறானா, என்ன?"

"உன் கண்ணில் பட்டானா என்று கேட்டால், என்னையே வந்து திருப்பிக் கேட்கிறாயாக்கும்!"

கொல்லைப் பின் கட்டில் சுறுசுறுப்பாகச் சாமான்கள் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த பொன்னியும் இதே கேள்விக்கு உதட்டைப் பிதுக்கி விட்டாள்.

'அவன் வராவிட்டால் எனக்கு ஒன்றும் மோசமில்லை. அதற்காக நான் கொஞ்சமும் கவலைப்படப் போவதில்லை. படித்தவனாக இருந்திருந்தால் இதெல்லாம் தெரிந்திருக்கும். அழைப்புக்கு மரியாதை காட்ட வேண்டும் என்ற துடிப்பு இருக்கும். பாபுவுக்குத்தான் அந்தக் கலையே சுழிப்பாயிற்றே! படிப்புக்கும் பண்புக்கும் அவன் எங்கே போவான்?' — உஷாவின் உதடுகள் இவ்வாறு முணுமுணுத்தன.

காரில் வந்து இறங்கிய நட்டுவனாரைக் கவனித்து விட்டு அவள் திரும்பியபோது, டெலிபோன் மணியடித்தது. ஏதோ ஒரு நினைப்பில் அவள் ரிசீவரை வேகமாக எடுத்துக் கொண்டு, "ஹலோ!" எனக் குரல் கொடுத்தாள். அவள் நினைத்த படியேகூட நடக்குமா என்ன! அவள் முகம் வியப்பினால் மாறியது.

"யாரு—ஜீஜியா? பாபுதானே பேசறது!" என்று கேட்டான்.

"ஆமாம்!"

"ஏன், இன்னும் நீ புறப்படவில்லையா?"

"இல்லை; நான் வீட்டை விட்டு வருவதற்கு இல்லை. வந்து..."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ வரப்போகிறாய், வரப்போகிறாய் என்று எப்படி எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன், தெரியுமா? வந்து—போய் என்கிறாயே!"

"இல்லை, உஷா...!"

"அந்தச் சமாதானம் எதுவும் எனக்குச் சொல்ல வேண்டியதில்லை. உடனே புறப்பட்டு வா! உடனே. உடனே. உடனே!"

இப்படிச் சொல்லி விட்டு உஷா 'டக்'கென ரிஸீவரை வைத்து விட்டாள். சற்று முன் நினைத்ததற்கும் இப்பொழுது உத்தரவிட்டதற்கும் உள்ள முரண்பாட்டை எண்ணி அவள் மனத்துக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள். அத்தனை உறுதி தனக்கு ஏன் இல்லை என்பது அவளுக்கே புரியவில்லை. இது போன்ற விஷயங்களில் மனத்தைத் தளர விடுவது சரியல்ல என்று கூடவே தோன்றியது. ஆயினும் அந்த டெலிபோன் உரையாடலுக்குப் பிறகுதான் அவள் மனம் இலேசாயிற்று. காற்றிலே பறப்பது போல் அவள் உணர்ந்தாள். எதையோ சரிவரச் செய்து முடித்துவிட்ட நிறைவு அவளுக்கு உண்டாயிற்று.

"என்ன குழந்தை! மேக்-அப் போட்டுக்க வேணுமா?"

"இதோ ஒரு நொடியிலே ரெடி, சார்!" என்று துள்ளிக் குதித்தவாறு ஓடிச் சென்றாள் அவள். அரங்கின் திரைக்குப் பின்னே வைத்திருந்த தம்புராவின் சுருதியை எழுப்புவது போல், 'டொய்ங்' என்று விரலால் மீட்டிச் சுண்டி விட்டு 'கிரீன்-ரூமு'க்குள் ஓடினாள். கெம்புப் பதக்கம் ஒன்றை எடுத்து மார்பிலே வைத்து அழகு பார்த்துக் கொண்டாள். நிலைக் கண்ணாடி முன் மென் கழுத்தை நீட்டி, தன்னையே ஒருவாறு மிரட்டிக் கொள்வது போல், கண்களை உருட்டி விழித்துப் பார்த்துக் கொண்டாள். அரும்பி வரும் புன்சிரிப்பை அடக்கிக் கொள்ளத் தெரியாமல் கண்களைப் படபடவென்று இமைத்துக் கொண்டாள். அடுத்த கணமே எதற்காகவோ தன்னையே நொந்து கொண்டவளாக, தலையில் சூடியிருந்த மல்லிகைப் பூச்சரத்தைப் பிய்ப்பது போல் எடுத்து, மேஜை மேல் விட்டெறிந்தாள். மறு நொடியில் பூக்கள் சிதறிப் பொறி போல் உதிர்வதைப் பார்த்து விட்டுக் கைகொட்டிக் கலகலவெனச் சிரித்தாள்.

அப்போது உள்ளே நுழைந்து வந்த சொக்குப்பிள்ளை, "என்ன குழந்தை, நீயா சிரிச்சுக்கறே?" என்று கேட்டார்.

அவளுக்கு அவமானமாக இருந்தது. "ஒன்றுமில்லே, சார்! பூவைத் தொட்டாலே உதிர்ந்து கொட்டுகிறது, சார்!" என்று கூறியவாறு முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

சொக்குப்பிள்ளை சின்னச் சிரிப்பாக, "நாட்டியத்துக்கு முன்னாலே இப்படித் தான் மனசு பூரிப்பா இருக்கணும். அழுது வடிஞ்சிக்கிட்டே அரிதாரத்தைப் பூசிக்கிட்டா அபிநயமா பிடிக்க வரும்? அழுகைதான் பொத்துக்கிட்டு வரும்! ஆடறவங்களுக்கும் சரி, பாக்கறவங்களுக்கும் சரி. போ போ! பங்கஜம் வந்திட்டா—கைச்சுருக்கா மேக்-அப்பைப் போட்டுக்க!" என்று கூறினார்.

எங்கிருந்தோ ஓடி வந்த சுந்தரி, "எனக்கும் வேஷம் போட்டு விடு!" என்று ஊட்டியடிக்கத் தொடங்கினாள். உஷா அவளைச் சமாதானம் செய்தபோது சொர்ணம்பாள் வந்து கிரீன் ரூமை எட்டிப் பார்த்து விட்டு, குற்றம் குறை எதையும் சொல்லத் தைரியம் வராமல் உதட்டைக் கோணை இழுத்துக்கொண்டு திரும்பிச் சென்றாள்.

"எங்கே அம்மா என்னமோ வந்தாங்க; எட்டிப் பார்த்துட்டுப் போறாங்களே!



தங்கச்சி, நீயும் ஓடு! ஓடு! நல்ல பிள்ளை இல்லே, ஓடு!" என்று சுந்தரியை மெதுவாகப் போகச் சொன்னாள் மேக்-அப் செய்யும் பங்கஜம்.

சொர்ணம்பாள் எதிரே வந்து கொண்டிருப்பதைக் கண்ட பாரிஸ்டர், "என்ன சொர்ணம்! குழந்தை ரெடியாகி விட்டாளா?" என்று மிகுந்த பரபரப்போடு விசாரித்தார்.

"எல்லாம் நீங்களே போய்ப் பாருங்கள், தெரியும்! குழந்தையாம், குழந்தை!" என்று சொல்லி விட்டு, தோள்பட்டையில் இடித்துக்கொண்டு போனாள் அவள்.

கிரீன்ரூமுக்கு வெளியில் இருந்தவாறே, "உஷா!" என்று குரல் கொடுத்தார் பாரிஸ்டர். "என்ன?" என்று ஒரே பாய்ச்சலாகத் துள்ளி ஓடி வந்த உஷா

அவரைக் கண்டதும் சட்டெனத் திகைத்துப் போய் நின்றுவிட்டாள்.

பாபுவின் குரலைப் போல் அல்லவா இருந்தது அவர் அழைத்தது!"நீங்களா?"

"சீக்கிரம் ஆகட்டும், குழந்தை! சீக்கிரம் ஆகட்டும்!" என்று எச்சரிக்கை கொடுத்து விட்டுப் போனார் அவர்.

ஒப்பனை எல்லாம் செய்து கொண்டு ஆபரணங்களை அணிந்தவாறு அவள் கண்ணாடி முன் நின்றபோது, மாடிப் படியிலிருந்து பாபு தனக்குத் தெரியாமல் தன்னைப் பார்ப்பது போல் ஒரு பாவனை உண்டாயிற்று அவளுக்கு. அந்தப் பாவனையிலேயே அவளை வெட்கம் சூழ்ந்து கொண்டது.

விருந்தினர்கள் எல்லாரும் சபையில் கூடிய பின்னர் இசைக் கருவிகள் மங்கள கீதத்தை இசைத்தன. சொக்குப் பிள்ளை சொற்கட்டைத் தொடங்கினார். உஷா ஆடல் அரங்கினுள் நுழையப் போகுமுன் திரைக்கு அருகில் நின்ற குப்பன், "பாபுவைக் கேட்டியே, பின்னாலேதான் தோட்டத்திலே நிக்கிறான்!" என்று கூறினான்.

"தோட்டத்திலே என்ன வேலை? முன்னால் போய் எங்கேயாவது நின்று பார்க்கச் சொல்லு!" என்று போகிற போக்கில் அதட்டலாகக் கூறிவிட்டு அரங்கில் போய் நின்றாள் அவள். பிறகு தாமரை மொட்டுப் போன்ற கைகளில் புஷ்பங்களை ஏந்திக் கொண்டு பூ வந்தனத்துக்குத் தயாராக நின்றாள்.

பாரிஸ்டர் சம்பந்தப்பட்ட வரையில் கண்ணபிரானைப் பெருமைப்படுத்தும் நிகழ்ச்சியாக அது இருக்கலாம்; ஆனால் உஷாவுக்கு அப்படிப் படவில்லை. இவர்களுடைய கற்பனைக்கும் எட்டாத யாரோ ஒருவன் எங்கோ ஒரு மூலையில் நின்று அடையும் மகிழ்ச்சிக்காகவே இவ்வளவும் நிகழ்ந்துகொண்டிருப்பதாக அவள் கருதினாள். தூய உள்ளத்தில் தூய மகிழ்ச்சியை உண்டாக்குவதே கலையின் லட்சியமாக அவளுக்குப் பட்டது.

## அத்தியாயம் 28

# தலைவலி

அலங்கார மேடையில் நின்ற உஷா தெய்வ கன்னிகையைப் போலத்தான் விளங்கினாள். சரத்கால சந்திரனின் எழிலும் தண்மையும் அவளிடம் காணப்பட்டன. சரியான பருவமும் பயிற்சியும் உடைய அவள், நாட்டியமாடுவதற்கு வேண்டிய எல்லா லட்சணக் கூறுகளும் அமையப் பெற்றிருந்தாள்.

நட்டுவாங்கம் செய்த சொக்குப் பிள்ளையையும் பழைய முறையில் ஆடை ஆபரணங்களைப் புனைந்திருந்த உஷாவையும் கண்டு, கூடியிருந்த விருந்தினர்கள் முதலில் என்ன எண்ணினார்களோ, என்னவோ! ஆனால் நாட்டியம் ஆரம்பமாக அலாரிப்புத் துவங்கியதுமே, பளிச்சுப் பளிச்சென மின்னல் ஒன்று வெளிவது போல் தோன்றியது. சொக்குப் பிள்ளையின் குரலில் இருந்த அழுத்தமும் கம்பீரமும், மென்மையும் கனிவும் கொண்ட உஷாவின் நாட்டியத்துக்கு உயர்வும் மெருகும் கொடுத்தன. வெறும் படாடோபத்தையே பார்த்துப் பார்த்துப் பழகிய பலருக்கு மெல்ல மெல்லத்தான் இந்த நாட்டியத்தின் அருமைப் பாடெல்லாம் விளங்கியது; கறை படாத அழகு நன்றாகப் புலப்பட்டது. கலை நுணுக்கம் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் அனைவருமே அலாரிப்பின் சொல்லமைப்பையும் முத்தாய்ப்பையும் கண்டு மூச்சு விடக் கூட மறந்து போய் அயர்ந்து உட்கார்ந்திருந்தார்கள்.

உஷாவுக்குத்தான் எத்தனை அகலமான நீள் விழிகள்! எத்தனை நீளமான மென் விரல்கள்! ஒளியிலே பூத்த புது மலரைப் போல் அவள் ஒசிந்தாடி வந்தாள். அந்த மலரிலே வண்டுகள் இரண்டு மொய்ப்பது போலிருந்தன, அந்தக் கரிய மணி விழிகள். அந்தப் புது மலரின் பூவிதழ்களை நினைவூட்டின மென் விரல்கள். வரி குழற் பின்னல் கால்களில் கட்டிய சதங்கைகளை எட்டிப் பிடிக்கத் தாவியது.

முன் வரிசையின் நடுவே அமர்ந்திருந்த கண்ணபிரான் மர்மங்களைத் தேக்கிய யௌவன வடிவிலே மனத்தை லயிக்க விட்டவாறு தோன்றியதைக் கண்ட ஷீலா, மெல்ல அவன் காதருகே சாய்ந்து வந்து, "இதற்கு முன் இந்தப் பெண்ணைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"இல்லை" என்பது போல் தலையை அசைத்தான் அவன்.

ஷீலா சிறிது விலகி உட்கார்ந்து கொண்டாள். உஷாவின் ஜதிஸ்வரப் பிடிகளையும் கண்ணபிரானின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்த அவளுடைய உள்ளத்தில் அமைதி குன்றியது. அதற்குமேல் இருப்புக் கொள்ளாமல், "நீங்கள் கடைசி வரையில் இங்கே இருக்கப் போகிறீர்களா?" என்று கேட்டாள்.

"ஏன், நாட்டியம் முடிய அதிக நேரம் ஆகாது. ஒரு மணி நேரத்தில் முடிந்து போய் விடும்."

"அது வரையில் நீங்கள் இருந்துதான் ஆகவேண்டுமா?"

"ஆட்டத்தின் நடுவில் நான் எழுந்து போவது மரியாதையல்ல!"

ஷீலாவுக்கு அது முதலில் நியாயமாகவே பட்டது. ஆனால் ஒரு மணி நேரம் அங்கே உட்கார்ந்திருப்பது அவளுக்குப் பெரிய சோதனையாக இருக்கும் போலிருந்தது. அவள் சற்றைக்கெல்லாம், "அப்படியானால் நான் போகிறேன். இன்னும் ஒரு மணி நேரம் இதைப் பார்த்துக்

கொண்டிருக்க என்னால் ஆகாது!" என்று எழுந்திருக்கப் போனாள்.

"லீலா! இதென்ன, அவமரியாதை செய்வதுபோல் நடுவில் எழுந்திருப்பது?" என்று அதட்டினான் கண்ணபிரான்.

"இல்லை; இது எப்படி அவமரியாதை செய்வதாகும்? உங்கள் வரையில் சரி; ஆனால் என்னை அப்படி யாரும் எண்ண மாட்டார்கள்."

"சேர்ந்து போகலாம் என்றுதான் சொல்கிறேன். உட்கார்!"

"அப்படியானால் இப்பொழுதே புறப்படுங்கள்."

"அது எப்படி முடியும், லீலா? நடுவில் போவது மரியாதையல்ல என்கிறேனே!"

"அதையெல்லாம் நீங்கள் பார்த்துக் கொண்டிருங்கள். நான் போகத்தான் போகிறேன்!"

"ஏன், நாட்டியம் நன்றாக இல்லையா?"

"இதெல்லாம் என்ன கேள்வி? கூட வருவதானால் இப்பொழுதே புறப்படுங்கள். இல்லையோ, நான் போகிறேன். அனுமதி கொடுங்கள்!"

அவளுடைய தவிப்புக்குக் காரணம் புரியாத கண்ணபிரான், "ஊஹூம்; உட்கார், சொல்கிறேன்!" என்றான்.

அவன் சொல்லை மீறவும் முடியாமல், அங்கே உட்கார்ந்திருக்கவும் முடியாமல் சங்கடப்பட்டாள் லீலா. ஆனால் சபையோர் பத வர்ணத்துக்கு அபிநயம் முடிந்து உற்சாகமாகக் கைதட்டி ஆர்ப்பரித்த போது, "எனக்குத் தலையை வலிக்கிறது!" என்று அவள் விருட்டென எழுந்து விட்டாள்.

"லீலா!" என்று பல்லைக் கடித்துக் கொண்டு அழைத்தான் கண்ணபிரான்.

ஆனால் லீலா சபையைத் தாண்டிச் சென்ற பின்னர்தான் அவனைத் திரும்பிப் பார்த்தாள். முகத்திலே வரவழைத்துக் கொண்ட புன்னகையோடு சிறிது தயங்கி நின்றாள். அவள் எழுந்ததைக் கவனித்த பாரிஸ்டர் கவலையோடு கண்ணபிரான் பக்கம் திரும்புவதற்குள் அவனும் தலையைக் குனிந்துகொண்டு எழுந்தான்.

"ஏன், ஏன்?" என்று பாரிஸ்டர் அவன் அருகே வந்து பரபரப்போடு கேட்டார்.

"தலையை என்னவோ வலிக்கிறது!"

"அப்படியானால்.....அப்படியானால்...."

"இல்லை; இன்னொரு சமயம் பார்த்துக் கொண்டால் போகிறது. நான் வருகிறேன். அதுதான் விருந்தினர்களை முதலிலேயே பார்த்துப் பேசியாகிவிட்டதே!"

லீலா இதற்குள் தன் வண்டியில் போய் ஏறிக் கொண்டு விட்டாள். அவளுடன் சேர்ந்து போகாதவன் போல் அவன் தன் வண்டியை நோக்கி நடந்தான். பாரிஸ்டர் மெதுவாக, ஆனால் கசப்பு நிறைந்த குரலில், "அதோ லீலாவும் புறப்பட்டு விட்டாள் போலிருக்கிறதே!" என்று கூறினார்.

"பாவம். அவளும் முன்பே போக வேண்டியவள். உஷாவின் நாட்டியத்தைப் பார்க்கவே அவள் இவ்வளவு நேரம் இருந்திருக்கிறாள்!"

கண்ணபிரானைக் கண்டதும், அவனுடைய டிரைவர் புத்தம் புது வண்டியைக் கொண்டுவந்து அவனருகே நிறுத்தினான். பாரிஸ்டர் அதற்குமேல் அவனை வற்புறுத்த விரும்பாமல், "முத்தையாவின் விருப்பத்தை நான் நிறைவேற்றி விட்டேன். ஆனால் நீ கடைசி வரையில் இல்லையே என்று எனக்குக் கொஞ்சம் வருத்தம்தான்!" என்று அவனை வழியனுப்பி வைத்தார்.

முதலில் கண்ணபிரானுடைய வண்டியும் அதைப் பின்பற்றி லீலாவின் வண்டியும் வளைந்து வெளியே சென்று மறைந்தன. அது வரையில் அங்கே நின்று பார்த்துக் கொண்டிருந்த பாரிஸ்டர் தம் வெறுப்பை வெளிக் காட்டிக் கொள்ளாமல் திரும்பி வந்தார்.

"இதென்ன, நீங்களும் கிளம்பி விட்டீர்களா, என்ன?"

பாபுவும் சேகரும் பேசிக்கொண்டு நின்ற பாக்கு மரத்தடியை நோக்கி வந்து கொண்டிருந்தாள் மிஸஸ் மீனாட்சி.

"ஆமாம்; அவசரமான வேலை இருக்கிறது. ஆனால் அவர் கடைசி வரையிலும் இருப்பார்!" என்று சொல்லிக்கொண்டே மிஸஸ் மீனாட்சி பாபுவை நெருங்கி, "சேகர் எங்கே?" என்று கேட்டாள்.

சேகர் நாலைந்து பேர்களுக்கு நடுவே இருந்தான். மிஸஸ் மீனாட்சி, "சரி! நான் முன்னால் போகிறேன்; அவனை அழைத்துக்கொண்டு வண்டிக்கு வா!" என்று சொல்லி விட்டு நடந்தாள்.

"போடா! அம்மா என்னை எதற்கடா அழைத்துக்கொண்டு வரச் சொல்லப் போகிறாள்? எனக்குத்தான் ஸ்கூட்டர் இருக்கிறதே! துணைக்கு உன்னைத்தான் கூப்பிட்டிருப்பாள்! போ, போ!" என்று சொல்லிக் கழித்துவிட்டான் சேகர்.

குற்றவாளியைப் போல், பாபு வண்டியின் முன்புறம் போய் உட்கார்ந்து கொண்டான். சேகரைப் பற்றியோ, அவன் வந்ததைப் பற்றியோ மிஸஸ் மீனாட்சி ஒரு வார்த்தையும் பேசவில்லை.

பங்களாவில் போய் இறங்கியதும், "நீ போய்ச் சாப்பிட்டுவிட்டுப் படுக்கப் போவதற்குமுன் என்னை வந்து பார்த்து விட்டுப் போ!" என்றாள் எஜமானி.

பாபு துணுக்குற்றான். அவன் பயந்தவாறே மிஸஸ் மீனாட்சி அந்த மாதச் சம்பளம் முழுவதையும் ஒரு மாதத்துச் சம்பளத்தோடு சேர்த்து அவனிடம் நீட்டி, "இவ்வளவு நாளும் இந்த வீட்டுப் பிள்ளைகளில் ஒருவனாகவே நீ இருந்து விட்டாய். இனி நீ வேறு இடம் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான். உனக்கு எப்பொழுதாவது, ஏதாவது தேவையாக இருந்தால் தாராளமாக என்னை வந்து கேட்கலாம்!" என்று கூறிவிட்டு வேறு புறம் திரும்பிக் கொண்டாள்.

பாபுவின் கண்களில் நீர் ததும்பியது. அவன் வெகுநேரம் அங்கே நின்று கொண்டேயிருந்தான். ஆனால் மிஸஸ் மீனாட்சி தன் அறையின் கதவைச் சாத்திக் கொண்டு போய்விட்டாள். (தொடரும்)



தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு படுத்தான் கோபி. மனத்தை ஒரு நிலையில் நிறுத்திக் கண்களை இறுக மூடி நித்திரா தேவியின் காலடியில் விழப் பார்த்தான். ஊஹூம், பயனில்லை! இனி இம்மாதிரி எவ்வளவு இரவுகளைப் போக்க வேண்டியிருக்குமோ? சும்மாக் கிடந்த சங்கை ஊதிக் கெடுத்ததைப் போல், 'தான் உண்டு தன் காரியம் உண்டு' என்று இருந்த கோபியை ஒரு கலக்குக் கலக்கி விட்டாள் பத்மினி. அதுவும் அன்று மாலை அவள் கூறிய செய்தி ஒன்றுதான் கோபியைத் தூக்கம் வராமல் செய்தது. இவ்வளவுக்கும் பத்மினியை நேரில் கண்டதில்லை. அவன் அவளிடம் மதிப்பும் மரியாதையும் வைத்தது எல்லாம் 'போன்' வழியாகத்தான்! தினமும் அவன் அவளுடைய குரல் இனிமையில் மயங்கி மதி இழந்திருக்கிறான். அவளுடைய சோகக் கதையைக் கேட்டு மனம் பரிதவிக்க விட்டிருக்கிறான். அவளுடைய கிண்டல் மொழிகளைக் கேட்டு, உள்ளம் பரவசம் அடைந்திருக்கிறான்! ஆம்: எல்லாம் 'போன்' வழியாகத்தான்! குறும்புக்காரப் பெண்தான் பத்மினி!

இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் காலை மணி பன்னிரண்டு இருக்கும். கோபி தன் அலுவலகத்தில் உட்கார்ந்து தீவிரமாக 'டைப்' அடித்துக் கொண்டிருந்தான். நடுநடுவே அவன் கவனம் எதிரே காணப்பட்ட 'டெலிபோன் ரிசீவரி'ல் சென்று கொண்டிருந்தது. அவன் அந்த ஆபீஸின் 'டெலிபோன் ஆபரேட்டரும்' கூட. அவன் வேலை செய்து கொண்டிருக்கும் ஆபீஸ் பெரிய இங்கிலீஷ் மருந்துக் கம்பெனி. அதில் அவன் சுருக்கெழுத்தும், டைப்பும் தெரிந்த ஒரு 'ளார்க்'. அந்த ஆபீஸ் மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசியும் அவன்தான். அதோடு அந்த ஆபீஸில் அவன் ஒரு வரவேற்பாளனும்கூட! யாராவது ஆபீஸ் விஷயமாய் ஏதேனும் விசாரிக்கவோ அல்லது மானேஜரைப் பார்க்கவோ வந்தால் எல்லாவற்றுக்கும் அவன்தான் பதில் அளிக்க வேண்டும்! முக்கியமான எல்லாப் பொறுப்புகளும் அவன் தலையில் விழுந்திருந்தன. ஆனால் எப்போதும் இனிய பேச்சுடனும், சிரித்த முகத்துடனும் இருப்பான். அதனால்தானோ என்னமோ, எப்போதும் அவனிடத்தில் மற்ற சகாக்கள் வெகு அன்போடு இருப்பார்கள்!

ஆனால் அன்று சற்று வேலை அதிகமாய் இருந்த காரணத்தினால் அருகில் இருந்த டெலிபோனிலிருந்து எழுந்த அந்தச் சின்னஞ் சிறு சத்தம் அவன் காதில் சரியாய் விழவில்லை. ஒரு விநாடி 'டைப்' அடிப்பதை நிறுத்தியபோதுதான் அந்தச் சத்தம் அவன் காதில் விழுந்தது. மறு விநாடி டைப்ரைட்டரிலிருந்த அவன் இரு கைகளும் டெலிபோன் இருந்த பக்கம் தாவி ரிசீவரை வேகமாக எடுத்தன.

"என்ன மிஸ்டர், என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? மணி எத்தனை நேரமாய் அடித்துக் கொண்டிருக்கிறது, தெரியுமா?" என்று ஒரு பெண் குரல் மறு பக்கத்துக் கோடியிலிருந்து வந்தது.

"மன்னிக்க வேண்டும். சற்று வேறு வேலையில் கவனமாய் இருந்து விட்டேன். உங்களுக்கு யாருடன் பேச வேண்டும்?" என்று மிகப் பணிவாகக் கேட்டான் கோபி.

"நான் உங்கள் ஆபீஸில் யாருடனும் பேசவேண்டாம். உங்களிடம்தான் ஒரு விஷயம் கேட்க வேண்டும். தயவு செய்து பதில் சொல்வீர்

களா?'' என்று மீண்டும் கேட்டது அந்தப் பெண் குரல்.

''ஓ, தாராளமாய்க் கேளுங்கள். முடிந்தால் சொல்லுகிறேன்!''

''முடிந்தால்தானு? முடியாவிட்டால்?''

''முடியா விட்டால் இல்லைதான்!''

''நீங்கள் ரொம்பக் கண்டிப்பான பேர் வழிபோலிருக்கிறது.''

''ஆமாம், வேலை விஷயத்தில் நான் ரொம்பக் கண்டிப்பானவன்தான். சரி, விஷயம் என்ன?'' என்று கேட்டான்.

''உங்கள் ஆபீஸில் தற்போது ஏதேனும் வேலை காலியாய் இருக்கிறதா? எனக்கு இந்த 'டெலிபோன் ஆபரேட்டர்' வேலை சுத்தமாய்ப் பிடிக்கவில்லை.''

''ஓ, இவ்வளவுதானு விஷயம்! தற்போது எங்கள் ஆபீஸில் வேலை காலி கிடையாது. அப்படி இருந்தாலும்......''

''...இருந்தாலும்....?''

''உங்களுக்குக் கிடையாது!''

''ஏனும்?''

''உங்களுக்கு என்ருல் உங்களுக்கு என்று அர்த்தமில்லை. உங்கள் இனத்துக்கு என்று அர்த்தம். ஏனெனில் எங்கள் கம்பெனியில் பெண்களை வேலையில் வைத்துக் கொள்ளும் வழக்கம் இல்லை.''

''அப்படியா?'' ஏமாற்றத்துடன் ஒலித்தது அந்தக் குரல்.

''என் அதிர்ஷ்டம் எங்கே போனலும் என் கூடவே வருகின்றது.'' இரும்ப அந்தக் குரல் முணுமுணுத்தது.

''அது கிடக்கட்டும். வேறு எங்காவது உங்களுக்குத் தெரிந்து ஒரு 'ஸொர்க்' வேலை காலியாய் இருந்தால் சொல்லுகிறீர்களா? எனக்கு 'டைப்'கூட அடிக்கத் தெரியும்.''

''காதில் பட்டால் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன்'' என்ருன் கோபி. ஒரு வழியாய் அவளுடன் டெலிபோனிலிருந்து அறுத்துக் கொண்டு வந்தால் போதும்போல் இருந்தது.

ஆனல் இப்போது போனில் பேசிக்கொண்டிருந்த அந்தப் பெண்மணி 'கலகல' வென்று நகைப்பது கோபியின் காதில் விழுந்தது.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''ஏனு? காதில் பட்டால் சொல்லுகிறேன் என்றீர்களே? எப்படி எனக்குத் தெரிவிப்பீர்களாம்? நான் எங்கிருந்து பேசுகிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா?''

கோபிக்கு ஒரு முறை 'ஷாக்' அடித்தமாதிரி இருந்தது. ஏதோ அப்போதைக்கு அவளிடமிருந்து தப்பித்துக் கொள்ளவே அம்மாதிரி கூறினன். ஆனல் அவள் விடமாட்டாள் போலிருக்கிறதே!

''சரி, உங்கள் 'போன்' நம்பரைச் சொல்லுங்கள். எங்கேயாவது பெண்களுக்கு வேலை கொடுக்கப்படும் என்று தெரிந்தால் உடனே சொல்லுகிறேன்.''

''பாவம், அந்தச் சிரமம் உங்களுக்கு எதற்கு? நானே உங்களுக்கு இதே நேரத்தில் இரும்ப டெலிபோன் செய்கிறேன், என்ன?''

''ரொம்ப சரி!''

''வந்தனம்!''

'டக்' என்று டெலிபோன் வைக்கும் சத்தமும், மறுவிநாடி தன் டெலிபோனிலிருந்து 'கொர்' என்ற

# குரல்



ரா. கோபாலசாமி

சத்தமும் வந்தவுடன்தான் அவன் ஒரு முறை நீண்ட மூச்சுவிட்டான். பெண்கள் வேலைக்குப் போகும் விஷயம் அவனுக்குப் பிடிக்காது. வீட்டு வேலையைச் சரியாகச் செய்யத் தெரியாதவர்கள் ஆபீஸில் போய் என்ன சாதித்துவிடப் போகிறார்கள்?

மறு நாள் அதே நேரத்தில் டெலிபோன் அலறியது. அவளாகத்தான் இருக்கவேண்டும் என்று நினைத்தவாறே கோபி 'ரிசீவரை'க் கையில் எடுத்தான்.

''குட்மார்னிங்!'' அதே குரல்தான்!

''ஹலோ, நீங்களா? என்ன விஷயம்?''

அன்று கோபி சற்று நிம்மதியாக இருந்தான். தவிர மானேஜரும் எங்கேயோ வெளியில் சென்றிருந்தார். கொஞ்சம் பேச்சு கொடுக்கலாம் என்று எண்ணினான்.

''இன்று காலை பேப்பர் வாசிக்கும்பொழுது கூட உங்கள் நினைவு வந்தது. 'தேவை'ப் பகுதியை ஒரு முறைக்கு இரு முறையாகக் கண்ணோட்டம் விட்டேன். ஆனால் பயன் இல்லை'' என்றான்.

''அப்படியா, உங்கள் சிரமத்துக்கு என் நன்றி. எல்லாவற்றுக்கும் கொடுத்து வைத்திருக்கவேண்டும். ஹூம், என் தலையெழுத்து, ஒரு பெண்ணாய்ப் பிறந்து அவதிப்படவேண்டும் என்று! நானும் உங்களைப்போல் ஓர் ஆணாகப் பிறந்திருந்தால்...!''

''சீசீ, அப்படியெல்லாம்சொல்லாதீர்கள். பெண்ணாய்ப் பிறந்திருக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமாக்கும். பெண்கள் பொறுமையின் இருப்பிடம். அன்பின் சுரங்கம். ஆனால் நீங்கள் இம்மாதிரி சலித்துக் கொள்ளுகிறீர்களே?'' என்றான் அவன்.

''தேவலாம், பெண்கள் மீது இவ்வளவு மதிப்பாவது வைத்திருக்கிறீர்களே!''

''உண்மைதான். எனக்குப் பெண்கள்மீது ரொம்ப மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆனால்....''

''ஆனால் என்ன?''

''ஆனால் அவர்கள் தங்கள் நிலையை உணர்ந்து இருக்க வேண்டும். பெண்கள் எவ்வளவு வேண்டுமானாலும் படிக்கலாம். ஆனால் படித்திருக்கிறோம் என்ற கர்வம், தலைக்கிறுக்கு ஆகியவை கூடாது. அழகாக இருக்கவேண்டும். ஆனால் அழகின் மமதை கூடாது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பெண்கள் உத்தியோகமே பார்க்கக் கூடாது. நல்ல கணவனாகப் பார்த்துக் கலியாணம் செய்து கொண்டால் இவர்கள் ஏன் உத்தியோகத்துக்குப் போக வேண்டும்?''

''பேஷ், பேஷ்! ஒரு பிரசங்கமே அடித்து விட்டீர்களே? உண்மையில் எனக்கும் பத்து ஆண்களுக்கிடையில் போய் உட்கார்ந்து வேலை பார்க்கவே பிடிக்கவில்லைதான். ஆனால் குடும்பம் நடத்த வேண்டுமே?''

''ஏன் உங்களுக்கு அப்பா இல்லையா? இல்லை, சகோதரர்கள் கூட இல்லையா?''

''எனக்கு அப்பா என்று ஒருவர் இருந்திருந்தால் இம்மாதிரி உங்களிடம் பேச்சு வாங்க நேரிட்டிருக்குமா?''

''நான் உங்களை இப்போது என்ன சொல்லி விட்டேன்? பாவம்! பெண்கள் வீட்டில் தான் கிடந்து அவதிப்படுகிறார்கள் என்றால் ஆபீசுக்கு வேறு வந்து ஏன் உடலை விட வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன்தான் சொன்னேன். தயவுசெய்து வித்தியாசமாய் நினைக்காதீர்கள்!''

''நான் ஒன்றும் வித்தியாசமாய் நினைக்கவில்லை. என் விதியைத்தான் நொந்து கொண்டேன். அவ்வளவுதான்!''

''அது சரி, இப்போது உங்கள் குடும்பம் உங்களால்தான் நடக்கிறதா?.... ஆமாம், நீங்கள் நல்ல பண்புள்ளவராய்ப் பார்த்து ஒருவரை...'' கோபியையும் அறியாமல் வந்து விட்டது இவ் வார்த்தைகள்.

''என்ன சொன்னீர்கள்?'' குரல் உஷ்ணமாய் வெளிவந்தது அந்தக் கோடியிலிருந்து.

''இல்லை, இல்லை! தவறாக எண்ணிவிடாதீர்கள். உங்கள் கஷ்டத்துக்கு ஒரு விடிவு ஏற்படும் என்று சொன்னேன்.''

''விடிவு ஏற்படும்தான். ஆனால் என்னை யார் மணக்க முன் வருவார்கள்? நான் ஒரு அனாதை. தாத்தா என்ற முறையில் ஒரு கிழவர் இருக்கிறார். அவருக்கு நான் எல்லாம் இருமுவதற்கும், சுக்குக் கஷாயம் குடிப்பதற்குமே நேரம் போதவில்லை. ஓர் அடி வைத்தால் பத்து நிமிஷம் சுவரைப் பிடித்துக் கொண்டு நின்று விடுகிறார். அப்படி இருக்க நானே போய் வரன் தேட முடியுமா?''

''உங்கள் கதையைக் கேட்கவே கஷ்டமாய் இருக்கிறது.''

''என் முழுக்கதையும் கேட்காமலே இவ்வளவு வருத்தப்படுகிறீர்களே, முழுவதையும் சொன்னால்...?''

''சொல்லுங்கள். எனக்குக் கதை கேட்பதில் ரொம்ப ஆசை.''

''ஆசையைப் பாருங்கள் ஆசையை. இன்னொருவருடைய கதையைக் கேட்பதில் பிறருக்கு ஏன்தான் இவ்வளவு ஆனந்தமோ, தெரியவில்லை.''

''என்னை அப்படியெல்லாம் எண்ணிவிடாதீர்கள். உங்கள் துக்கத்தை நானும் பகிர்ந்து கொள்ளச் சித்தமாய் இருக்கிறேன்.''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம். கேளுங்கள் என் கதையை. என் பெயர் பத்மினி!'' என்று, போனிலேயே கதை சொல்ல ஆரம்பித்து விட்டாள்.

நான் பிறந்து, வளர்ந்து ஆள் ஆனது எல்லாம் ரங்கூன் மா நகரம். என் தந்தை விவாகமானவுடன் தமது மனைவியையும் அழைத்துக் கொண்டு பிழைப்புக்காகப் பிறந்த நாடான இந்தியாவை விட்டு இந்த நகரத்திற்கு வந்து விட்டார்.

ரங்கூனுக்கு வந்தவர் உத்தியோகம் பார்க்கப் பிடிக்காமல் தொழிலில் இறங்கினார். என் தாயின் அதிர்ஷ்டத்தினால் அவர் ஆரம்பித்த தொழில் சூடுபிடித்து இரண்டு மூன்று வருஷங்களில் அவரைப் பல ஆயிரம் ரூபாய்களுக்கு உரிமையாளராக்கி விட்டது. பணம் வந்து விட்டால் மனிதன் குணமும் மாறி விடும்போல் இருக்கிறது. அதுவரையில் என் அன்னை மீது உயிரையே வைத்திருந்த அவர் சிறிது நாட்களாக அவளுடன் ஒரு விதமாகப் பழக ஆரம்பித்தாராம்! இரவும் வீட்டிற்கு நேரம் கழித்து வருவாராம். சில நாட்கள் வராமலே இருந்தும் விடுவாராம். இதற்கெல்லாம் காரணம் பின்புதான் என் அம்மா

# உங்கள் நரம்புகள்

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும்—அதுவும் ஓய்வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்டகாலமாய் மனோபலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக்கூடிய ஒரு உயர்ந்த டானிக்

இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப்போதும் கைவசமாக வைத்திருங்கள்



சிறியோர்

•

முதியோர்

•

நோயாளிகள்

யாவருக்கும்

உகந்தது

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

•

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**ஆர் எல். கௌடர் & கோ.**
59, பந்தர் தெரு - சென்னை

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**சத்ய நாராயணா பார்மஸி**
விஜயநகரம் & குமார் தெரு விஜயவாடா-1





அழகாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
ராஜேந்திர குமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான் தெரு. பம்பாய்-3

## RITESHARP Pens

GHORUPDEV, BOMBAY 10

விற்பனை மற்றும் சர்வீஸ் செய்பவர்கள்:

**ஜெம் அண்டு கம்பெனி**
325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1

# ஹெடன்ஸா




# மூல நோய்க்கு

## எங்கும் கிடைக்கும்

DCZ-12B-TK

*பர்மாவுக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**சுந்தரம் அண்டு கம்பெனி**
358, மொகல் தெரு, ரங்கூன்

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

CHO/6/5

---

## நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனாஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

## சிறந்தது

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனாஸினை' போல் துரிதமாயும் . . . அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோப லட்சம் ஜனங்கள் 'அனாஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும், பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.

வுக்குத் தெரிய வந்ததாம். ரங்கூனில் வேறு யாரோ ஒரு பெண்ணிடம் தம் மனத்தைப் பறிகொடுத்தது மட்டுமின்றி அவளுக்கே அடிமையாகி விட்டாராம். காலப் போக்கில் சரியாகிவிடும் என்று என் தாயும் சிறிது நாட்கள் பேசாமல் இருந்தாள். ஆனால் ஒரு நாள் தம் மனத்துக்கிசைந்தவளைத் தமது வீட்டுக்கே அழைத்து வந்து விட்டாராம்! எந்த மனைவிதான் இதைப் பொறுப்பாள்? அவரிடம் புத்திமதி சொல்லப்போன போது அடியும் இட்டும்தான் கிடைத்தனவாம்! அந்த ஊரில் அவரை அதட்டிக் கேட்க யார் இருக்கிறார்கள்? அப்பொழுது நான் நாலு வயதுச் சிறுமி. என் மீது உயிரையே வைத்திருந்த என் அப்பா அந்தக் கிராதகி வந்ததிலிருந்து என்னை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை.

இதே ஏக்கத்திலேயே என் உயிருக்குயிரான அன்னை படுத்த படுக்கையாகிவிட்டாள். என்ன உடம்பு என்று ஒரு நாள்கூடக் கேட்டதில்லையாம் என் அப்பா. எலும்பும் தோலுமாய் ஆகிவிட்ட அவள் ஒருநாள் என்னை அணைத்துக் கொண்டே கண்ணை மூடிவிட்டாள்! நான் ஒருத்திதான் அன்னையின் பிரிவால் அழுதேன். பிறகு அந்தப் பாதகி வைத்ததுதான் சட்டம்! இரும்புப் பெட்டியின் சாவி அவள் இடுப்பில் தொங்க ஆரம்பித்தது.

பட்டகாலிலே படும் கெட்ட குடியே கெடும் என்பார்களே, அது போல் திடீரென்று ஆரம்பமான இரண்டாவது உலக மகா யுத்தத்தினால் ரங்கூனே ரணகளப்பட்டது. என்றைக்கு ஜப்பான்காரன் குண்டைப் போடுவானோ என்று எல்லோரும் நடுங்கி மூட்டை முடிச்சுகளுடன் இந்தியாவுக்குப் புறப்பட்டனர். என் அப்பாவும் புறப்பட்டபோது அந்தப் பாவி தடுத்து நிறுத்திவிட்டாள். அவள் இந்தியா வர மறுத்துவிட்டாள்! ஒரு நாள் ஜப்பான் விமானங்கள் ரங்கூன் நகரத்தின் மீது கழுகு வட்டமிடுவது போல் வட்டமிட்டன. 'பொல பொல' வென்று குண்டுகளைச் சரமாரியாகப் பொழிந்து விட்டு மாயமாய் மறைந்து விட்டன! ரங்கூன் பிணக்காடாயிற்று. நான் ஒருத்திதான் என் வீட்டில் பிழைத்தேன். என் தந்தையும் பலியாகிவிட்டார்! பிறகு நான் பட்ட கஷ்டம், அப்பப்பா சொல்லி மாளாது. எப்படி இந்தியா வந்தேன், எப்படி என் தாத்தாவைக் கண்டு பிடித்தேன்,

# சிரிக்காதே

## இரந்தும் உயிர் வாழ்தல்!

ஊரில் இவ்வளவு கடன் வைத்துக் கொண்டு இரவில் நன்றாகத் தூங்குகிறீர்களே எப்படி?"

"கடன்காரர்கள் பகலிலேயே வந்து விட்டுப் போய் விடுகிறார்கள். இரவில் வந்து தொந்தரவு செய்வதில்லை!"

## கடைசிப் பேச்சு!

"பணம் பேசும் சார்!"

"ஆமாம்! அது எனக்கு 'டா! டா!' சொல்லி விட்டுப் போய் ரொம்ப நாளாகிறது."

## வ(க்)கரம்

**மனைவி:** என் பாட்டைக் கேட்டு மயங்கிப் போய் இப்பத்தான் நீங்கள் என்னைக் காதலியே என்று அழைத்திருக்கிறீர்கள்!

**கணவன்:** காதலியே என்றா? அட கடவுளே! காதுவலியே என்றல்லவா சொன்னேன்!

## குறுக்கு வழி!

"அப்பா! கடவுளை வேண்டிக் கொண்டால் வேண்டியது கிடைக்குமா?"

"அதில் திடமான நம்பிக்கை இருந்தால் கிடைக்கும்!"

"நீங்க கட்டிக் கொண்டிருக்கிற கடிகாரம் கிடைக்குமா?"

"கிடைக்கும்."

"அப்போ உங்க கடிகாரத்தை எனக்குக் கொடுத்து விட்டு நீங்க வேறு ஒரு கடிகாரத்துக்கு வேண்டிக் கொள்ளுங்க!"

## வேண்டுதல் வேண்டாமை.....

வீட்டுக்குள் சிங்கம் புகுந்தது. வீட்டுக்காரர் பயந்து நடுங்கி மிருகக் காட்சி சாலைக்குப் போன்செய்தார்... "ஹலோ! தப்பித்துக் கொண்டு போனதாக விளம்பரம் செய்த சிங்கம் எங்கள் வீட்டில் இருக்கிறது. உடனே பிடித்துப் போகவும். எனக்கு இனாம் ஒன்றும் வேண்டாம்."

## 'நகை'ச் சுவை

"நீ திருடிய வீட்டில் அதே இரவு மறுபடியும் நுழைந்தாயே ஏன்?"

"என் குடையை விட்டு விட்டுப் போயிட்டேனுங்க"

"திருடிய நகைகள் எங்கே?"

"குடையை எடுக்கப் போகும் போது நகையை அங்கேயே விட்டுவிட்டேனுங்க."

"மறுபடியும் நகையை எடுத்து வர அங்கு போகவில்லையா?"

"இல்லீங்க!"

"ஏன்?"

"மறதியா? குடையை விட்டுவிடுவேனோ என்று பயந்துதான்!"

பிறகு எப்படிப் படித்துப் பட்டம் பெற்றேன் என்பதெல்லாம் பெரிய கதை.

இப்போது நான் இருபத்தொரு வயது அடைந்த ஒரு மங்கை. எப்படியோ இந்த ஆபீஸில் ஒரு டெலிபோன் ஆபரேட்டர் உத்தியோகம் வாங்கிக் கொண்டேன். இப்போது இந்த உத்தியோகமும் பிடிக்கவில்லை. நல்ல உத்தியோகமாக ஒன்றைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இதுதான் என் கதை.

* * *

**ப**த்மினியின் கதையைக் கேட்டதிலிருந்து கோபிக்கு அவளிடத்தில் ஒரு அன்பு ஏற்பட்டு விட்டது. தினமும் ஒரு மணி சுமாருக்கு அவள் போனில் கூப்பிடுவாள். இவனும் அவளிடம் நிறையப் பேசுவான். இப்படியாக அவனைத் தன் குரலாலே பைத்தியமாக்கி விட்டிருந்தாள் அவள்!

கடைசியாக அவள் கூறிய செய்தியைக் கேட்டதும் கோபிக்கு ஒரு ஆட்டம் கொடுத்து விட்டது!

''மிஸ்டர், கோபி! உங்களுக்கு இன்று ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லப்போகிறேன்!'' என்றாள் அவள்.

''என்ன?''

''என்னை நாளை மாலை யாரோ ஒருவர் பெண் பார்க்க வரப் போகிறார்!'' என்றாள் பத்மினி குதூகலமாக.

''என்ன, என்ன!'' கோபியின் குரல் நடுங்கியது.

அப்புறம் அவனுக்கு வேலையே ஓடவில்லை! மனம் கொதித்தது. 'துரோகி போனில் இனிக்க இனிக்கப் பேசி இப்படி ஏமாற்றி விட்டாளே! சட், இனி இந்தப் பெண் இனத்தையே நம்பக் கூடாது!' என்று அவன் மனத்துக்குள் குமைந்தான்.

மாலை மணி ஐந்தரைக்கு டிராயரை இழுத்துப் பூட்டிவிட்டு வீட்டுக்குக் கிளம்ப அவன் தயாரானபோது, மானேஜர் அவனைக் கூப்பிட்டு அனுப்பினார். அவன் இருந்த மனநிலையில் அவருடன் பேசவே பிடிக்கவில்லை! இருந்தாலும் தட்ட முடியுமா?

''உன்னுடன் ஒரு விஷயம் பேச வேண்டும். என்னுடன் சிறிது வீடு மட்டும் வருகிறாயா?'' என்றவர் அவனைத் தம் காரிலேயே வீட்டுக்கு அழைத்து வந்தார். ''மிஸ்டர் கோபி! உன் தகப்பனார் விலாசம் தர இயலுமா?'' என்று கேட்டார்.

''ஏன்?'' என்று கேட்டான் கோபி மென்று விழுங்கிக் கொண்டு.

''என் தமையன் மகள் ஒருத்தி இருக்கிறாள். பி. ஏ. படித்திருக்கிறாள். உனக்கு அவளைப் பிடித்திருந்தால் உன் தந்தைக்கு எழுதலாம் என்பதற்காகத்தான். அவள் என் சொந்த மகள்மாதிரி.''

மானேஜர் இவ்வாறு கூறிக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு வெள்ளித் தட்டில் இரு டம்ளர் காப்பியுடன் ஒரு பெண் வந்தாள். ஒரு விநாடி அவளைப் பார்த்தான் கோபி.

மறு கணம் அவன் தலை சுழல ஆரம்பித்தது! கண்கள் இருண்டன! காரணம் அவளை அவன் இதற்கு முன்பு ஒரு முறை பார்த்திருக்கிறான். மூன்று மாதங்களுக்கு முன்பு ஒருநாள் மாலை கோபி ஆபீஸில் தன் இடத்தில் உட்கார்ந்து தீவிரமாக வேலையில் ஈடுபட்டிருந்தான். அந்தச் சமயத்தில் இள மங்கை ஒருத்தி அவன் எதிரே வந்து நின்றாள். ''நான் மானேஜரைப் பார்க்க வேண்டும்'' என்று கூறினாள்.

''மானேஜரையா? அவர் இப்போது ரொம்ப 'பிஸி'யாக இருக்கிறார். அவரை இப்பொழுது பார்க்க இயலாது'' என்றான் கோபி.

''இல்லை, அவரை நான் பார்த்தே ஆக வேண்டும்'' என்றாள் அவள் விடாப்பிடியாக.

அவளைப் பத்து நிமிஷங்கள் காக்க வைத்து விட்டுப் பிறகே உள்ளே அனுப்பினான் கோபிநாத்.

அதே பெண்தானா இப்போது கையில் காப்பி டம்ளருடன் நிற்பது? ஆகா, என்ன அழகு! இவளைப் போய் யாராவது மணக்க மாட்டேன் என்று சொல்லுவார்களா? நிலவின் கிரணங்களைக் கொண்டு ஒரு பெண்-சித்திரம் வரைந்தால் எப்படி இருக்கும்? அதைப் போலல்லவா இருக்கிறாள்! அழகான உருண்டையான முகம், நீண்ட மூக்கு. அங்குமிங்கும் திரிந்து கொண்டிருக்கும் கருவண்டுக் கண்கள்! எல்லாவற்றுக்கும் மேலாக அவள் வதனத்தில் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும் அந்தக் குறுநகை!

'ஆனால் பத்மினி! அவளை மனத்தினால் ஒரு முறை நேசித்து விட்டோமே. கண்டிப்பாய் இவளை நிராகரித்துவிட வேண்டியதுதான். மணந்தால் பத்மினியை மணப்பது. இல்லையேல் கலியாணமே இல்லாமல் இருந்து விடுவது......'

''பத்மினி! இவள்தானே உன்னை ஒரு முறை என் அறையின் உள்ளே அனுப்ப மறுத்து விட்டான்!'' என்றார் மானேஜர்.

''என்ன! பத்மினியா?'' படாரென்று கோபியின் வாய் பிளந்தது!

அது வரையில் சிரிப்பை அடக்கி வைத்திருந்த பத்மினியால் அதற்கு மேலும் அடக்க முடியவில்லை! அவள் 'குபீ'ரெனச் சிரித்து விட்டாள்!

''மிஸ்டர், கோபி! உன்னை அவள் நன்றாக ஏமாற்றிவிட்டாள்! இதோ இந்த மேஜையில் இருக்கும் டெலிபோனிலிருந்துதான் தினமும் உன்னைக் கூப்பிட்டுப் பேசி ஒரு கதையை அளந்து விட்டு உன்னைப் பைத்தியமாக்கியிருக்கிறாள். ஆனால் அவள் என்னிடம் ஒரு விஷயத்தையும் மறைக்க மாட்டாள். உன்னை ஆபீஸில் பார்த்த அன்றே அவள் உன்னிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டாள். அதற்கு மறுநாளிலிருந்துதான் உன்னைக் கூப்பிட்டுப் பேச ஆரம்பித்திருக்கிறாள். நீயும் அவள் சொல்வதையெல்லாம் கேட்டு ஏமாந்து போயிருக்கிறாய். சரி, இனி விஷயத்தை ரொம்பத் தூரத்துக்கு முற்றவிடக் கூடாது என்றே உன்னை இன்று அழைத்து வந்து விட்டேன். போனில் பேசியது போதும், இனி நேரே பேசிக் கொள்ளுங்கள். எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. சற்று வெளியே போய் விட்டு வருகிறேன்'' என்று கூறி எழுந்தார்.

ஆனால் அவர்கள் இப்போது வாய் திறந்து பேசிக் கொள்ளவில்லை. ஒருவரை யொருவர் கண்களாலேயே விழுங்கிக் கொண்டிருந்தார்.

ஒவ்வொரு மனிதனுக்கும் மனச்சாட்சி இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அந்த உணர்வுக் கண் திறப்பதற்குத் துன்பம் தன்னருகில் வரவேண்டியிருக்கிறது!

# விபத்தும்

கத்தைக் காகிதங்களிடையே ஆவி பறக்கும் காப்பியையும் கவனியாது ஆபீஸ் அலுவலில் மூழ்கியிருந்தேன். ரயில்வே இலாகா ஊழியர்கள் 'டியூட்டி'யில் காயமுற்றாலோ, மரணமடைந்தாலோ நஷ்ட ஈடு அளிப்பது சம்பந்தமான கேஸ்கள் என் பொறுப்பில்தான் இருந்தன.



இடைவேளைக்கு இன்னும் அரைமணி இருப்பதைக் கடிகாரம்தான் தெரிவித்துக் கொண்டிருந்ததே ஒழிய, பல குமாஸ்தாக்களின் ஆசனங்கள் வெறுமையாகிக் கிடந்தன. ஒன்றிரண்டில் கோட்டுப் பிரதிநிதிகள். இருந்த ஒரு சில நபர்களும் அன்றையத் தினசரியை விரிக்கத் தொடங்கி விட்டனர். 'ரயில்வே உத்தியோகமா? சௌகரியமான பொழுதுபோக்கு; சுகவாசிகள்' என்ற கம்பெனி ஊழிய நண்பர்களது பரிகாசச் சொற்களிலும் உண்மை இருப்பதையே எனது செக்ஷன் பிரதிபலித்துக் கொண்டிருந்தது

'நமஸ்தே ஸாப்'-இனக் குரல் ஒலித்த திசையில் ஸோனுவின் மனைவியும் குழந்தையும் நின்றனர். வியர்வை அரும்பிய நெற்றியைச் சுற்றிலும் பரட்டைக் கேசங்கள். ஆபீஸ் கட்டடத்தின் நாற்பது படிகளையும் அந்தக் கர்ப்பிணி பாதயாத்திரை புரிந்தே கடந்திருக்கிறாள் என்பது அவளது பெருத்த சுவாசத்தினின்று தெளிவாகியது. அந்த ஏழைமை உருவுக்கு யார் 'மின்சார லிப்டி'ல் இடம் அளித்திருக்கப் போகிறார்கள்?

"உன்னுடைய கேஸை அதிகாரிக்கு அனுப்பி இருக்கிறேன், அம்மா! அநேகமாக ஒரு வாரத்துக்குள் நஷ்ட ஈடு கிடைத்து விடும். நீ அலைய வேண்டாம்!" என்றேன்.

# விளைவும்

## சுபஸ்ரீ

"மிகவும் கஷ்டமான நிலைமை, ஸாப்! இரண்டாவது குழந்தைக்கு ஒரு வார மாக அனல் காய்கிறது. கடன்காரர்கள் தொல்லை வேறு. தாங்கள் தயவு புரிந் தால் ஆண்டவன் குழந்தைக்கு அருள் புரிவான்." அவளது கண்கள் உகுத்த நீர் என் நெஞ்சைக் கரைத்தது. இரக்கப் பட்டு நான் மட்டும் என்ன செய்துவிட இயலும்? சர்க்கார் இலாகா கேஸ் பட்டுவாடா நிதானமுறைக்கு நான் மாற்றுத் தேட இயலுமா?

"குறைந்த பட்சம் ஒரு வாரம் நிச்சயம் ஆகும். அதற்குப் பிறகு நீ கோர்ட்டில் விசாரித்துப் பார். பணம் அனுப்பி விடு கிறோம்" என்று எனது சக்திக்கு அப்பாற் பட்ட உத்தரவாதத்தைக் கூறி அவளை அனுப்பி வைத்தேன். வயிற்றில் கனத் தைத் தாளாது மெல்ல அடிமேல் அடி வைத்து அவள் நடந்து செல்வதைக் கண்டு என் கண்கள் கசிந்தன.

குடும்பத்தின் சம்பாதிக்கும் அங்கத் தினர் திடுதிப்பென்று மரணமடைந்து விட்டால் எத்தகைய பெரும் பிரச்னை களெல்லாம் ஏற்பட்டு விடுகின்றன!

ஸோனு பம்பாய் டிவிஷன் இன்ஜினீ யரிங் இலாகாவில் வேலை பார்த்து வந்த ஒரு 'காங் - மேட்'. இருப்புப் பாதை செப்பனிடும் பணியில் ஈடுபட் டிருக்கையில் மைல்கள் 87-88ல் கூட்ஸ் வண்டி யால் தூக்கி எறியப்பட்டு மரணமடைந்து விட் டான். மேஸ்திரியின் ஊதுகுழல் எச்சரிக்கை யைக் கேட்டுப் பல தொழிலாளிகள் நகர்ந்து கொண்டபோது, ஸோனு தொழில் உற்சாக வேகத் தில் பாதையை விட்டு நீங்குவதற்குச் சற்றுத் தாமதம் ஏற்பட்டு விட்டது.

அவனுடைய நஷ்டஈடு கேஸ், சம்பந்தப்பட்ட காரியாலயங்களிலிருந்து புறப்படுவதற்குள் பல முனைகளில் பணத்தைத் தளர்த்த வேண்டியிருந்த தாம். இருந்த சொற் பத் தொகையும் இவ் வாறு செல வழிந்து விட, கணவன் ஈந்த கருவையும் தாங்கிக் கொண்டு, அவ னது மனைவி படும் கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. அவன் இறந்து ஒரு சில மாதங்களே ஆனபோதிலும் சமூகக் கட்டுக்களையும் மீறி, சூலின் சிரமங்களையும் பொருட் படுத்தாது ரயில்வே காரியாலயங்களில் காத்துக் கிடந்தாள். விபத்தின் சந் தர்ப்பத்தை ஆராய்ந்து, ரயில்வேயின் பொறுப்பையும், தொகையின் அளவை யும் நிர்ணயிப்பதோடு, கோர்ட்டில் அதனை 'டெபாஸிட்' செய்யும் கடைசிப் பணி எனது காரியாலயமான 'அக் கௌண்ட்ஸ் இலாகா' வினுடையது.

"ஸாப் அழைக்கிறார்." சிப்பாயின் குரலுக்குச் செவி சாய்த்து, அதிகாரி சுப்பிரமண்யத்தின் அறையை அடைந் தேன். எடுத்த எடுப்பிலேயே அவரது குரல் கனத்து ஒலித்தது எனக்கு ஆச்சரி யத்தை அளித்தது.

"மிஸ்டர் சர்மா! ஸோனுவின் கேஸில் 'நோட்டு'ப் போட்டது நீங்கள்தானே? அதன் போக்கு எனக்கு வியப்பை அளிக்



கிறது. ரயில்வே நஷ்டஈடு அளிக்க வேண்டுமென்ற உங்கள் ஆதாரமற்ற கருத்தை என்னால் ஆதரிக்க இயலாது. அவனுடைய அஜாக்கிரதை காரணமாக நேர்ந்த விபத்து என்பது தெளிவு. ரயில்வே எப்படி இதற்குப் பொறுப்பு ஏற்க முடியும்!''

''இன்ஜினியரிங் இலாகா சிபாரிசுகளையும், விபத்தின் போது அருகில் இருந்த சாட்சிகள் கூற்றையும் பாருங்கள். முழுக்க அவனது அஜாக்கிரதையினால் என்று யாருமே முடிவாகக் கூறவில்லை. அந்த அடிப்படையில்தான் எனது அபிப்பிராயத்தை...''

''என்ன ஐயா, அப்படி எளிதாகச் சொல்கிறீர்? இதர இலாகா சொல்வதை அப்படி ஏற்றுக் கொள்ளவா அக்கௌண்ட்ஸ் இலாகா இருக்கிறது? அனுபவம் வாய்ந்தவரிடமிருந்து இத்தகைய குறிப்புக்களை எதிர்பார்க்கவில்லை. இரக்க உணர்ச்சியால் உந்தப்பட்டு, தானம் வழங்குவதற்காக நாம் நியமிக்கப்படவில்லை. உமது கடமையை இன்னும் சற்று விவேகத்துடன் செய்வீர்களென்று நம்புகிறேன்.''

எனது கருத்துக்களின் எதிர்மறையுடன், எனது தன்மானத்தைத் தாக்கிய சொல்லம்புகளைக் கேட்கக் கேட்க என் உள்ளம் குமுறியது.

''மன்னிக்கவும், ஸார்! காருண்ய சித்தத்தோடு கேஸை நோக்கியிருந்த போதிலும் விதிகளுக்கு உட்பட்ட முடிவையே தந்திருக்கிறேன். இது போன்று முடிவு செய்துள்ள சில சமாந்திரக் கேஸ்களை மேற்கோள் கூற இயலும். காயம்பட்ட கேஸ்களில் விதிகளைக் கடுமையாக அனுசரிப்பதில் தவறில்லை. ஆனால் மரணச் சம்பவங்களில் சற்றுக் கருணையோடு விதிகளை அகன்று விமரிசிக்கலாம் என்று 'சட்டமே' கூறுகிறது. மனிதத் தன்மையுடன் நோக்கினால் எனது முடிவு தவிர மாறுபட்ட கருத்துக்கு வர இயலாது!''

''அப்படியானால் என்னை இரக்கமற்ற ராக்ஷஸன் என்று கூறாமல் கூறுகிறீரா? மிஸ்டர் சர்மா! நான் மிகவும் கண்டிப்பான பேர்வழி. இந்தமாதிரி குறிப்பால் நீர் என்னைத் தாழ்த்திப் பேசுவது இது இரண்டாம் முறை. இனி இம்மாதிரி கண்யமற்ற வார்த்தைகளை உதிர்த்தால் உம்மை 'ரிபோர்ட்' செய்ய நேரிடும், ஜாக்கிரதை!''

அவரது படபடப்பையும் மீறிற்று, எனது உணர்ச்சிக் கொந்தளிப்பு. அவர் எனது அதிகாரி என்பதையும் மறந்தேன்.

''ஸார்! வீண் வார்த்தைகள் வேண்டாம். என் வழிச் செல்லும் கேஸ்களில் 'அக்கௌண்டெண்ட்' என்ற முறையில் எனது கருத்துக்களைச் சொல்லி யிருக்கிறேன். உங்கள் அபிப்பிராயத்தையும் அற்புத முடிவையும் தடுப்பாரில்லை. உங்கள் கையில் 'நோட்' இருக்கிறது. எழுத்திலே பேசுங்கள்.''

கனல் கக்கும் இரு விழிகள் என்னை எரித்துக் கொண்டிருந்தன. அவருடைய பதிலை எதிர்பாராமல் பளிச்சென்று அறையை விட்டு வெளியேறினேன். 'இந்த அகம்பாவம் பிடித்தவனைத் தீர்த்துக் கட்டுகிறேன் பார்' என்று அதிகாரி கறுவிய சொற்கள், ஆடிய வண்ணம் இருந்த ஸ்பிரிங் கதவுகளின் கிரீச் சொலியையும் மீறி என் காதுகளில் வந்து விழுந்தன.

•  •  •

அதிகாரி சுப்பிரமண்யம் கறார்ப்பேர் வழி என்பது உண்மைதான். 'ஆமாம்' போடாமல், மேலதிகாரிகள் வீட்டுப் பணிக்குத் தோள் கொடுக்காமல், சொந்த உழைப்பால் குமாஸ்தா பதவியினின்று அதிகாரி பதவியை அடைந்தவர் என்பது வாஸ்தவம்தான். ஆயினும் இந்தச் சிறு விஷயத்தில் இவ்வளவு கண்டிப்புக்கும், உஷ்ண வார்த்தைகளுக்கும் இடமில்லையே! 'குழந்தை குட்டி இல்லாதவனுக்கு நெஞ்சிலே ஈவு இரக்கம் இருப்பதில்லை என்பது எவ்வளவு நிதரிசனம்' என்று மனோதத்துவ ரீதியில் அன்றைய நிகழ்ச்சிக்குக் காரணம் கற்பிக்கத் தொடங்கியது என் மனம்.

'இப்படிப் பொரிந்து தள்ளி விட்டோமே. ஸோனுவின் கேஸில் கோபத்தோடு அதிகாரி வேறு விதமாக எழுதி விட்டால்...! கொஞ்சம் பொறுமையுடன் நடந்து கொண்டு விஷயத்தை விளக்கி இருந்தால் அவரும் வழிக்கு வந்திருப்பாரோ?' இவ்வாறு அசை போட்டது என் மனம்.

''கிடக்கு விடுங்க ஸார்! மனுஷன் வெற்றிலைச் செல்லத்தை எடுத்துவர மறந்திருப்பார். அதுதான் இவ்வளவு கடுப்பு. வாருங்கள், காண்டீன் சென்று ஒரு 'கப்' காப்பி சாப்பிட்டு வரலாம். இடைவேளை வேறு வந்து விட்டது'' என்று ஸ்டெனோ ராமச்சந்திரன் அழைத்தான். அதிகாரியின் நெளிவு சுளிவுகளை அவனைவிட நன்றாக உணர்ந்தவர் யார்?

பேரல் ரயில்வே காண்டீனில் அது கெடுபிடியான நேரம். அங்குள்ள சிற்றுண்டிகளை வாங்குவதை விட, தாங்கள் சுமந்து வந்த டப்பாக்களைப் பிரித்து, ஆறஅமர வீட்டுப் பலகாரங்களை விழுங்கி விட்டு அரை கப் தேநீர் பருகிச் செல்லும் நபர்களின் எண்ணிக்கைதான்

# ஸாண்டோஸ்

# காப் ஸிரப்

## இருமலுக்கு இதமளிக்கிறது

இருமல்—ஜலதோஷ நிவாரணமாக, இயற்கையன்னை அளித்தருளிய வைத்திய மூலிகைகளுள் மிகவும் கைகண்ட மூன்று மூலிகைகளில் இருக்கும் அதே சத்துக்கள், விஞ்ஞான முறையில் ஒன்றுசேர்ந்த நவீன மருந்தே ஸாண்டோஸ் காப் ஸிரப்.

தொண்டையிலுள்ள இரணவீக்கத்தை சட்டென்று கண்டித்து இதமளிப்பதற்கான மூலிகை பாபாவேர ஸோம்னிவேரோம்; கட்டிப்போன கபத்தைக் கரைத்து, வெளியேற்றிவிட உதவுவதற்கான மூலிகை ஸெபைலிஸ் இபெகாகுவான்ஹா; மூச்சடைப்பு வேதனையை அதிவிரைவில் தணித்துவிடுவது எபேத்ரா என்ற 'இளைப்பாற்றும்' சக்தியுள்ள மூலிகை;—ஆகிய மூன்று சத்துக்களும் இதில் இணைந்துள்ளன.

அதனுல்தான் ஸாண்டோஸ் காப் ஸிரப், டாக்டர்கள் குறித்துக் கொடுக்கும் மருந்தாக விளங்குகிறது. மேலும், செர்ரிப் பழம் போன்ற அதன் இனிப்பை குழந்தைகள் பெரிதும் விரும்புகின்றனர்.

ஸ்விஸர்லந்து நாட்டு ஸாண்டோஸ் ஆராய்ச்சி சாலையின் மருந்துச் சரக்கு.







BCS.P. 2-50 TM.

அதிகம். அதிலும் பெண் குமாஸ்தாக்கள் கூட்டம் கோடி மேஜையருகே இருக்கும் வரை, வாலிபக் குமாஸ்தா கோஷ்டி காண்டீனைக் காரணமின்றி, சிற்றுண்டிகளுக்கும் செலவின்றி, மொய்த்துக் கொண்டிருக்கும்.

ஆடிட்டர் சர்மா அமர்ந்திருந்த மேஜை அருகே இரு நாற்காலிகள் காலியாக இருந்தன. அங்கு அமர்ந்தோம்.

"காப்பி சொல்லிப் பத்து நிமிஷமாகிறது. அதிலும் 'டிரே காப்பி' சொன்னால் இந்த ஜன்மத்துக்கு வரமாட்டார்கள்" என்று அலுத்துக் கொண்டார். அவருக்கு 2-10 மணி மின்சார வண்டியைப் பிடித்து வி. டி. சென்று பிரதம ஆபீஸில் சில அலுவல்களை அன்று பார்க்க வேண்டியிருந்தது.

"மானேஜர்! ஒரு கப் காப்பிக்காக இவ்வளவு நாழி தவசு இருக்கணுமா?"

கிளீனர் பையன்தான் டேபிள் மீது கண்ணாடி டம்ளரில் தண்ணீரை வழங்கிக் கொண்டிருந்தான். ஸர்வரின் உற்சாகமான கவனிப்பு நாரீமணிகள் பக்கம்.

"ஸார்! ரயில்வே திறமையுடன் இயங்க வேண்டுமென்றால் இந்தச் சேலை கட்டிய மாதரை நியமிப்பதை நிறுத்த வேண்டும்" என்றார் ராமச்சந்திரன். தனக்குப் பிறகு நியமனம் செய்யப்பட்ட சுருக்கெழுத்துப் பார்ஸி பெண்மணிக்கு மிகத் துரிதமாக உயர்ந்த 'கிரேடு' கிடைத்ததைக் கண்டு அவர் அங்கலாய்க்காத நேரம் கிடையாது.

"உங்கள் வாக்கை வேதமாக நம்பித்தான் கவுன் போட்ட விந்தி திரத்துச் சுந்தரவல்லிகளை நியமிக்கிறார்களோ!"

"அப்படிச் சொல்லாதீர்கள். அவர்கள் உத்தியோகம் பார்க்கத் தொடங்கிய பின்னர் ஆடவர்களிடம் அதிகாரி உட்பட உடைத்தோற்றம் யாவுமே கவர்ச்சிகரமாக மாறி விட்டது வரவேற்கத்தக்க மாறுதல்தானே!"

ஆடிட்டர் பொறுமை இழந்தார்.

"பாருங்கள் ஸார்! ஒரு சொந்த ஹோட்டலில் கூட்டம் அதிகமாக இருக்கும் சமயத்தில் இப்படிச் சுணக்கமாகப் பரிமாறுவதைக் காணமுடியுமா? வெளியிலே போனால் இந்தப் பயல்களுக்கு இருபது ரூபாய் சம்பளம் கிட்டாது. அதற்குப் பம்பரமாக உழைக்காவிடில் முதலாளி சீட்டைக் கிழித்து விடுவான். இங்கு குமாஸ்தா போன்று சம்பளமும் பாஸும் கிடைக்கின்றன. கொஞ்சமாவது சிரத்தையுடன் வேலை செய்கிறார்களா? வாங்குகிற சம்பளம் ஜீரணமாகுமா?"

"அதுதான் அவர்கள் தயாரிக்கும் பண்டமும் நமது வயிற்றுள் ஜீரணமாவதில்லை!" என்றார் ஒருவர்.



சிங்கப்பூர் ஸ்ரீ என். எல். பெருமாளின் புதல்வியர் குமாரிகள் பி. மல்லிகா, பி. ஜானகி ஆகியோரின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் குடந்தை நகர உயர்நிலைப் பள்ளி கலைக் கழகத்தின் ஆதரவில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

"மானேஜர்!"

சர்மாவின் அதிர்ச்சி தரும் குரலைக் கேட்டு அந்த ஹாலில் உள்ள யாவரும் திரும்பினர்.

"எங்கே அந்தக் 'கம்பிளெயின்ட்' புஸ்தகம்?"

அந்த மந்திரச் சொல்லைக் கேட்டதும் மானேஜர் பறந்தார். கொண்டு வந்தது புஸ்தகமல்ல; காப்பியும் கோப்பையும். அவசரம்அவசரமாகக்காப்பியைக் கலந்து அருந்தினார் சர்மா. மானேஜரின் விநய வேண்டுகோளையும் லட்சியம் செய்யாது, குறைபாடுகளைக் குறிக்கும் புஸ்தகத்தை வரவழைத்து ஊழியர்களின் தாமதத்தைப் பற்றிக் காரசாரமாக வரிந்து தள்ளினார். கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே நாழிகை ஆகிவிட்டது என விரைந்தார்.

மானேஜர் வெறுப்பை உமிழ்ந்து கொண்டிருந்தார்.

"என்றைக்கும் தகராறு; குற்றம் படிப்பதே தொழில். மனுஷன் எதற்காக இவ்வளவு அவசரப்பட்டு ஓடுகிறார்? சிறிது நிதானமாக இருந்து காப்பி சாப்பிட்டால்தான் என்ன?"

அவர் அவசரம் யாருக்குத் தெரியும்?

ஸ்டேஷனை அணுகுவதற்காகச் சுற்று வழியான ரோடு மார்க்கமாகச் செல்லாமல், இருப்புப் பாதை வழியே குறுக்காக நடந்தார் சர்மா. அப்போதைய ஆத்திரத்திலும் அவசரத்திலும் தாம் கடந்து கொண்டிருந்த 'மெயின் லயனி'ல் ஒரு துரித வண்டி வருவதை அவர் கவனியாமல் இல்லை. விரைந்து கடந்தார். ஆனால் எதிர்த் திசையில் அவருக்குப் பின்புறத்தில் மற்றுமொரு 'ஸுபர்பன்' வண்டி

**கல்கி**

**சந்தா விகிதம்**

| | ஒரு வருஷம் ரூ. ந. பை. | ஆறு மாதம் ரூ. ந. பை. |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | 16—00 | 7—50 |
| பர்மா, மலேயா, வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 நயா பைசா

சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும். வி.பி.பி. கிடையாது. இலங்கை நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தா தொகையைச் செலுத்தலாம்.

மானேஜர்: கல்கி காரியாலயம், சென்னை-10


வருவதைக் கடைசி நிமிஷத்தில்தான் உணர்ந்தார். பதற்றத்துடன் அவர் கடக்க முயலுகையில் கைகாட்டிக் கம்பிகள் காலில்சிக்க அவ்வளவுதான், ஐம்பது கஜ தூரம் வரை அவரது உடலின் அங்கங்கள் சிதறிக் கிடந்தன. இது நடந்த சில நிமிஷங்களுக்கெல்லாம் காண்டீனில் செய்தி எட்டி விட்டது.

'அடப்பாவி மனிதா !' என்று விளித்த மானேஜர் பணப் பெட்டியை இழுத்து மூடிவிட்டு விழுந்தடித்துக் கொண்டு விபத்து நடந்த ஸ்தலத்துக்கு விரைந்தார். சாவின் நிழலிலே, சர்மாவின் பேரில் அவருக்கு இருந்த வெறுப்பெல்லாம் கணத்தில் கரைந்து விட்டது.

அவர் கடைசியாக எழுதிச் சென்ற குறைகள் ஏட்டில் இன்னும் மை உலரவில்லை. காலத்தின் அருமை தெரியாத சிப்பந்திகள் என்று குறிப்பிட்டிருந்தார். ஆனால் காலத்தின் அருமை தெரிந்தவரைக் காலன் இவ்வளவு அகால மரணத்துக்கு ஆளாக்கி விட்டான் !

'மனிதனுக்கு எதற்காக இவ்வளவு அவசரம்?' என்று கேட்ட மானேஜரின் குரல் என் காதுகளில் மீண்டும் ரீங்கரித்தது. வாஸ்தவம்; சாவைச் சந்திப்பதற்குத்தான் அவர் இவ்வளவு அவசரப்பட்டு விட்டார். அவசரத்தின் காரணமாக ஏற்பட்ட விபத்தா, அல்லது விதியின் பயனாக விளைந்த அவசரமா என்பதை நம்மால் எவ்வாறு நிர்ணயிக்க இயலும் ! கூற்றுவன் குரல் கொடுக்கும் போது அந்த அழைப்புக்கு யார்தான் ஆறஅமர இருந்து நிதானிக்க முடியும் !

* * *

போலீஸ்காரர்கள் வந்து விசாரணை நடத்திக் கொண்டிருந்தார்கள். சர்மாவின் சிதைந்த உடலைக் கடைசி முறையாகத் தரிசனம் செய்து விட்டு மீண்டும் எனது ஆசனத்தை அடைந்தேன். சர்மாவின் நினைவு சற்று மங்கி லோனுவின் குடும்பம் மனவெளியில் தோன்றியது.

'ஸாப்! ஆபீஸர் புலாதா ஹை !' சிப்பாயின் குரல் எனக்கு எரிச்சலை மூட்டியது. எமனின் அழைப்பைத் தவிர்த்தாலும், நான் ஓயாது இந்த அதிகாரிகளின் அழைப்புக்குத் தப்பிக்க இயலாது போலும். காரியாலயமே சர்மாவின் திடீர் மறைவால் அமர்க்களப்படுகிறதே. இந்த அதிகாரி அறையை விட்டு வந்து கொஞ்சமாவது விபத்தைப் பற்றி விசாரிக்கிறாரா? உலகமே புரண்டாலும் அலுவலே அவர்களுக்கு லட்சியம். மனிதத் தன்மை அற்றவர்களைத் தேடித்தானே இத்தகைய உத்தியோக உயர்வும் வந்தடைகிறது ! முற்பகல் விளைந்த சம்பாஷணையின் விளைவு எந்த வடிவில் வரப் போகிறதோ என்ற அச்சம் உலை உறுத்த அவரது அறையைச் சென்றடைந்தேன்.

"மிஸ்டர் சர்மா! வாரும் உட்காரும்."

இந்த ஆசனமளிப்பும், மரியாதையும் என்னைத் தூக்கிவாரிப் போட்டன.

"யாரோ வந்து சர்மா ரயிலில் அடிபட்டு வீழ்ந்து விட்டார் என்று சொல்லி விட்டார்கள். நெஞ்சு கலங்கி விட்டேன். க்ஷணக் கோபத்தில் நான் ஏதோ சொல்லி விட்டேன் என்பதனால் உணர்ச்சி வசப்பட்டு, தங்கள் அஜாக்கிரதையால் நேர்ந்து விட்டதோ என்ற ஐயப்பாடு எனக்கு. ஐயோ, அந்த மாதிரி ஏதாவது நிகழ்ந்திருந்தால் என் மனச்சாட்சி என்னைக் கொன்றிருக்கும். அப்புறம் யாரோ வந்து விவரங்கள் கூறிய பின்னர்தான் எனக்கு உயிர் வந்தது. உம்மை மீண்டும் பார்த்த பிறகுதான் எனக்குத் திருப்தி ஏற்படும் போல இருந்தது. அதற்காகத்தான் அழைத்தேன். உண்மையிலேயே சில நிமிஷங்கள் நாடி இழந்து விட்டேன் !" என்றார் அவர்.

எனது மெய்யெல்லாம் விதிர்த்து நின்றது. உள்ளம் நெக்குருகியது. சில நிமிஷங்கள் முன் வரை எனது அபிப்பிராயத்தில் இரக்கமற்ற கொடிய விலங்காக விளங்கிய அதிகாரி சுப்பிரமணியம் இப்போது அருள்வடிவாக என் புலத்தையெல்லாம் மறைத்து நின்றார்.

* * *

அன்று மாலை லோனுவின் கேஸ் திரும்பி வந்தது. எனது விளக்கத்துக்குத் தமது பரிபூரண ஆதரவை நல்கி யிருந்தார் அதிகாரி சுப்பிரமணியம்.


Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

வியப்பூட்டும்
சலவைப்
பவுடர்




விலை:
பெரிய
சைஸ்
ரூ. 2/19 ந.பைசா,
சாதாரண சைஸ் ரூ. 1/12 ந.
பைசா; (பிரதேச
வரிகள் உள்ளிட்டாமல்)

# நீலநிற ஸர்ப்

## உங்கள் துணிகளின் வெள்ளைவெளேரென்ற சலவைக்கு

கற்பனை செய்திருக்க மாட்டீர்கள் அற்புத சலவைப் பவுடராகிய ஸர்ப் போன்று மகத்தான வெண்மை தரும் பவுடர் ஒன்றை!

பார்த்திருக்க மாட்டீர்கள் இது போன்று அற்புத நுரை கொழிக்கும் சாதனம் ஒன்றை! எத்தனைய சீதும் வெள்ளை வெளேர்க் கொழித்தெழும் நுரைவளம்!

உணர்ந்திருக்க மாட்டீர்கள் சலவை இவ்வளவு எளிதென்று! சிரமமே கிடையாது: ஊறவிட்டுக் கசக்கி அலசினாலே காரியம் ஆயிற்று!

அடைந்திருக்கவே மாட்டீர்கள் உங்கள் பணத்திற்கு இதுபோன்ற அற்புதமான ஈடு! உங்கள் குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது!

வெள்ளைவெளேரென்ற சலவைக்கு—ஸர்ப்

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

SU. 25-X29 TM

REGISTERED No M. 4392
Registered as a Newspaper in Ceylon

